விவேகானந்த சுவாமிகள் இயற்றிய

# பக்தியோக விளக்கம்





விளக்கியவர்
சுவாமி சித்பவானந்தர்

## ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ

*தொகுத்தவர்*
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் பக்தர்களோடு உரையாடிய சம்பாஷணைகளினின்று பொறுக்கி எடுத்த 1426 உபதேசங்களைக் கொண்டது இப்புத்தகம். பகவத்கீதையைப் பின்பற்றி மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் பகுதியில் ஜீவாத்ம தத்துவமும் கர்மயோகமும் ராஜயோகமும் விளக்கப் பெறுகின்றன. இரண்டாவது பகுதியில் ஈசுவரன் அல்லது சகுணப்பிரம்ம தத்துவமும் பக்தியோகமும் விளக்கப்பெறுகின்றன. மூன்ருவது பகுதியில் நிர்க்குணப் பிரம்ம தத்துவமும் ஞானயோகமும் விளக்கப்பெறுகின்றன. அதிகம் பொருள் வசதி இல்லாதவர்களும் இதை வாங்கிப் படித்துப் பயன் பெற வேண்டுமென்ற நோக்குடன் ரூ. 5-00 விலையுள்ள இப்புத்தகம் ரூ. 2-75க்குத் தரப்பெறுகிறது.

கிரௌன் சைஸ்

*பக்கம் 360* *பிரசார விலை ரூ. 2-75*

*( தபாற் செலவு ரூ. 2-40 )*

*ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்*
*திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா*

விவேகானந்த சுவாமிகள் இயற்றிய

# பக்தியோக விளக்கம்



प्रज्ञानं ब्रह्म

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

முத்தமிழ்ப்பண்ணை
7.11.78

# பக்தியோக விளக்கம்

(விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தழுவியது)


விளக்கியவர்

சுவாமி சித்பவானந்தர்






ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை—639 115

திருச்சி ஜில்லா

1976

தபோவனத் தொடர் 54

முதல் பதிப்பு 1959
இரண்டாம் பதிப்பு 1976

திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
காரியதரிசியால் பிரசுரிக்கப்பட்டது



விலை ரூ. 6-00

தபோவன அச்சுப்பள்ளி, திருப்பராய்த்துறை

# பொருளடக்கம்







# பக்தியோக விளக்கம்

## 1. பக்தியின் லக்ஷணம்

பக்தியின் மூலமாகப் பகவானை மனப்பூர்வமாக நாடுகிற நாட்டத்துக்கு பக்தியோகம் என்று பெயர். அத்தகைய நாட்டம் பக்தியில் துவங்குகிறது, பக்தியிலேயே அது தொடர்ந்து மேல் நோக்கிப் போகிறது, பக்தியிலேயே அது முற்றுப் பெறுகிறது. பக்தியில் மனிதன் மேல் நிலைக்குப் போகக்கூடுமானால் அது பித்தம் பிடித்தது போன்று தென்படும். ஒரு கணப்பொழுதுக்காவது மனிதனுக்குக் கடவுள் பித்தம் பிடித்து விடுமாகில் அவன் முக்தியைப் பெறுவது திண்ணம். அப்படி அவன் பெற்றமுக்தியைப் பிறகு ஒருபொழுதும் இழந்துவிடுவதில்லை. பக்தியின் பாங்கு எத்தகையது என்பதை நாரதமகரிஷி தாம் இயற்றியுள்ள பக்தி சூத்திரங்களில் விளக்கியுள்ளார்.

सा त्वस्मिन् परमप्रेमरूपा ॥

ஸா த்வஸ்மின் பரமப்ரேமரூபா

அப்பக்தியானது பரமப் பிரேம ரூபமாய் இருக்கிறது. பிரேமை என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். இறைவனுடைய அருளை முழுமனதோடு நாடி யிருப்பதுதான் பிரேமை பக்தி. பக்தியை இன்னும் ஒரு விதத்தில் நாரதர் விளக்குகிறார்.

यत्प्राप्य न किञ्चिद्वाञ्छति न शोचति ।
न द्वेष्टि न रमते नोत्साही भवति ॥

யத்ப்ராப்ய ந கிஞ்சித்வாஞ்சதி ந சோசதி
ந த்வேஷ்டி ந ரமதே நோத்ஸாஹீ பவதி

பக்தியை அடையப் பெற்றன பிறகு வேறு ஏதேனும் ஒன்றைப் பெறவேண்டுமென்று பக்தன் நாடுவதில்லை. தனக்கு ஏதாவது பொருள் நஷ்டம் வந்துவிட்டது என்று அவன் துயரப்படுவதில்லை. உலகில் எதையும் வெறுப்பதில்லை. உலகப் பொருள்களிடத்து விருப்பமும் உண்டாவதில்லை. பஞ்சேந்திரியங்கள் மூலமாக நுகரப்படும் பொருள்களைக் குறித்து அவன் ஊக்கம் கொள்வதில்லை.

सा न कामयमाना निरोधरूपत्वात् ।

ஸா ந காமயமானா நிரோதரூபத்வாத்

உலக ஆசைக்குச் சிறிதேனும் பக்தியில் இடமில்லை. ஏனென்றால் உலக ஆசைகளை யெல்லாம் துறந்து விடுகின்ற இயல்புடையதாய் அது இருக்கிறது. இந்த பக்தி உரு எடுக்கின்ற பொழுது பக்தன் உயிர்கள் அனைத்தையும் நேசிக்கின்றான். எதனிடத்தும் அவனுக்கு வெறுப்பு இல்லை. பக்தியிலேயே பரம திருப்தி அடைந்தவனாக அவன் ஆகின்றான். இவ்வுலக சம்பந்தமானது எதையும் பெறுதற்காக வென்று பக்தனிடத்து பக்தி உண்டாவதில்லை. ஏனென்றால் சிறிதளவாவது உலக ஆசை மனிதனுடைய உள்ளத்தில் இருக்குமாகில் அவ்வுள்ளத்தில் பக்தி பெருக்கெடுப்பதில்லை.

सा तु कर्म ज्ञानयोगेभ्योऽप्यधिकतरा ॥

ஸா து கர்ம ஞானயோகேப்யோऽப்யதிகதரா

இந்தத் தூயபக்தியானது கர்மம், ஞானம், யோகம் ஆகிய வைகளைவிட மிக மேலானது. இந்நெறிகளைக் கையாளுகின்ற சாதகர்களுக்கு முறையே பக்தியோகி, கர்மயோகி, ஞானயோகி, ராஜயோகி என்கின்ற பெயர்கள் வந்து அமைகின்றன. கர்மயோகம், ஞானயோகம், ராஜயோகம் ஆகிய மூன்றும் பரிபூரண நிலையை அடைதல் என்பதைக்

குறியாகக் கொண்டிருக்கின்றன. ஆதலால் அம்மூன்று யோகங்களும் அந்தக் குறிக்கு ஆகிய நெறிகள் ஆகின்றன. வேறு ஒரு முறையில் பகருமிடத்து பரிபூரணநிலை என்னும் குறியை நோக்கிச் செல்லும் நெறிகளாகக் கர்மமும், ஞானமும், யோகமும் அமைந்திருக்கின்றன. ஆனால் பக்தியிலோவெனில் அதனிடத்துக் குறியும் நெறியும் ஒன்றுபட்டு இலங்குகின்றன. பக்தியைப் பெறுவதிலேயே பக்தியோகி திருப்தியடைகிறான். ஒரு பரிபூரண நிலையை நாடித் தான் பக்தி பண்ணுவதாக அவன் உணர்வதில்லை. ஆகையினால்தான் பக்தி சாதனத்தில் துவக்கம் என்றும் மேல் நோக்கிப் போதல் என்றும் முடிவான நிலையை அடைதல் என்றும் பாகுபடுத்துதற்கு ஒன்றுமில்லை. அதற்குத் துவக்கம் எது என்றும், முடிவு எது என்றும் அறுதியிட்டுச் சொல்ல முடியாது. பக்தன் ஒருவன் அன்பில் அன்பாய் அமர்ந்து ஆனந்தமுறுகிறான்.

சான்றோர்கள் அனைவரும் பக்தி ஒன்றையே மாறாத குறிக்கோளாகக் கொண்டுள்ளார்கள். சாண்டில்யர், நாரதர் போன்றவர்கள் பக்தி ஒன்றையே சிலாகித்துத் தங்களுடைய நூல்களில் சொல்லியிருக்கின்றனர். வியாசபகவான் இயற்றியுள்ள வேதாந்த சூத்திரங்கள் என்னும் நூல் ஒன்று இருக்கிறது. அதற்குப் பிரம்ம சூத்திரங்கள் என்பது மற்றொரு பெயர். அந்நூல் ஞானத்தையே புகட்டி வருகிறது என்பது கோட்பாடு. ஆனால் அத்தகைய ஞான நூலிலும் பக்தியைச் சிறப்பித்துக் கூறும் பகுதிகள் ஆங்காங்கு அமைந்திருக்கின்றன. பக்தியைக் குறிப்பிடுகிற பல சூத்திரங்களுக்குப் பாஷியக்காரர்கள் என்னென்னவோ போக்கில் வியாக்யானங்கள் செய்து வந்திருக்கிறார்கள். அந்த சூத்திரங்களில் சொல்லப்பட்டிருப்பது ஞானந்தான் என்று நிரூபித்துக்

காட்டுதற்குத் தங்கள் பாண்டித்தியத்தை யெல்லாம் அவர்கள் பயன்படுத்தி யிருக்கிருர்கள். ஆயினும் அதே பிரம்ம சூத்திரத்தில் உபாஸனு காண்டம் என்கின்ற பகுதி வருகின்றபொழுது அவர்கள் என்னதான் முயற்சியெடுத்துக் கொண்டாலும் பக்தி மயமாய் இருக்கிற கோட்பாடுகளை ஞான மயமாக மாற்றியமைப்பதற்கு அவர்களுக்கு இயலாது. பக்தியின் சிறப்பு அந்த ஞான நூலிலும் தென்பட்டுக் கொண்டேயிருக்கிறது.

இனி, ஞானத்துக்கும் பக்திக்குமிடையில் உண்மையில் பெரிய வித்தியாசம் இருக்கிறதா என்னும் கேள்வி எழலாம். பலபேர் இவ்விரண்டுக்குமிடையில் வேற்றுமை இருக்கிறது என்றே எண்ணி வருகின்றனர். ஆனல் உண்மையை ஆராய்ந்து பார்க்குங்கால் ஞானமும் பக்தியும் வெவ்வேறு பாங்குகள் அல்ல. சாதனத்தின் ஆரம்பதசையில் ஞான யோக சாதனம் வேறு, பக்தியோக சாதனம் வேறு எனத் தென்படலாம். ஆனல் அந்தச் சாதனங்களை ஆழ்ந்து அனுஷ்டித்துக் கொண்டு போகுங்கால் அவை இரண்டும் ஒரே குறியில் ஒன்றுபட்டு விடுகின்றன என்பது வெளியாகும். இனி, ராஜ யோகத்தைப்பற்றிய உண்மையும் இதுவேயாம். நல்ல முறையில் இந்த யோகத்தை அனுஷ்டித்துக்கொண்டு வருமிடத்து அது முக்தி என்னும் குறியில் மனிதனைக்கொண்டு சேர்க்கிறது. ஆனல் தௌர்ப்பாக்கிய வசமாக இந்த ராஜ யோகமானது வெறும் வேஷதாரிகள் கையிலும், ஜால வித்தைக்காரர்கள் கையிலும், சித்தி விளையாடுகிறவர்கள் கையிலும் அகப்பட்டுக்கொண்டு படாத பாடுபடுகிறது. இக்கூட்டத்தார்கள் எல்லாரும் விவேகமில்லாத பொதுமக்களை ஏமாற்றுதற்கென்றே இந்தச் சிறந்த யோகத்தைப் பயன்படுத்தி வருகின்றனர். இவர்களுடைய

தவறுதலான முறைகளை யெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு ராஜயோகத்திலுள்ள தூய நெறிகளை நேராகப் பழகி வந்தால் அதன் வாயிலாகவும் முக்தியென்னும் அதே குறி யின்கண் சாதகன் ஒருவன் வந்து சேரக்கூடும்.

கடவுளை அடைவதே வாழ்க்கையின் முடிவான குறிக் கோள். மனிதன் இதை அறிந்திருக்கலாம், அல்லது அறியாதிருக்கலாம். அதைப்பற்றி ஒன்றும் அறியாதிருக் கின்றவனுக்கும் அதுவே குறிக்கோள் ஆகிறது. அப்படிக் கடவுளை அடைவதற்குப் பக்தி மார்க்கம் எல்லாவற்றிலும் மிகச் சுலபமானதாகிறது. மனிதனுடைய இயல்புக்கு அது முற்றிலும் ஒத்ததாக இருக்கிறது. பக்தியோகத்திலுள்ள சிறப்பு இதுவேயாம். எனினும் அதில் மிகப்பெரிய இடை யூறு ஒன்று இருக்கிறது. பக்தி மார்க்கத்தின் ஆரம்ப தசை யில் இருக்கின்றவர்களுக்கிடையில் அது பெரும்பாலும் அரு வருப்புக்குரிய மதவெறியாக க்ஷீணதசையடைந்து விடுகிறது. ஹிந்து மதத்திலும், இஸ்லாமிய மதத்திலும், கிறிஸ்தவ மதத் திலும் வெறிபிடித்த கூட்டத்தார் சிலர் இருக்கின்றனர். அப்படி வெறி பிடித்தவர்கள் யாரென்று ஆராய்ந்து பார்த் தால் அவர்களைப் பற்றிய உண்மை விளங்கும். பக்தி மார்க் கத்தின் கீழான படித்தரங்களில் இருக்கின்றவர்களே குறுகிய மனப்பான்மை யுடையவர்கள் ஆய்விடுகின்றனர். ஒவ்வொரு மனிதனும் தான் வழிபடுகிற தெய்வத்திடத்து அலாதியான பற்றுதலும் அன்பும் வைக்கவேண்டும். தன் தெய்வத்திடத்து முழு மனதைச் செலுத்துகின்ற செயலுக்கு இஷ்ட நிஷ்டை யென்று பெயர். தான் போற்றுகின்ற தெய்வத்திடத்தே முழுமனதை வைக்கின்றவனுக்கு அன்பு வளர்கிறது. அப்படி அன்பைப் பெருக்குவது முற்றிலும் அவசியம். அது பாராட்டத் தக்கது. ஆனல் அதினின்று

மற்ெறாரு கேடும் உரு எடுத்து வருகிறது. தான் வழுத்தும் தெய்வத்தைத் தவிர ஏனைய சொரூபங்களையெல்லாம் அலக்ஷியப்படுத்துவதும் சிறுமைப்படுத்துவதும் அந்த மனிதனுக்கு இயல்பாய் அமைகிறது. உலகெங்கும் மக்கள் ஏராளமாய் இருக்கின்றனர். அவர்கள் அனைவரும் ஏதேனும் ஒரு மதத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கின்றனர். அவர்களுள் பெரும்பான்மையோர் முற்றிலும் மனபரிபாகம் அடையாதவர்களேயாம். மனபரிபாகம் அடையாதவர்கள் கோணலான பான்மை படைத்திருப்பதும் இயல்பு. அத்தகைய பேதையர்களுக்குத் தங்கள் தெய்வத்தைப் போற்றுதற்கு உபாயம் ஒன்றே ஒன்றுதான் உளது. தெய்வத்தின் ஏனைய வடிவங்களை அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு வெறுக்கின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு தங்கள் தெய்வத்திடத்து அவர்களுக்கு பக்தி வருகிறது. வெறுப்பு என்னும் அஸ்திவாரத்தில் அவர்களுடைய அன்பு அமைக்கப்பட்டிருக்கிறது. மானுட இயல்பைப் பற்றிய கோட்பாடு இதுவேயாம். இதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் உலக நடைமுறை ஒன்றுக்கு நாம் விளக்கம் கண்டுபிடிக்க முடியும். மானுடன் ஒருவனுக்குத் தான் லக்ஷியமாகக்கொண்டிருக்கிற தெய்வத்திடத்து அன்புகனிந்த பற்றுதல் உண்டாயிருக்கிறது. தான் பழகியிருக்கிற சமய நெறியில் மிக ஊக்கம் கொண்டவனாக அவன் இருக்கிறான். அந்நெறியில் அவனுக்கு விசுவாசம் மிக இருக்கிறது. அத்தகைய மனிதன் தன்னுடைய சமயத்துக்குப் புறம்பாக உள்ள வேறு ஏதேனும் ஒரு சமயத்தைப் பற்றிக் கேள்விப்படுவானாகில் அல்லது அந்தச் சமய அனுஷ்டானத்தைக் கண்கொண்டு பார்ப்பானாகில் அவனிடத்து வெறி குமுறி எழுந்துவருகிறது. நாய் நரிகளைப்போன்று அவன் ஊளையிட

ஆரம்பித்து விடுகிறான். தெய்வத்துக்குப் பல பெயர்கள் இருக்கின்றன வென்பதையும் அவன் கருத்தில் வாங்கிக் கொள்வதில்லை. தான் கொடுத்துள்ள பெயரும், வடிவமுமே தன் தெய்வத்துக்குரிய முழு சொரூபம் என்று அவன் கற்பனை பண்ணிக்கொள்கிறான். இது அவனிடத்துள்ள நாய்க்குணம் என்று நவிலலாம். தன் யஜமானனுடைய சொத்தை யாரும் வந்து தொடாத வண்ணம் நாய் ஒன்று கண்ணும் கருத்துமாய் அதைப் பாதுகாத்து வருகிறது. அது நாயினிடத்துள்ள இயல்பு. ஆனால் ஒருவிதத்தில் நாயினுடைய அந்த இயல்பு மனிதனுடைய பகுத்தறிவை விடச் சிறந்தது. தன் யஜமானன் எந்த வேஷம் பூண்டு வந்தாலும் நாய் அவனை அடையாளம் தெரிந்துகொள் கிறது. அவன் பகலில் வந்தாலும் சரி, இரவில் வந்தாலும் சரி, மோப்பத்தால் நாய் அவனை அறிந்துகொள்கிறது. அவன் சினந்துகொண்டு வந்தாலும், சிரித்துக்கொண்டு வந்தாலும் நாய்க்கு அதைக் குறித்துக் கவலையில்லை. யாண்டும் தன் தலைவனை மகிழ்வுடன் வரவேற்கும் தன்மையில் அவ்விலங்கு இருக்கிறது. தன்னுடைய விரோதியென்று ஒருநாளும் அவனைத் தவறுதலாக நாய் அறிந்துகொள்வ தில்லை. அது விஷயத்தில் மனிதனே நாயினும் கடைப் பட்டவன். தன் தலைவனாகிய தெய்வத்திற்கு வடிவங்கள் பல இருக்கின்றன என்பதையும் மகிமைகள் பல இருக்கின்றன என்பதையும் பரிதாபத்துக்குரிய மனிதன் அறிந்துகொள்ள வில்லை. தான் விரும்புகிற ஒரு வடிவத்தில் தன் தெய்வம் தோன்றுகிறபொழுது அவன் அவரைப் போற்றிப் பாராட்டு கின்றான். தனக்கு உகந்த ஒருவித மகிமையுடன் அவர் திகழ்கின்றபொழுது அவனுக்கு அளவில் அடங்காத ஆனந் தம் வந்து கைகூடுகிறது. ஆனால் அதே தெய்வம் வேறு ஒரு

வடிவத்தில் தோன்றுவாராகில் அவன் கொடிய விலங்கு போன்று சீறி விழுகின்றான். இன்னும் இதைத் தெளிவு படுத்திச் சொல்லுங்கால் ஒரு மனிதன் தன் தெய்வத்தை சிவம் என்கின்றான். சிவசொரூபத்தில் அவன் விருப்பம் மிகக் கொள்கின்றான். அதே சங்கரன் நாராயணனாகத் தன் முன் தோன்றுவாராகில் வெறி பிடித்தவனாக அவன் அத்தெய்வத் தினிடமிருந்து விலகி ஓடுகிறான். பக்தியில் கீழ்நிலையில் இருக்கிற சைவன், வைஷ்ணவன், சாக்தன் ஆகிய எல்லா மதவாதிகளும் இக்குற்றத்தைச் செய்து வருகின்றனர். இப்படி மதவெறி பிடித்திருக்கிற மனிதன் தனது பகுத் தறிவை முழுதும் இழந்துவிடுகின்றான். தான் கொண்டுள்ள ஒரே ஓர் எண்ணத்தில் அவன் ஆழ்ந்து மூழ்கியவன் ஆகின் றான். ஏனைய கருத்துக்களுக்கும் கோட்பாடுகளுக்கும் காது கொடுக்க அவன் ஆயத்தமாயில்லை. அயலான் ஒரு வன் தனக்கு எடுத்துச்சொல்லுவதில் குணம் எது, குற்றம் எது என்று நிதானமாக ஆராய்ந்து பார்க்கும் தன்மை அவனிடத்தில்லை. சொல்லப்படும் விஷயம் சரியானதா அல்லது தப்பானதா என்று ஓர்ந்து ஆராய்வது முறை. ஆனால் அவன் அப்படி ஆராய்வதில்லை. சொல்லுகிற மனி தன் யார் என்று அவன் வினவுகிறான். தன் மதத்தைச் சேர்ந்தவன் ஏதேனும் ஒன்றை இயம்புவானாகில் அதை வேத வாக்காக அவன் ஏற்றுக்கொள்கின்றான். வேறு ஒருமதத்தைச் சேர்ந்தவன் பகர்கிற பொருள் எவ்வளவு பெரியதாயிருப்பி னும் அதை அவன் அறவே புறக்கணித்து விடுகின்றான். தன் மதத்தைச் சேர்ந்திருக்கிற மக்களிடத்து அவன் அன்புடைய வனாய் இருக்கின்றான்; இனிதுநடந்துகொள்கின்றான்; நேர்மை வடிவெடுத்தவனாகிறான்; அன்பும் அவனிடத்திருந்து ததும்பி எழுந்து வருகிறது. ஆனால் வேறு மதத்தை அனுஷ்டிக்கின்ற

வர்களைச் சந்திக்க நேர்ந்தால் அவர்களுக்கு மிகமிகக் கொடிய துன்பங்களை விளைவிக்க அவன் பின்வாங்குவதில்லை. இத்தகைய மதவெறியே பக்திமார்க்கத்தின் கீழ்நிலையிலுள்ள பலபேரிடத்து அமைந்துள்ள பொல்லாங்கு ஆகும்.

பக்தி மார்க்கத்தில் செல்லுகின்றவர்கள் பெரிதும் மத வெறி பிடித்தவர்கள் ஆகிறார்கள் என்று மேலே சொன்னோம். ஆனால் அத்தகைய ஆபத்து தொடர்ந்து எப்பொழுதுமே இருப்பதில்லை. பக்திநெறியின் ஆரம்பதசையில்தான் அது இருக்கிறது. ஆரம்பநிலையிலுள்ள பக்திக்கு கௌணீ गौणी பக்தி என்று பெயர். நித்திய அனுஷ்டானங்களைப்பற்றியும் கடவுள் வழிபாட்டைப் பற்றியும் அதில் கட்டுப்பாடுகள் மிக இருக்கின்றன. புதிதாக நட்ட செடி ஒன்றுக்கு வேலிபோடு வது போன்றது கௌணீ பக்தி. செடிக்குச் சர்வகாலமும் வேலியிருக்கவேண்டும் என்பது அவசியமல்ல. செடி சிறிய தாய் இருக்கின்றபொழுது வேலியும் இருந்தே ஆகவேண் டும். அது பெரிய மரமாய் வளருகின்றபொழுது வேலியை நீக்கிவிடவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் வளருகிற மரத்துக்கு அது இடைஞ்சலாகிறது. பக்திமார்க்கத்தில் பலபேர் போடுகின்ற சண்டைகள் எல்லாம் வேலியைப் பற்றியதேயாம்; வளர்கின்ற மரத்தைப்பற்றியதல்ல. பக்தி யில் ஆத்ம சாதகன் பயின்று உயர்ந்த நிலைக்குப் போகின்ற பொழுது அவன் படைத்திருக்கிற பக்திக்குப் பராபக்தி என்று பெயர். பராபக்தி வாய்க்குங்கால் பிறகு ஆபத் துக்கு இடமில்லை. பயங்கரமான மதவெறியும் ஆங்குத் தோன்றுவதில்லை. பராபக்தியை அடையப்பெற்ற ஆத்ம சாதகன் அன்புக் கடவுளின் அருகில் வந்து நிற்கின்றான். அவன் தானே அன்பு சொரூபமாய் மாறுவதால் அவனிடத் திருந்து வெறுப்பு வெளியாவதில்லை. கடவுள் அன்பு

சொரூபமாய் இருப்பது போன்று பக்தனும் அன்பு சொரூபமாய் இருக்கிறான்.

நாம் வாழ்ந்து வருகிற இந்த மானுட வாழ்க்கை மனதை முற்றிலும் பண்படுத்துவதற்காக வென்று இருக்கிறது. பண்பட்ட மனதில் எல்லாவிதமான சீலங்களும் நிறைந்திருக்க வேண்டும். மனதின்கண் எத்தனைவிதமான பெற்றிகள் இருக்கின்றனவோ அவையாவும் ஒழுங்காகவும் முறையாகவும் மேம்பாடு அடைந்திருக்க வேண்டும். அப்பொழுதே மனிதத்தன்மையில் நாம் நிறைநிலையடைந்தவர்கள் ஆகின்றோம். ஆனால் அத்தகைய வாய்ப்பு நம்மில் எல்லார்க்கும் அமைவதில்லை. ஒவ்வொரு மனிதனிடத்தும் ஏதேனும் ஒரு மேன்மை வந்து அமைகிறது. ஏனைய மேன்மைகள் குன்றிய நிலையில் நின்று விடுகின்றன. மனபரிபாகத்தில் பரிபூரண நிலை என்பது யாது என்னும் கேள்வி எழலாம். இக் கேள்விக்குத் தக்கவிடை பெறுதற்கு அன்னை பராசக்தியின் நாமம் ஒன்றை விளக்கமாக எடுத்துக்கொள்வோம். இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி சொரூபிணி என்பது அம்பிகைக்கு அமைந்துள்ள ஆயிரம் பெயர்களில் ஒன்று. இச்சா சக்தி அன்பு சொரூபத்தை விளக்குகிறது. ஞான சக்தி அறிவு சொரூபத்தை விளக்குகிறது. கிரியா சக்தி ஆற்றல் சொரூபத்தை விளக்குகிறது. மக்களுள் யாருடைய மனபரிபாகத்தில் இம்மூவித மேன்மைகளும் உயர்ந்த பாங்கில் பொலிந்து கொண்டிருக்கின்றனவோ அம்மக்களே மன பரிபாகத்தில் நிறைநிலை யடையப்பெற்றவர்கள் ஆகின்றனர். பக்தியோகத்தில் மேல் நிலைக்குப் போகின்றவர்களிடத்து அன்பு வளர்கிறது. ஞானயோகத்தில் மேல் நிலைக்குப் போகின்றவர்களிடத்து அறிவு வளர்கிறது. கர்மயோகம், ராஜயோகம் ஆகிய இரண்டையும் முறையாக அனுஷ்டிக்

கின்றவர்களிடத்து ஆற்றல் வளர்கிறது. அன்பு, அறிவு, ஆற்றல் ஆகிய மூன்றுவிதச் சக்திகளையும் முறையே அடையப் பெற்றிருக்கின்றவர்களே நிறைநிலை அடைந்த மாந்தர் ஆகின்றனர். பறவை ஒன்று பறப்பதற்கு மூன்று உறுப்புகள் அவசியமாகின்றன. சிறகுகள் இரண்டும் வால் ஒன்றும் அதற்கு வேண்டியிருக்கின்றன. மனிதனுடைய வாழ்க்கையும் அத்தகையது. ஞானமும் பக்தியும் இரண்டு சிறகுகளுக்கு ஒப்பாகின்றன. யோகமோ பறவையினுடைய வாலுக்கு ஒப்பாகிறது.

समत्वं योग उच्यते சமத்வம் யோக உச்யதே

மனம் நடுநிலை பெற்றிருப்பது யோகம் என்பது இதன் விளக்கம். பறக்கின்ற பறவை மேலே போவதற்கும், கீழே இறங்குவதற்கும், சமநிலையில் இருப்பதற்கும் அதன் வால் உதவுகிறது. அங்ஙனம் நல்வாழ்வு வாழுகிற மனிதன் ஒருவனுக்கு தன்னுடைய வாழ்க்கையிலே திறமையையும் ஒழுங்குப்பாட்டையும் காட்டுதற்கு யோகம் பயன்படுகிறது. இந்த மூன்று விதமான மார்க்கங்களையும் ஒன்று சேர்த்து முறையாக அனுஷ்டிக்கும் வாய்ப்பு எல்லார்க்கும் அமைவதில்லை. அவர்களின் இயல்பும் அதற்கு ஒத்ததாயிருப்பதில்லை. பெரும்பாலர் பக்தி மார்க்கம் ஒன்றைத்தான் அனுஷ்டிக்க விரும்புகின்றனர். பக்திநெறி ஒன்றே அவர்களுக்கு உகந்ததாகிறது. பக்தி நெறியில் செல்லுகின்றவர்களுக்கு ஆரம்ப தசையில் உபாசனாமூர்த்தி ஒருவர் இருப்பது அவசியமாகிறது. வழிபாட்டுக்குரிய தெய்வத்தின் வடிவத்தை உபாசனா மூர்த்தி என்கிறோம். இனி, வழிபாட்டுக்குரிய கிரியைகளும் சடங்குகளும் பல இருக்கின்றன. நித்திய பூஜைகளை என்னென்ன முறைகளில் செய்யவேண்டும் என்கின்ற நியமனங்கள் எல்லாம் அமைக்கப்பெற்றிருக்கின்றன. சாதனத்தில்

மேல் நிலைக்குப் போக விரும்புகின்றவர்களுக்கு அத்தகைய கிரியா விசேஷங்களும், உபாசனை முறைகளும், பூஜா விதிகளும் முற்றிலும் அவசியமானவைகளாய் இருக்கின்றன. ஆனால் அவை யாவையும் ஆத்மசாதகன் ஒருவன் காலமெல்லாம் அனுஷ்டித்துக் கொண்டிருக்கவேண்டும் என்பது நியமனமல்ல. செடி ஒன்றுக்கு வேலி கட்டுவது போன்று பக்தி மார்க்கத்தின் ஆரம்ப நிலைக்கு இந்த அனுஷ்டான முறைகள் எல்லாம் தேவையாய் இருக்கின்றன. எப்பொழுது கடவுள் பக்தி முதிர்ந்துவருகிறதோ அப்பொழுது ஆத்மசாதகர்கள் இந்தக் கிரியா விசேஷங்களையெல்லாம் கடந்தவர்கள் ஆகின்றனர்.

ஞான மார்க்கத்தைப் புகட்டுகின்ற ஆசாரியர்கள் இருக்கின்றனர். பின்பு பக்தி மார்க்கத்தைப் புகட்டுகின்ற ஆசாரியர்களும் இருக்கின்றனர். பக்தியின் வலிவைப்பற்றி இருதரத்தாரும் ஒத்துக் கொள்கின்றனர். எனினும் ஞானத்தையும் பக்தியையும் சீர்தூக்குகின்ற இடத்தில் அவர்களுக்கிடையில் ஒருசிறிதளவு அபிப்பிராய வித்தியாசம் இருந்து வருகிறது. ஞானமார்க்கத்துக்கு உயர்ந்த ஸ்தானம் தருகின்றவர்கள் முக்தியைப் பெறுதற்கு பக்தி வெறும் உபாயமாகத்தான் அமைந்திருக்கிறது என்று கருதுகின்றனர். ஆனால் பக்தியை சிலாகித்துக் கூறுகின்றவர்களோ அது ஏககாலத்தில் நெறியாகவும் குறியாகவும் இருக்கிறது என்கின்றனர். பின்பு இந்தப் போக்கில் ஞானத்தையும் பக்தியையும் சீர்தூக்குவது சிறந்த முறையாகாது. சீரிய நிலையில் ஞானமும் பக்தியும் ஒன்றேயாம். பக்தி மார்க்கமானது முக்திக்கு வெறும் உபாயமாகத்தான் இருக்கிறது என்று சொல்லுங்கால் அந்த பக்தியைக் கீழ்நிலையில் இருக்கின்ற கௌணீ பக்தி என்று வைத்துக் கொள்ளவேண்டும்.

ஞானயோகத்துக்கு ஏற்ற சாதனங்கள் சில இருக்கின்றன. பக்தி யோகத்துக்கு ஏற்ற சாதனங்களும் இருக்கின்றன. அந்தந்த மார்க்கத்தைக் கடைப்பிடிக்கின்றவர்கள் அவரவர் சாதனங்களையே சிறப்பித்துக் கூறுகின்றனர். அப்படி ஒன்றைவிட ஒன்று மேலானது என்று பாகுபடுத்தவேண்டிய அவசியமில்லை. மேலான நிலைக்குப் போயுள்ள பக்தியில் ஞானம் அடங்கியிருக்கிறது. ஞானம் என்கின்ற ஒன்றை அப்பொழுது அலாதியாகத் தேடித்திரிய வேண்டியதில்லை. தேடாது தானே ஞானம் வந்தமைகிறது. இனி, ஞானத்தில் முதிர்ந்த நிலைக்குப் போகின்ற சாதகன் ஒருவனுக்கு பராபக்தி தானாக வந்து வாய்க்கிறது. முடிந்த நிலையில் ஞானமும் பக்தியும் ஒன்றே.

உச்சநிலையை யடையும்பொழுது தூய பக்தியும் தூய ஞானமும் ஒன்றித்துப்போகின்றன. வேதாந்த தர்சனத்துக்கு வியாக்கியானம் செய்கின்றவர்கள் இக்கோட்பாட்டைப்பற்றி என்ன சொல்லுகின்றனர் என்று ஆராய்ந்து பார்ப்போம்.

आवृत्तिः असकृदुपदेशात्

ஆவ்ருத்தி: அஸக்ருது (உ)பதேசாத்

என்பது வேதாந்த சூத்திரங்களுள் ஒன்றாகும். இதற்கு பகவத் பாத சங்கரர் வியாக்யானம் செய்திருக்கிறார். "ஒரு மனிதனைக் குறித்து அவன் ராஜபக்தி கொண்டிருக்கிறானென்று ஜனங்கள் சொல்லுகின்றார்கள். அவன் குருபக்தி கொண்டிருக்கிறானென்றும் அவர்கள் பகர்கிறார்கள். யாரொருவன் குருவின் சொற்படி முற்றிலும் ஒழுகுகின்றானோ அவனைக் குருபக்தி கொண்டுள்ளவனாகக் கருதுவது உலகத்தாரியல்பு. குரு சொற்படி நடந்துகொள்வதையே வாழ்க்கையின் குறிக்கோளாக அவன் வைத்திருக்கிறான். அதே முறையில் பெண்

பாலொருத்தியினுடைய இயல்பைப் பற்றியும் உலகத்தவர் இயம்புகின்றனர். கற்புடைய மங்கையொருத்தி தன் கணவனையே கருத்தில் வைத்திருக்கின்றாள். தன் கணவன் என்னசொல்லுகிறானோ அதன்படியே நடந்துகொள்ள அவள் யாண்டும் சித்தமாயிருக்கிறாள். பின்பு கணவன் அதே விதத்தில் தன் இல்லாளிடத்து அன்பு கொண்டவனாக இருக்கிறான். இப்படி இவர்கள் ஒழுகுகின்ற விடத்து தாங்கள் போற்றும் மாந்தரை இடையறாது நினைந்திருப்பது அவர்களுடைய செயலாகிறது. போற்றிப் பாராட்டுபவரை இடையறாது எண்ணுவது பக்தி'' யென சங்கரர் அதற்கு விளக்கம் கொடுக்கிறார்.

ஒரு பொருளை அல்லது ஒருவரை இடையறாது நினைந்து கொண்டிருப்பதற்கு தியானம் என்று பெயர். எண்ணெயை ஒரு பாத்திரத்தினின்று மற்றொரு பாத்திரத்தில் ஊற்றுங்கால் அது இடையீடின்றித் தொடர்ந்து பொழிகிறது. பக்தன் கொண்டுள்ள லக்ஷியத்தைப்பற்றி அங்ஙனம் இடையீடின்றி அவன் நினைத்துப் பழகவேண்டும். பக்தனுக்கு லக்ஷியமாயிருப்பது தான் போற்றும் கடவுள். என்றைக்குக் கடவுளைப்பற்றிய எண்ணம் தைலதாரை போன்று இடையறாததாய் மனதினுள் இடம் கொள்வதாகின்றதோ அன்றைக்கு உலக பந்தங்கள் யாவும் அறுபட்டுப் போய் விடுகின்றன. இங்ஙனம் கடவுளைப்பற்றிய எண்ணம் இடையறாதது ஆகுங்கால் அது முக்திக்கு மார்க்கமாகிறது என்று யோக சாஸ்திரங்கள் சாற்றுகின்றன. நாடிய பொருளை இடையறாது எண்ணிக்கொண்டிருப்பது அதைக் கண்டு கொண்டிருப்பதற்கு நிகராகிறது.

दूरात् सुदूरे तदिहान्तिके च
पश्यत्स्विहैव निहितं गुहायाम् ॥

தூராத் ஸுதூரே ததிஹாந்திகே ச
பச்யத்ஸ்விஹைவ நிஹிதம் குஹாயாம்

தூரத்திலும் அதிதூரத்தில் அது இருக்கிறது. அது ஈண்டு உடலினுள் இருக்கிறது. அது உள்ளத்தினுள் இருப்பதை இங்கு சான்றோர் காண்கின்றனர். புறத்தார்க்குச் சேயோன் என்பதும் உள்குவார் உள்ளிருப்பான் என்பதும் கோட்பாடு. "எட்டவும் அருகிலும் இருக்கின்றவனைக் கண்டு கொண்டிருக்கின்றபொழுது உள்ளத்தின்கண் உள்ள பந்தங்கள் அறுபட்டுப்போகின்றன; சந்தேகங்கள் அகன்று விடுகின்றன; வினைப்பயன்கள் யாவும் விலகிப் போகின்றன" என்பது சாஸ்திரப்பிரமாணம். பக்கத்திலிருப்பவனை நாம் காணமுடியும். ஆனால் எட்ட இருக்கின்றவனை நினைந்துகொண்டிருப்பதொன்றே நமக்குச் சாத்தியம். எனினும் சாஸ்திரம் நமக்கு இங்ஙனம் ஆணையிட்டிருக்கிறது. அருகிலிருப்பவனையும் எட்டவிருப்பவனையும் நாம் கண்டு கொண்டே இருக்கவேண்டும் என்பது அந்த ஆணை. எட்ட இருக்கின்றவனை நினைக்க நமக்கு இயலும். அப்படி அவனை நினைந்துகொண்டிருப்பது அவனைப் பார்த்துக் கொண்டிருப்பதற்கொப்பாகிறது. நினைந்து கொண்டிருப்பதும் பார்த்துக் கொண்டிருப்பதும் ஒன்றே என்கின்ற முடிவுக்கு இனி நாம் வந்தாகவேண்டும். நினைந்துகொண்டிருக்கின்ற செயல் மிக மிக ஆழ்ந்தது ஆகுங்கால் அது பொருளைப் பார்ப்பதற்கொப்பாகிறது. கடவுள் வழிபாடு செய்தல் என்னும் சாதனம் ஒன்று உளது. வழிபாடு செய்கின்றவன் திரும்பத் திரும்ப தெய்வத்தை நினைந்துகொண்டேயிருந்தாக வேண்டும். சாஸ்திரங்களும் இக்கொள்கைக்கு வேண்டியவாறு ஆதரவு கொடுக்கின்றன. ஆத்மசாதகன் தன்னியல்புக்கேற்றபடி கடவுளை அறிகிறான். கடவுளை அறிந்துகொள்ளுதல் அவரைத்

திரும்பத் திரும்ப வழிபடுவதற்கொப்பாகிறது. திரும்பத் திரும்ப அவரை வழிபடுவது திரும்பத் திரும்ப அவரை நினைந்துகொண்டு இருப்பதற்கு நிகராகிறது. ஆக அறிதல், நினைத்தல், வழுத்துதல் ஆகிய இம்மூன்றும் ஆத்ம சாதகனை ஒரே லக்ஷியத்தில் கொண்டு சேர்க்கின்றன. தான் போற்றும் தெய்வத்தைப் பக்தன் நேரே சாக்ஷாத்கரிக்கின்றான். இனி, அந்தத் தெய்வத்தைப்பற்றிய ஞாபகம் மிக உயர்ந்த நிலைக்குப் போகுங்கால் அது தெய்வத்தை சாக்ஷாத்கரிப்பதற்கு ஒப்பாகிறது. கடவுளின் ஞாபகம் யார் ஒருவனுக்கு உயர்ந்த நிலைக்குப் போகிறதோ அவன் முக்த புருஷன் ஆகிறானென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. மேலும் வேதாந்தபரிபாஷையில் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என மூன்று பகுதிகளிருக்கின்றன. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என அவை பொருள்படுகின்றன. சிந்திப்பதனாலேயே தெளிவு வருகிறது என்பது அதன்பொருள்.

नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन ।
यमेवैष वृणुते तेन लभ्य स्तस्यैष आत्मा विवृणुते तनूं स्वां ॥

நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ
ந மேதயா ந பஹுனா ச்ருதேன
யமேவைஷ வ்ருணுதே தேன லப்ய
ஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தனூம் ஸ்வாம்

இந்த ஆத்மன் விதவிதமான நூல்களை ஆராய்ச்சிபண்ணுவதன்மூலம் அடையப்படுவதன்று. அறிவுத் திறமையினாலும் இந்த ஆத்மன் அடையப்படுவதன்று. வேதங்களை ஏராளமாகக் கற்பதனாலும் இது அடையப்படுவதன்று. இந்த ஆத்மனுடைய அருள் யாருக்குக் கிட்டுகின்றதோ அவன் அதை அடைகின்றான். அவனுக்கே ஆத்மன் தன்னை விளக்கிக்

காட்டுகிறது என்பது உபநிஷத் வாக்கியம். "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்னும் திருவாசகக்கோட்பாட்டுக்கு ஒத்ததாக இந்த உபநிஷத் வாக்கியமிருக்கிறது. ஈண்டு ஆராய்ச்சிக்கு ஒரு விஷயம் வந்துள்ளது. கேட்பதாலும், எண்ணுவதாலும், நினைப்பதாலும் இந்த ஆத்மன் அடையப்படுவதல்ல என்று பகர்ந்துவிட்டு, "யார் ஒருவனுக்கு இந்த ஆத்மனுடைய அருள் கிட்டுகிறதோ அவனே அதை அடையப்பெறுகிறான்" என்று இயம்பப்பட்டுள்ளது. எது பேரன்புக்குரியதாகிறதோ அதுவே அருளுக்குரியதாகிறது. எவன் ஒருவன் இந்த ஆத்மனைப் பேரன்போடு நேசிக்கிறானோ அவனே இந்த ஆத்மனுடைய அன்புக்குரியவனாகின்றான். ஆத்மனுடைய அன்புக்குரியவனை ஆத்மனுடைய அருளுக்குரியவனென்று இயம்புகிறோம். பேரன்பும் அருளும் ஈண்டு இணைபிரியாதவைகளாய் அமைகின்றன. "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்" என்பது மறைமொழி. பரமாத்மாவிடத்துப் பேரன்புகொள்கிறவனுக்கு அப் பரமாத்மனையடைதற்கு அவரே துணைபுரிகின்றார். பகவான் தாமே இங்ஙனம் பகர்ந்துள்ளார்.

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥

தேஷாம் ஸதத யுக்தானாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம்
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே

"யாண்டும் யோக முயற்சியோடும் அன்புடனும் என்னை வழுத்துபவர்களுக்கு புத்தியோகம் வழங்குகிறேன். அதனால் அவர்கள் என்னை அடைகிறார்கள்" என்பது இதன் பொருள். சர்க்கரையை நாவில் வைத்தால் அது தித்திக்கிறது என்பது தெரிகிறது. பிறகு அந்தச்

சர்க்கரையை என்னென்ன வகைப் பட்சணங்களாகச் செய்தால் அதன் சுவையை நன்கு ரசிக்கலாம் என்று அறிவது சர்க்கரையைப் பற்றிய புத்தியோகமாகிறது. உள்ளன்போடும் உறுதியாகவும் யோகத்தில் நுழைபவர்க்கு இறைவனது மகிமை கொஞ்சம் விளங்குகிறது. அது யோகத்துக்கு இன்னும் தூண்டுகோலாகிறது. பகவான் தந்துகொண்டே வருகிற புத்தி யோகத்தால் அவருடைய சொரூபம் மேலும் மேலும் அறியப்படுகிறது. அவருடைய சொரூபத்தைத் தொடர்ந்து அறியுமளவு பக்தன் இன்னும் அதிகமாகப் பகவானைச் சார்ந்து நிற்கிறுன். இங்ஙனம் புத்தியோகத்தின் மூலம் பக்தி வளர்கிறது. எனவே இறைவனைப் பற்றி யார் ஒருவன் இடையருது மனனம் செய்கின்ருனோ அவன் இறைவனை இடையருது கண்டுகொண்டிருப்பவனுக்கு ஒப்பாகிருன். இடையருது மனனம் செய்வது யாருக்குச் சாத்தியமாகிறது என்று அடுத்தபடியாக ஆராய்ந்து பார்க்கவேண்டும். யாரொருவன் தான் வணங்கும் தெய்வத்திடத்துப் பேரன்பு கொண்டிருக்கின்ருனோ அவனுக்கே இடையருத மனனம் பண்ணுவது சாத்தியமாகிறது. பரமாத்மனை அவன் ஆழ்ந்து நேசிப்பதாலும் எண்ணுவதாலும் பரமாத்மனுடைய அன்பு ததும்பிய அருளுக்கு அவன் பாத்திரமாகிருன். பின்பு பரமாத்மனை அடைவதும் அவனுக்கு எளிதாகிறது. இப்படி இறைவனை இடையருது மனனம் செய்கின்ற செயலுக்குப்பக்தியென்று பெயர். இவ்விதத்தில் உடையவர் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார்,

अथातो ब्रह्मजिज्ञासा ।

அதாதோ பிரம்மஜிஞ்ஞாஸா

என்னும் பிரம்ம சூத்திரத்திற்கு வியாக்யானம் செய்து இருக்கிருர்.

பதஞ்சலி முனிவர் இயற்றியுள்ள யோக சூத்திரங்களில் பக்தியைப் பற்றிய சூத்திரமும் ஒன்று வந்துள்ளது. அதாவது:—

ईश्वरप्रणिधानाद्वा
ஈஸ்வரப்ரணிதாநாத்வா

ஈசுவரனை உபாசிப்பதன் மூலமாகவும் யோகி ஒருவனுக்குப் பரிபூரண நிலை உண்டாகிறது.

ப்ரணிதானம் என்னும் பதத்துக்கு போஜர் ஒரு போக்கில் விளக்கம் கொடுத்திருக்கிறார். அது பக்தியில் பண்பட்ட நிலை. பிரதிபலன் எதையும் பக்தன் ஈசுவரனிடத்திருந்து எதிர்பார்ப்பதில்லை. இந்திரிய சுகங்களையோ அவைபோன்ற வேறு எந்தவிதமான இன்பங்களையோ பக்தன் நாடுவது கிடையாது. ஜகத் குருவாயிருக்கின்ற பரமேசுவரனிடத்து பக்தன் செய்கின்ற கர்மங்களையும், கர்ம பலன்களையும் ஒப்படைத்துவிடுகின்றான்.

வியாஸ பகவானும் ப்ரணிதானம் என்னும் பதத்துக்கு வியாக்யானம் செய்திருக்கிறார். சர்வேசுவரனிடத்து யோகி ஒருவன் பக்தியே வடிவெடுத்தவனாகின்றான். அவனுடைய பக்திக்கு இரங்கி சர்வேசுவரனிடத்திருந்து கிருபையும் அவனுக்கு வந்து கிட்டுவதாகிறது. அந்த யோகி கொண்டுள்ள ஆசைகளெல்லாம் கிருபைக்குப் பாத்திரமாவதில் நிறைவேறப் பெறுகின்றன.

அடுத்தபடியாக சாண்டில்யர் தம் போக்குக்கு ஏற்ப பக்திக்கு விளக்கம் கொடுத்திருக்கிறார். ''சர்வேசுவரனிடத்துள்ள அளவையில் அடங்காத அன்புக்குப் பக்தி யென்று பெயர்.''

இனி, பக்தர்களுக்கெல்லாம் தலைவனுயிருக்கின்ற பக்த ராஜன் என்று பகரப்பெறுகிற பிரஹலாதனும் பக்தியின் லக்ஷணத்தை விளக்கியிருக்கிருன். ஒரு விதத்தில் அவன் கொடுத்திருக்கிற லக்ஷணத்தைத் தலை சிறந்ததென்று சொல்லலாம்.

या प्रीतिरविवेकानां विषयेष्वनपायिनी ।
त्वामनुस्मरतः सा मे हृदयान्मापसर्पतु ॥

யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வனபாயினீ
த்வாமனுஸ்மரதः ஸா மே ஹ்ருதயான்மாபஸர்பது

இந்திரிய விஷயங்களில் அவிவேகி எத்தகைய அழிந்து பட்டுப் போகாத அன்பை வைத்திருக்கிருனே உன் மீது நான் வைக்கும் அத்தகைய அன்பு இறைவா, நான் உன்னை ஸ்மரித்துக் கொண்டிருக்கின்றபொழுது என் ஹ்ருதயத்தி னின்று வழுவிப் போகாதிருக்கட்டும்.

உயிர்களனைத்தும் அன்பு சொரூபம். அன்பின் வழியது உயிர்நிலை. இனி, இந்த அன்பை யாரிடத்தில் காட்டுவது? எல்லாம் வல்ல சர்வேசுவரனிடத்தே இந்த அன்பைச் செலுத்தவேண்டும். சர்வேசுவரன் ஒருவன் நீங்கலாக ஏனைய எத்தகைய பேருயிரிடத்தாவது இந்த அன்பைத் திருப்பினுல் அதைப் பக்தி என்று பகரலாகாது. ஸ்ரீ ராமானு ஜாச்சாரியர் பிரம்ம சூத்திரத்திற்கு வியாக்கியானம் எழுதி யுள்ளார். அதற்கு ஸ்ரீ பாஷ்யம் என்று பெயர், அதில் அவர் மற்ருெரு பண்டைய ஆசாரியரின் கருத்தை மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார், அதாவது :—

आब्रह्मस्तंबपर्यन्ता जगदन्तर्व्यवस्थिताः ।
प्राणिनः कर्मजनितसंस्कारवशवर्तिनः ॥
यतस्ततो न ते ध्याने ध्यानिनामुपकारकाः ।
अविद्यान्तर्गताः सर्वे ते हि संसारगोचराः ॥

ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதா:
ப்ராணின: கர்மஜனிதஸம்ஸ்காரவசவர்த்தின:
யதஸ்ததோ ந தே த்யானே த்யானிஞமுபகாரகா:
அவித்யாந்தர்கதா: ஸர்வே தே ஹி ஸம்ஸாரகோசரா:

பிரம்மா முதற்கொண்டு சிறு புழு பரியந்தம் இப்பிரபஞ்சத்தில் வாழ்ந்திருக்கின்ற உயிர்களனைத்தும் கர்மத்தின் விளைவாக வந்துள்ள பிறப்பு இறப்புக்கு அடிமைகளாய் இருக்கின்றன. எனவே அவைகள் தியானத்துக்கு உபகாரமானவைகளாக இருக்கமாட்டா. மேலும் அவைகள் அஞ்ஞானத்தில் உழன்றுகொண்டும் பிறவிப் பெருங்கடலில் அகப்பட்டுக் கொண்டுமிருக்கின்றன.

சாண்டிலியர் "அனுரக்தி" என்னும் சொல்லை உபயோகித்திருக்கிறார். அந்தச் சொல்லுக்கு சொப்பனேசுவரர் வியாக்கியானம் கொடுத்திருக்கிறார். அனு என்னும் உபசர்க்கம் பின் தொடர்ந்து எனப் பொருள் படுகிறது. ரக்தி என்னும் விகுதி பற்றுவைத்தல் எனப் பொருள்படுகிறது. அதாவது கடவுளின் மகிமையையும் அவருடைய சொரூபத்தையும் அறிந்துகொண்டான பிறகு அவரிடத்து உண்டாகின்ற பெரிய பற்றுதலுக்கு அனுரக்தி என்று பெயர். அப்படியல்லாது மனைவி மக்களிடத்து அஞ்ஞான இருளிலிருக்கின்றவர்கள் வைக்கின்ற பற்றுதலை பக்தி என்று பகரலாகாது. இங்ஙனம் பக்திக்குப் பல படித்தரங்களில் வைத்துத் தரப்பட்டிருக்கின்ற லக்ஷணங்களை நாம் காண்கிறோம். சாதாரணமான கிரியைகளோடு கூடிய வழிபாட்டில் அது துவங்குகிறது. பிறகு அது பலதரப்பட்ட மனோ முயற்சிகளாக வடிவெடுக்கிறது. இறுதியாக சர்வேசுவரனிடத்து வைத்துள்ள பரமபக்தியாக அது முற்றுப்பெறுகிறது. இதுவே பக்தியின் லக்ஷணமாம்.

## 2. ஈசுவர தத்துவம்

ஈசுவரன் என்பவர் யார்? जन्माद्यस्य यतः யாரிடத்தி லிருந்து அண்டங்கள் அனைத்தும் தோன்றிவருகின்றனவோ, யாரிடத்து அவைகள்நிலை பெற்றிருக்கின்றனவோ, மீண்டும் யாரிடத்தில் அவையாவும் ஒடுங்கிவிடுகின்றனவோ அவரே ஈசுவரன். அவர் யாண்டும் நிலைத்திருக்கிறார். ஆதி யந்தம் அவருக்குக் கிடையாது. அவருக்கு அன்னியமான இரண் டாவது பொருள் அவரை மலினப்படுத்துதற்கு இல்லை யாதலால் அவர் யாண்டும் தூய்மையே வடிவெடுத்திருக் கிறார். மேலும் அவரைக் கட்டிப் பிணிப்பதற்கு எதுவும் இல்லையாதலால் அவர் நித்திய முக்தனாக இருக்கிறார். ஆற்றல்கள் அனைத்தும் அவரிடத்து உண்டு. சர்வக்ஞன் அல்லது யாவையும் முற்றிலும் உணர்ந்தவர் என்று அவரைப் பகரலாம். உயிர்களிடத்து அவர் கிருபையே வடிவெடுத்த வராக இருக்கிறார். ஞானசாரியர்கள் அனைவருக்கும் ஆதி குருவாய் இருப்பவர் அவரே. இக்கோட்பாடுகளையெல்லாம் வேதாந்த பரிபாஷையில் பகர்வோமானால் ஈசுவரன் நித்தி யனாய், சுத்தனாய், நித்திய முக்தனாய், சர்வசக்திமானாய், சர்வக்ஞனாய், தயாநிதியாய், பரமகுருவாய் உள்ளார். ஈசு வரனுக்கு மற்றொரு விளக்கமும் உண்டு. स ईश्वरोऽनिर्वचनीयः प्रेमस्वरूपः சொல்லால் விளக்கமுடியாத பிரேம சொரூபமாக அவர் உள்ளார். எல்லையில் அடங்காத பேரன்பு பிரேம சொரூபம் எனப்படுகிறது.

சகல கல்யாணகுணங்களுடன் கூடிய ஈசுவரனுக்கு இந்த விளக்கங்கள் வந்து அமைந்துள்ளன. அவரை சகுண பிரம்மம் என்று சொல்லுவதும் உண்டு. இனி, நிர்க்குண பிரம்மம் என்று ஒன்று வேதாந்தத்தில் பகரப்பட்டிருக்கிறது.

அது குணம் குறியற்றது. இது அல்ல, இது அல்ல என்று எதிர்மறையிலேயே அப்பொருள் ஒருவாறு விளக்கப்படு கிறது. தோன்றியுள்ள எப்பொருளோடும் அதைச் சீர்தூக்க முடியாது. ஆகையினால்தான் இது அல்ல, இது அல்ல என்று எதிர்மறையில் அது விளக்கப்படுகிறது. அதற்கு உடன் பாட்டு விளக்கம் தருதல் என்றால் அகண்ட சத் சித் ஆனந்தம் எனலாம். இப்பொழுது கேள்வி ஒன்று எழு கிறது. வேதாந்தத்தில் விளக்கியுள்ள நிர்க்குண பிரம்மம் ஒன்று எனவும், பக்தி சாஸ்திரங்களில் விளக்கியுள்ள அன் புக்கு உறைவிடமாகிய ஈசுவரன் அல்லது சகுணபிரம்மம் மற்றொன்று எனவும் இரண்டு தெய்வங்கள் உண்டா? இல்லை, அப்படி இரண்டு தெய்வங்கள் இல்லை. அகண்ட சச்சிதானந்தமாய் இருக்கிற பொருளே பிரேம சொரூபமாயுள்ள ஈசுவரனாகவும் இலங்குகின்றார். அவர் ஒருவரே நிர்க்குண பிரம்மமாகவும் சகுண பிரம்மமாகவும் இருக்கிறார். பக்தன் ஒருவன் எப்பொழுதும் சகல கல்யாண குணங்களுடன் கூடிய ஈசுவரனை உபாசிக்கின்றான். அதே ஈசுவரனை பகவான் என்று சொல்லுவதும் உண்டு. வேதாந்திகளோ மெய்ப்பொருளை நிர்க்குண பிரம்மம் என் கின்றனர். ஆனால் சகுண பிரம்மம் என்றும் நிர்க்குண பிரம்மம் என்றும் இரண்டு வஸ்துக்கள் இல்லை என்பதை யாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பிரம் மமே அனைத்துமாய் உள்ளார். அவருக்கு அன்னியமாக இரண்டாவது வஸ்து இல்லை. அப்படியானால் அந்த ஒரே பொருளை சகுண பிரம்மம் என்றும் நிர்க்குண பிரம்மம் என்றும் இரண்டாகப் பாகுபடுத்திப் பேசுவானேன் என்கிற கேள்வி வரலாம். நிர்க்குண பிரம்மத்தை எல்லாராலும் கிரகித்துக்கொள்ளமுடியாது. இதற்குப் பொருந்திய உப

மானம் ஒன்றை எடுத்துக்கொள்வோம். சூரியனிடத்திருந்து வெளிச்சம் வருகிறது. இந்த வெளிச்சத்தை நேரே கண்ணால் பார்க்கமுடியாது. ஏதேனும் ஒரு பொருளின் மீது படிந்தால் அது நமக்கு விளங்குகிறது. இன்னும் அதே வெளிச்சத்தை ஒரு முப்பட்டைக் கண்ணாடியில் செலுத்தினால் ஏழு நிறங்களாக அது பிரிகிறது. இந்த ஏழு நிறங்களைக்கண்டு ரசிப்பது எல்லார்க்கும் எளிது. ஒன்றிலும் படியாது வருகிற மூல வெளிச்சத்தைக் கிரகித்துக் கொள்ள எல்லார்க்கும் இயலாது. அந்த மூல வெளிச்சம் போன்றவர் நிர்க்குண பிரம்மம். பல நிறங்களாகப் பிரிந்துள்ள வெளிச்சம் போன்றவர் சகுண பிரம்மம் அல்லது ஈசுவரன். பக்தன் தன்னுடைய உபாசனைக்கு ஈசுவரன் அல்லது பகவானையே தெரிந்து எடுத்துக்கொள்கிறான். அண்டங்கள் அனைத்தையும் அவர் ஆண்டு வருகிறார் என்னும் கோட்பாடு பக்தனுக்குப் பரமதிருப்தியைத் தருகிறது. மற்றொரு உபமானத்தைக் கொண்டும் நிர்க்குண பிரம்மம், சகுண பிரம்மம் ஆகிய ஒரு பொருளின் இரு பாங்குகளை நாம் அறிந்துகொள்ளலாம். நிர்க்குண பிரம்மத்தைக் களிமண்ணோடு ஒப்பிடலாம். அது மூல வஸ்து. களிமண்ணினின்று விதவிதமான பாண்டங்களை வனையலாம். மூல வஸ்துவாகிய களிமண் ஒன்றேயாம். ஆனால் அதினின்று உண்டாயிருக்கின்ற பாண்டங்களோ ஒன்றுக்கொன்று வேறுபட்டிருக்கின்றன. அவைகள் படைத்துள்ள நாம ரூபங்களைக்கொண்டே ஒரு பொருளினின்று மற்றொரு பொருளைப் பிரித்து வைத்துப் பேச நமக்கு இயலுகிறது. அப்பாண்டங்களையெல்லாம் வனைந்தெடுப்பதற்கு முன்பு அவையாவும் களிமண் சொரூபமாய் இருந்தன. களிமண் என்னும் கோட்பாட்டின்படி அவையாவும் ஒரே பொருள். ஆனால் நாம ரூபத்தை எடுத்தான பிறகு அந்த

நாம ரூபம் நிலைத்திருக்கும் பரியந்தம் ஒரு பாண்டம் மற்றொரு பாண்டம் ஆகமுடியாது. அவை ஒன்றுக்கொன்று பேதப் பட்டவைகளாம். களிமண்ணால் செய்யப்பட்ட சுண்டெலி களிமண்ணால் செய்யப்பட்ட யானையாகாது. வடிவங்களில் அவை தோற்றத்துக்கு வந்தான பிறகு ரூபத்தை முன்னிட்டே அவைகள் ஒன்றோடொன்று வேறுபட்டிருக்கின்றன. களிமண் என்னும் மூல வஸ்துவில் அவையாவும் ஒன்றேயாம். நிர்க்குண பிரம்மம் மூலப்பொருள். சகல கல்யாண குணங்களுடனும் நாம ரூபங்களுடனும் தோற்றத்துக்கு வருவது அவருக்கு சாத்தியமாகிறது. தோற்றத்துக்கு வந்துள்ள நிலையில் அவரை ஈசுவரன் என்று இயம்புகிறோம். இத் தத்துவத்தை இன்னொரு முறையிலும் பகரலாம். மனதைக் கருவியாக வைத்துக்கொண்டு மனிதன் பொருள்களைப் புலப்படுத்துகிறான். தூய மனதைக் கருவியாக வைத்துக் கொண்டு புறப்பொருளைப் புலப்படுத்துங்கால் அது உலகமாகத் தென்படுவதில்லை. அக்காட்சியில் தென்படுபவரை ஈசுவரன் என்று சொல்லுகிறோம். மனதால் கிரகிக்கப்படுபவைகள் அனைத்திலும் மிக மேலானது எதுவோ அத்தத்துவத்தை ஈசுவரன் என்று அழைக்கலாம். சிருஷ்டிக்குத் துவக்கமும் இல்லை, முடிவும் இல்லை; யாண்டும் அது நிகழ்ந்துகொண்டேயிருக்கிறது. ஆதலால் அதற்குத் தலைவனாய் உள்ள ஈசுவரனும் நித்தியப் பொருளாம்.

தாம் இயற்றியுள்ள பிரம்ம சூத்திரங்களின் நான்காவது அத்தியாயத்தின் நான்காவது பாதத்தில் முக்தியடைந்த ஜீவாத்மன் ஒருவனுக்கு அனந்த சக்தியும் அனந்த ஞானமும் உண்டாகின்றன வென்று வியாச பகவான் பகர்ந்துள்ளார். அதே வேளையில் மற்றொரு முக்கியமான கருத்தையும் அவர் தெரிவித்திருக்கிறார். முக்த புருஷன் ஒருவனுக்குப் பேராற்

றலும் பேரறிவும் உண்டாகின்றன வெனினும் பிரபஞ்சத்தை சிருஷ்டித்தல், ஆளுதல், திரும்பவும் அதை ஒடுக்குதல் போன்ற சக்திகள் ஜீவன் முக்தனுக்கு வருவதில்லை. ஏனென்றால் ஆக்குதல், காத்தல், அழித்தல் ஆகிய செயல்கள் அலாதியாக ஈசுவரனுக்கே உரியவைகளாம். இந்த சூத்திரத்துக்கு விளக்கம் கொடுக்கின்றபொழுது துவைத மதவாதிகளுக்குத் தங்களுடைய கொள்கைகளை நிலைநாட்டுதற்கு ஆதரவு மிகக் கிடைக்கிறது. யாண்டும் ஈசுவரனைச் சார்ந்திருக்கின்ற ஜீவாத்மன் ஒருவனுக்கு அனந்த சக்தியும் ஈசுவரனைச் சார்ந்திருக்கிற நிலைக்கு அப்பால் செல்லுவதும் ஒருபொழுதும் சாத்தியமல்ல என்பதை அவர்கள் ஆழ்ந்து வற்புறுத்துகின்றனர். துவைதமதவாதிகளுள் தலைசிறந்தவர் மத்வாச்சாரியர். முக்தி நிலையிலும் ஜீவாத்மன் பரமாத்மனையே சார்ந்திருக்கிறான் என்று அவர் வற்புறுத்திக் கூறுகிறார். தம்முடைய கொள்கைக்குப் பிரமாணமாக வராக புராணத்திலிருந்து அவர் மேற்கோள் எடுத்து மொழிகின்றார்.

இதே சூத்திரத்துக்கு ஸ்ரீ ராமானுஜாச்சாரியர் தமது சம்பிரதாயத்துக்கு ஒப்ப வியாக்கியானம் தருகிறார். அவர் பகர்வதாவது: "முக்த புருஷர்களுக்கு உண்டாகின்ற சக்திகளுள் ஈசுவரனிடத்திலுள்ள விசேஷ சக்திகள் எல்லாம் அவர்களுக்கும் உண்டாகின்றனவா, என்னும் ஐயம் எழுகிறது. ஜகத்தை சிருஷ்டி செய்வது, அதை ஆளுவது முதலியன சகுண பிரம்மமாகிய ஈசுவரனுக்கே உரிய விசேஷ சக்திகள் ஆகின்றன. முக்தியடைந்திருக்கிறவர்களுக்கு இந்த ஈசுவரனை சாக்ஷாத்காரம் பண்ணுவது ஒன்றுதான் அமைகிறதா, அல்லது அதற்கு மேல் தெய்விக மகிமைகள் அவர்களுக்கு உண்டாகின்றனவா என்னும் கேள்வியும் எழுகிறது. முக்தி

யுடைந்திருக்கிறவர்களுக்கு வாய்க்கின்ற மேன்மைகளைக் குறித்துச் சிலர் பகர்வதாவது: 'முக்த புருஷன் ஒருவனுக்கு ஆசைகளனைத்தும் நிறைவேறப் பெறுகின்றன. அவனுக்கு சர்வேசுவரனோடு சாயுஜ்யம் உண்டாகிறது. இத்தகைய பெருநிலை அவனுக்கு வந்து அமைந்துவிடுவதால் அகிலாண்டத்துக்கும் அவன் அதிபதியாய் விடலாம் என்று முடிவு கட்டுவது யுக்திக்கு முற்றிலும் பொருத்தமானது. சாயுஜ்யத்தை அடைந்திருப்பவன் ஒருவன் சர்வேசுவரனிடம் முற்றிலும் ஒன்றுபடுகிறான். சாயுஜ்யம் என்பதற்கு இதுவே பொருள். மேலும் அத்தகைய முக்த புருஷனுக்கு ஆசைகள் அனைத்தும் நிறைவேறப்பெறுகின்றன. அண்டங்கள் அனைத்தையும் ஆளுதல் என்னும் வாய்ப்பிலேதான் ஆசைகள் யாவும் நிறைவேறப் பெறுகின்றன. எனவே சாயுஜ்ய நிலையை அடைந்து ஆசைகள் அனைத்தையும் பூர்த்திபண்ணுகிற நிலை சர்வேசுவரனுடைய பெருநிலைக்கு நிகராய் விடுகிறது. இந்தப் போக்கில் யூகிப்பது பொருத்தமானதாகத் தென்படலாம் எனினும் இதற்கு மறுப்புச் சொல்லவேண்டியது அவசியமாகிறது. முக்த புருஷன் ஒருவனுக்கு அண்டங்களை ஆளுகிற ஒரு செயல் நீங்கலாக ஏனைய ஆற்றல்கள் எல்லாம் வந்து அமைகின்றனவென்று எடுத்துக்காட்டுவது அவசியமாகிறது. அண்டங்களை ஆளுதல் என்னும் கோட்பாட்டுக்குப் பொருள் என்ன என்பதையும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். சரம் அசரம், சேதனம் அசேதனம் ஆகிய அனைத்தினுடைய வடிவங்களை அமைத்துத் தருவதும், உயிர்வாழ்க்கையை முறையாக நடாத்துவதும், அத்தனை உயிர்வகைகளினுடைய ஆசைகளையெல்லாம் படிப்படியாக நிறைவேற்றிவைப்பதும் ஈசனுடைய செயல் ஆகிறது. அப்படிச்செய்வதாலேயே அவர்

அண்டங்களையெல்லாம் ஆளுகிறார் என்று இயம்புகிறோம். இந்தப் பெரிய பொறுப்பும் செயல் திட்டமும் முக்தியடைந்துள்ள ஒருவனுக்கு வந்து அமைவதில்லை. முக்தியடைந்துள்ள ஒருவனுடைய உள்ளத்தினின்று அக்ஞானத் திரைகள் யாவும் அகற்றப்படுகின்றன. ஆதலால் சர்வேசுவரனை இடையறாது சாக்ஷாத்கரித்துக் கொண்டிருப்பது முக்த புருஷன் ஒருவனுக்குச் சாத்தியமாகிறது. ஈசனுடைய திருக்காட்சியினின்று அவனுக்கு உலப்பில்லாப் பேரானந்தம் கிட்டுகிறது. அதில் அவன் திருப்தியடைந்திருப்பதால் ஆசைகள் அனைத்தும் அவனுக்கு நிறைவேறப் பெறுகின்றன என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அண்டங்களை ஆளும் பொறுப்போ ஆற்றலோ முக்த புருஷனுக்கு உண்டாவதில்லை. இதற்கேற்ற சாஸ்திரப் பிரமாணமும் இருக்கிறது.

यतो वा इमानि भूतानि जायन्ते येन
जातानि जीवन्ति यत् प्रयन्त्यभि संविशन्ति
तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति ।

யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேன
ஜாதானி ஜீவந்தி யத் ப்ரயந்த்யபி ஸம்விசந்தி
தத்விஜிஞ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி

யாரிடத்திருந்து இவ்வுயிர் வகைகள் அனைத்தும் தோன்றியிருக்கின்றனவோ, யாருடைய ஆதரவைக்கொண்டு இந்த உயிர்வகைகள் அனைத்தும் ஜீவித்திருக்கின்றனவோ, யாரிடத்து அவையாவும் திரும்பப்போய் ஒடுங்கி விடுகின்றனவோ, அப்படி ஒடுங்கிய உயிர்கள் யாரிடத்திலிருந்து திரும்பவும் தோன்றி வருகின்றனவோ அப்பரம புருஷனே பிரம்மம். அண்டங்களை ஆளுதல் போன்ற இத்தகைய தன்மைகள் எல்லாம் முக்த புருஷன் ஒருவனுக்கும் வந்து

அமையுமாகில் சாஸ்திரத்தில் இங்ஙனம் இயம்பியிருப்பது பிரம்மத்துக்கு விளக்கமாகாது போய்விடும். அண்டங்களை ஆளுவதாலேயே அவர் ஈசுவரன் என்று இயம்பப்படுகிறார். முக்த புருஷர்களும் அண்டங்களை ஆளுகிறார்கள் என்றால் ஈசுவரனுடைய தனிச்செயல் ஒன்றும் இல்லாது போய் விடுகிறது. அவருக்கென்று அமைந்துள்ள விளக்கமும் பொருளற்றதாய்ப்போகிறது. ஒவ்வொரு வஸ்துவுக்கும் சிறப்பாக அமைந்துள்ள விளக்கம் ஒன்று இருக்கிறது. சகுண பிரம்மம் அல்லது ஈசுவரனைக் குறித்துப் பகர்ந்துள்ள சாஸ்திரப் பிரமாணங்கள் பல இருக்கின்றன. "அன்புக் குரிய இளையோய், துவக்கத்தில் தன்னந்தனிப் பொருள் ஒன்று இருந்தது. அதையன்றி இரண்டாம் பொருள் இல்லை. அத்தனிப் பொருள் உணர்வதாயிற்று: 'பலவற்றை நான் உண்டுபண்ணுவேன்.' அது வெப்பத்தைத் தோற்று வித்தது. துவக்கத்தில் பிரம்மம் ஒன்றே இருந்தது. அந்த ஒரு பொருள் தன்னைப் பலவாகத் தோற்றுவித்துக்கொண்டது. க்ஷேத்திரம் என்னும் பாராட்டுதற்குரிய வடிவத்தை அது தோற்றுவித்தது. வருணன், சோமன், ருத்திரன், பர்ஜன் யன், யமன், மிருத்யு, ஈசானன் ஆகிய தேவதைகள் யாவும் க்ஷேத்திரங்கள் ஆகின்றன. துவக்கத்தில் ஆத்மன் ஒரு வரே இருந்தார்; அவைதற்கு வேறு ஒன்றும் இல்லை; உலகத் தைத் தோற்றுவிக்க அவர் எண்ணங்கொண்டார்; பிறகு அவர் உலகத்தைத் தோற்றுவித்தார். நாராயணன் ஒரு வரே இருந்தார். பிரம்மாவோ, ஈசனோ ஆங்கு இல்லை. தியாவா – பிருதிவியோ, நக்ஷத்திரங்களோ, அப்புவோ, அக்னியோ, சோமனோ, சூரியனோ அப்பொழுது இல்லை. தனித்திருப்பதில் அவர் இன்பம் பெறவில்லை. தியானத்தில் இருந்துவிட்டு அவர் புதல்வி ஒருத்தியைப் பெற்றார்; பத்து

இந்திரியங்கள் முதலியவைகளையும் அடைந்தார். இன்னும் சில சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதாவது: 'பூமியில் வசித்திருக்கிறார் எனினும் அவர் பூமிக்கு அன்னியமானவர். அவர் ஆத்ம சொரூபமாகவே இருக்கின்றார். இத்யாதி—அண்டங்களை ஆண்டுவருகிற செயலை ஈசுவரன் ஒருவரே செய்கிறார் என்று சுருதிகள் சொல்லுகின்றன........' இங்ஙனம் அண்டங்களை ஆளுவதைப் பற்றிய விளக்கங்களிலே முக்த புருஷன் எத்தகைய ஸ்தானத்தையாவது பெற்றிருப்பதாகப் பேச்சு ஏதும்கிடையாது. முக்தியடைந்துள்ள ஆத்மா அண்டங்களை ஆண்டுவருகிறான் என்ற விளக்கத்தை நூல்களில் எங்கும் காணமுடியாது.'' இங்ஙனம் ராமானுஜர் ஈசுவரனுக்கும் முக்த புருஷனுக்கும் இடையிலுள்ள வித்தியாசத்தைத் தெளிவு படுத்துகிறார்.

நாட்டை ஆளும் அரசன் போன்றவர் ஈசுவரன். ராஜகுமாரன் போன்றவன் முக்த புருஷன். ராஜகுமாரனுக்கு நாட்டை ஆளும் பொறுப்பு இல்லை. அதைப்பற்றி அவன் கவலையற்றிருப்பதே அவனுடைய பேரானந்தப் பெருநிலையாகும். முக்த புருஷனுக்கு வேண்டியவைகளையெல்லாம் ஈசன் கொடுக்கிறார். முக்த புருஷன் வேண்டுவது யாது? ஈசுவரனுடைய சான்னித்தியத்தில் இருப்பதையும் அவருடைய அருளுக்குப் பாத்திரமாவதையும் தவிர வேறு எதையும் அவன் நாடுவதில்லை. இனி, முக்த புருஷன் பந்தத்தில் இருந்தபொழுது அவனுடைய சக்தி தடைப்பட்டுக் கிடந்தது. முக்தி நிலையில் அவனுக்கு சக்தி மிக உண்டான பிறகு சிருஷ்டிச் செயலில் ஈடுபட்டால் ஒருவேளை ஈசனுடைய திட்டத்துக்கே இடுக்கண் வந்துவிடலாம். முக்த புருஷர்கள் பலர் அப்போதைக்கப்போது உண்டாய்க் கொண்டிருக்கின்றனர். அவர்கள் எல்லாரும் அவரவர்

போக்கில் சிருஷ்டி பண்ண ஆரம்பித்தால் எல்லாம் குழப்பமாய்விடும். எனவே சிருஷ்டித் தொழில் போன்றது ஈசுவரனுக்கே உரியது; முக்த புருஷர்களுக்கு அது உரியதன்று.

முக்த புருஷனைப் பற்றிய பேச்சு அதற்கடுத்த சூத்திரங்களிலும் வருகிறது. பிரம்மத்திடத்திலிருக்கிற மகிமைகளோடு கூடியவனுக முக்தியடைந்த ஆத்மன் இருக்கிறுன். இங்ஙனம் ஜைமினி மேற்கோள்களை அந்த நூலினின்று எடுத்துக் காட்டிச்சொல்லுகிறுர். இந்த சூத்திரத்துக்கு ஸ்ரீ ராமானுஜாச்சாரியர் தம் போக்கில் வியாக்கியானம் செய்கிறுர். முக்த புருஷனுக்கு பிரம்மத்திடத்திலுள்ள மகிமைகள் எல்லாம் வந்து அமைவதில்லை என்பதற்கு வேண்டியவாறு பிரமாணங்கள் வேதங்களில் இருக்கின்றனவென்று அவர் பகர்கிறுர். முக்த புருஷன் அடைந்திருக்கிற மகிமைகள் எல்லாம் சிறு தெய்வங்கள் படைத்துள்ள பெருமைகளுக்கு ஒப்பானவைகள் ஆகின்றன என்பது அவருடைய கருத்து. ஈசுவரனுக்கும் முக்த புருஷனுக்கும் சம அந்தஸ்து எவ்விதத்திலும் வந்து வாய்ப்பதில்லை என்பதை அவர் மிகப்பொருத்தமாக எடுத்துக்காட்டுகிறுர். அவருடைய கோட்பாட்டின்படி ஒரு சரீரத்தில் பல அங்கங்கள் இருப்பதுபோன்று ஜீவர்கள் அனைவரும் ஈசுவரனுடைய அங்கங்களாகவும், அம்சங்களாகவும் அமைந்திருக்கிறுர்கள். ஈசுவரனுக்கு அன்னியமாக அவர்களுக்குத் தனி வாழ்க்கையோ, வியக்தியோ கிடையாது. எனினும் சரீரத்தில் ஒவ்வொரு அங்கத்துக்கும் தனி வியக்தி இருப்பதுபோன்று ஆத்மாக்கள் ஈசுவரனை சார்ந்திருப்பதற்கிடையில் அந்தந்த ஆத்மாவுக்குரிய தனி வியக்தி சர்வ காலமும் இருந்து வருகிறது என்பது அவருடைய கோட்பாடு. ஆத்மாக்களுக்குத் தனி வியக்தி சாசுவதமாக உண்டு என்று பகர்வதன் மூலம் ராமா

னுஜருடைய கோட்பாடு துவைத மதத்துடன் ஒருவிதத்தில் ஒத்திருக்கிறது. ஆனல் இந்த ஜீவர்கள் அனைவரும் ஈசுவர னுடைய அம்சங்களாக ஈசுவரனிடம் அடங்கியிருப்பதனல் அக்கோட்பாடு அத்வைதத்தை ஒத்திருக்கிறது. துவைதத் துக்கும் அத்வைதத்துக்கும் இடை நிலையில் ராமானுஜரு டைய கொள்கை இருப்பதால் அது விசிஷ்டாத்வைதம் என்று பகரப்பெறுகிறது. அவருடைய கொள்கையின்படி முக்தி யடைந்திருக்கிற ஆத்மனுக்கும் ஈசுவரனுக்குமிடையில் வேற்றுமை மிக இருக்கிறது என்பது சந்தேகத்துக்கு இட மில்லாது நன்கு விளக்கப்படுகிறது.

ஈசுவர தத்துவத்தைப்பற்றி அத்வைத மதவாதிகளுள் மிக முத்கியமானவரான சங்கராச்சாரியர் என்ன பகர்கிரு ரென்பதை நாம் இப்பொழுது ஆராய்ந்து பார்ப்போம். கடவுள் நம்மைக் காப்பாற்றுகின்ருர்; நாம் அவருக்கு அடிமைப்பட்டிருக்கின்ருேமென்று துவைதமதவாதிகள் புகட்டுகின்ற கொள்கைகளை அத்வைத மதமானது ஏற்றுக் கொள்கிறது. துவைதிகள் கொண்டுள்ள நம்பிக்கைகளையும் அருள் நாட்டங்களையும் அத்வைத மதம் அங்கீகரிக்கிறது. அக்கொள்கைகளைக் கண்டித்துப் பேசுதல் அத்வைத மதத் தின் போக்கு அன்று. அதற்கிடையில் மானுட வாழ்க்கை யின் முடிவான குறிக்கோள் யாது என்பதைத் தெளிவுபட விளக்கிக்காட்ட அத்வைதமதம் முயலுகிறது. தெய்வீகத் தைத் தன்னிடத்திலேயே படைத்துள்ள மானுட வர்க்கம் எத்தகைய மகோன்னத நிலைக்குப்போக முடியுமென்பதை யுக்தி பூர்வமாக அது விளக்கிக் காட்டுகிறது. முக்தியடைந் தான பிறகும் தங்களுடைய ஜீவபோதத்தைக் கலைத்து விடாது வைத்திருக்க துவைத மதவாதிகள் விரும்புகின்ற னர். தாங்கள் வேறு, தங்களை ஆளுகின்ற ஈசுவரன் வேறு

என்கின்ற கொள்கையில் அவர்கள் ஊறியிருக்கின்றனர். அத்தகைய எண்ணம் படைத்திருக்கிறவர்கள் ஈசுவரன் அல்லது சகுண பிரம்மத்தின் சந்நிதியிலிருந்துகொண்டு அவரிடத்திருந்து வருகின்ற அனுக்கிரகத்தையும் பேரானந்தத்தையும் அனுபவித்துக் கொண்டிருப்பது சாத்தியம் என்னும் துவைத மதவாதிகளுடைய சித்தாந்தத்தை அத்வைத மதம் ஆமோதிக்கிறது. முக்தியடைந்துள்ள இத்தகைய புண்ணிய புருஷர்களைப் பற்றி பாகவத புராணம் பகர்வதாவது: "வேந்தே, ஆத்மானந்தத்தில் திளைத்திருப்பவர்களும், பந்தபாசங்களிடத்திருந்து விடுபட்டிருப்பவர்களுமான முனிவர்களும் சர்வேசுவரனிடத்துள்ள கல்யாண குணங்களைப் பேரன்புடன் போற்றிப் பாராட்டுகிறார்கள்." இங்ஙனம் ஈசுவரனுடைய சந்நிதியை அடையப்பெற்றுள்ள சான்றோர்களைக் குறித்து சாங்கிய சாஸ்திரம் இன்னொரு போக்கில் பகர்கிறது. ஆறு சாஸ்திரங்களுள் ஒன்றாகிய சாங்கிய சாஸ்திரம் இயற்கையின் கண்ணுள்ள தத்துவங்களை விளக்குகிறது. ஈண்டு இயம்பப் பெற்றுள்ள முக்த புருஷர்களைப் பிரகிருதிலயம் அடையப் பெற்றவர்களென்று சாங்கிய சாஸ்திரம் சொல்லுகிறது. இப்பொழுது தோன்றிக் கொண்டிருக்கிற பிரபஞ்சத்துக்குப் பிரளயம் வருகின்ற பொழுது இத்தகைய முக்த புருஷர்களும் இயற்கையோடு ஒன்றாக அதில் ஒடுங்கி விடுகின்றனர் என்று இந்த சாஸ்திரம் சாட்டுகின்றது. பின்பு மற்றொரு சிருஷ்டி உண்டாகின்ற பொழுது பிரகிருதிலயம் அடையப்பெற்ற இந்த மேன்மக்கள் வெவ்வேறு அண்டங்களுக்கு அதிபதிகளாகத் தோன்றி வருகின்றனர் என்றும் இந்த சாஸ்திரம் இயம்புகிறது. ஆயினும் பிரகிருதிலயம் அடையப்பெற்றுள்ள இந்த மேலோர்கள் ஈசுவரனுடன் சம அந்தஸ்தைப் பெறுவதில்லை.

துவைதமதம் புகட்டுகிற பதவி முக்திக்கும் சாங்கிய சாஸ்திரம் புகட்டுகின்ற பதவிகளுக்கும் அப்பாற்பட்ட நிலை ஒன்று உண்டு என்று அத்வைதமதம் புகட்டுகிறது. அந்த அதீத நிலையில் சிருஷ்டித்தொழிலும் சிருஷ்டிக்கப்படுகின்ற பொருளும் சிருஷ்டி கர்த்தாவும் இல்லை. அந்த அதீத நிலையில் ஞாதா, ஞேயம், ஞானம் என்னும் திரிபுடிகள் இல்லை. அதாவது காண்போன், காணப்படுபொருள், காட்சி என்னும் மூவித வேற்றுமைக்கு ஆங்கு இடமில்லை. அந்த அதீத நிலையில் நான், நீ, அவன் என்பனவற்றிற்கும் தன்மை, முன்னிலை இவையிரண்டிற்கும் இடையிலுள்ள தொடர்பு என்னும் கோட்பாட்டுக்கும் இடமில்லை. அந்த அதீத நிலையில் யார் யாரைக் காண்பது? இத்தகைய அனுபூதியடையப் பெற்றவர்கள் வியாவஹாரிக நிலைகள் யாவையும் கடந்தவர்களாகின்றனர். மனமும் மொழியும் அந்த அதீத நிலையை எட்டமாட்டா. அந்த அதீத நிலையை வாக்கால் விளக்கமுடியாது. எனவே அதை இன்னதென்று விளக்க முயலுகின்ற சுருதிகள் இதுஅல்ல, இது அல்ல என்று உலகப் பொருள்கள் யாவையும் நீக்கிவிட முயலுகின்றன.

அந்த அதீத நிலையில் தனது ஜீவபோதத்தைக் கலைத்துவிட்டுப் பரபோதத்தில் ஒன்றித்துவிடுவது ஜீவனுடைய முடிவான குறிக்கோள். ஆனால் இப்பெரு நிலையை எய்த எல்லார்க்கும் இயலுவதில்லை. ஆத்ம சாதகர்களில் பலர் அந்த நிலையையடைய மறுத்து விடுகின்றனர். அவர்களுடைய மனப்பான்மையை ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சொல்லின் மூலம் விளக்கலாம். பக்தன் ஒருவன் சர்க்கரையைச் சுவைக்க விரும்புகிறான். தானே சர்க்கரையாக அவன் விரும்புவதில்லை. ஆத்ம சாதகர்களுள் பலர் சர்வேசுவரனோடு நெருங்கிய இணக்கம் கொள்ள விரும்பு

கின்றனர். பரம் பொருளில் லயமாய்விட அவர்கள் விரும்புவதில்லை.எனவே நிர்க்குண பிரம்மத்தைப் பற்றிய ஆராய்ச்சியும் அதில் இரண்டறக் கலத்தலும் அவர்களுடைய நோக்கமல்ல. ஈசுவரன் அல்லது சகுண பிரம்மத்தின் காட்சியிலேயே அவர்கள் பேரானந்தம் எய்துகின்றனர். அப்படி ஈசுவரனுடைய சான்னித்தியத்திற்கு முதன்மை தருகின்றபொழுது ஜீவாத்மாவுக்கும் ஜகத்துக்கும் ஆங்கு இடமுண்டு. சகுண பிரம்மத்திடத்து ஜகத், ஜீவன், ஈசுவரன் ஆகிய முப்பொருளுக்கும் இடமுண்டு. பக்தர்களுள் தலைசிறந்தவனாகிய பிரஹலாதனுடைய அனுபவம் ஒன்றை ஈண்டு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்வோம். அவனுக்கு பக்திப்பெருக்கு அதிகரித்தபொழுது அவன் தன்னையே மறந்துவிட்டான். அதாவது அந்த உயர்ந்த அனுபவ நிலையில் அவனுடைய ஜீவபோதம் அகன்று விட்டது. ஜீவபோதம் மறைந்து போனவிடத்து ஜகத்தும் அதற்குக் காரணமாயிருக்கின்ற ஈசுவர தத்துவமும் மறைந்து போய்விட்டன. அகண்டாகாரப்பெரு நிலையே எஞ்சியிருந்தது. நாமரூபங்களால் பேதம் அடைகின்ற பொருள்கள் ஆங்கு இல்லை. அப்பொழுது அவன் நிர்க்குண பிரம்மத்தில் ஒன்றுபட்டு விட்டான். ஆனால் அந்த அதீத நிலையை விட்டுச் சற்று கீழே இறங்கிவந்ததும் அவனுக்கு ஜீவபோதம் உண்டாயிற்று. தன்னைப் பிரஹலாதன் என்று அவன் உணர்ந்தான். அந்த உணர்ச்சியைத் தொடர்ந்தே ஜகத்தினுடைய காட்சியும் அவனுக்கு வந்தது. பின்பு ஜகத் ஜீவன் ஆகிய இவ்விரண்டுக்கும் தலைவனாயிருக்கும் ஈசுவரனுடைய காட்சியும் அவனுக்கு வந்தது. அனந்த கல்யாண குணங்களையுடைய கருணைகரக் கடவுளாக அவ்வீசுவரன் அவனுக்கு அப்பொழுது தோன்றினார். பிரஹலாதன் அடைந்திருந்த அதே அனுபவத்தை பிருந்தாவனத்தில்

வசித்திருந்த பாக்கியவதிகளாகிய கோபிமார்களும் பெறலாயினர். பிரேமை பக்தியின் பெருக்கால் தங்களுடைய ஜீவ போதத்தை அவர்கள் கடந்துவிட்டனர். அவர்களத்தனை பேரும் அத்தனை கிருஷ்ண சொரூபங்களாக மாறலாயினர். அந்த நிலையில் வழிபடும் தெய்வம் என்றும் வழிபாடு செய்கின்ற பக்திமதிகளென்றும் தங்களை வேற்றுமைப் படுத்திக் கொள்கின்ற உணர்ச்சி அவர்களிடத்து இல்லாதுபோய் விட்டது. அந்த உயர் நிலையை விட்டுப் பிறகு அவர்களுடைய மனம் சற்றுக் கீழ்நிலைக்கு இறங்கியது. தங்கள் வழிபடு தெய்வமாகிய கிருஷ்ணனைப்பற்றிய உணர்வு உடனே அவர்களுக்கு உண்டாயிற்று. அப்பொழுது அவர்கள் கிருஷ்ணனை உபாசிக்கின்ற கோபிமார்களாகத் தங்களை உணர்ந்தனர்.

तासामाविरभूच्छौरिः स्मयमानमुखाम्बुजः
पीताम्बरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः ॥

தாஸாமாவிர பூச்செளரி:
ஸ்மயமான முகாம்புஜ:
பீதாம்பரதர: ஸரக்வீ
ஸாக்ஷான் மன்மத மன்மத:

"தாமரை மலர்போன்ற முகத்தையுடைய கிருஷ்ணன் புன்னகை பூத்தவனாக அவர்கள் முன் தோன்றினான். அவன் மஞ்சள் பட்டு தரித்தவனாகவும், மாலைகளணிந்தவனாகவும் தென்பட்டான். அழகில் அவன் மன்மதனையே வெல்லுபவனாகத் தோன்றினான்."

சங்கராச்சாரியருடைய கொள்கையை இனி ஆராயப் புகுவோம். ஈசுவரன் அல்லது சகுணப்பிரம்மத்தை உபாசிக்கின்றவர்களுக்கு அந்த ஈசுவரனோடு சேர்ந்திருத்தல் என்

னும் பதவி கிட்டுகிறது. உபாசிப்பதற்கான மனதும் அவர்களிடத்து நிலைத்திருக்கிறது. அத்தகைய நிலையைப் பெற்றிருக்கின்றவர்களுக்குக் கிடைத்துள்ள ஈசுவர விபூதி எல்லையில் அடங்கியதா அல்லது எல்லையில் அடங்காததா என்னும் கேள்வி பிறக்கிறது. எல்லையில் அடங்காத மகிமைகள் அத்தகைய பதவி முக்த புருஷர்களுக்குக் கிட்டுகிறதென்று சகுணபிரம்ம உபாசனை செய்கின்றவர்கள் பகர்கிறார்கள். அதற்கேற்ற சாஸ்திரப் பிரமாணங்களையும் அவர்கள் எடுத்து இயம்புகின்றனர். 'தங்களுக்குரிய ஸ்வராஜ்ய சித்தியை அவர்கள் பெறுகிறார்கள்; தேவர்களனைவரும் அந்த முக்த புருஷனுக்கு வந்தனை வழிபாடு செலுத்துகின்றனர்; எல்லா உலகங்களிலும் அந்த முக்த புருஷர்களுடைய ஆசைகள் நிறைவேறப் பெறுகின்றன.' இங்ஙனம் அவர்கள் எடுத்துக் காட்டுகின்ற சாஸ்திரப் பிரமாணங்களுக்கு வியாஸர் விடை கொடுக்கிறார்: 'அண்டங்களை ஆளுகிற சக்தி அந்த முக்த புருஷர்களுக்கு வருவதில்லை. அண்டங்களை ஆக்குதலும், நிலைபெறச் செய்தலும், அழித்தலுமாகிய சக்திகள் நீங்கலாக அணிமா, மஹிமா போன்ற அஷ்டசித்திகளும், ஏனைய வல்லமைகளும் அந்த முக்த புருஷர்களுக்கு உண்டாகின்றன. பின்பு அண்டங்களை ஆளுகிற பொறுப்போ யாண்டும் பரிபூரணனாகிய ஈசுவரனுக்கே உரியதாகிறது. நாம் ஏன் அப்படிப் பகரவேண்டும்? ஏனென்றால் அவர் ஒருவரே அண்டங்கள் யாவையும் சிருஷ்டிக்கவும், ஆளவும் செய்கிறாரென்று சாஸ்திரங்கள் அனைத்தும் ஒன்றுகூடி முறையிடுகின்றன. அப்படி அண்டங்களை ஆளுதல் முக்த புருஷர்களுடைய செயல் என்று சாஸ்திரங்களில் எந்த இடத்திலாவது சொல்லப்படவில்லை. அண்டங்கள் யாவையும் ஆளுகிற செயலில் சர்வேசுவரன்

ஒருவரே ஈடுபட்டிருக்கிருர். சாஸ்திரங்களில் எந்த இடத்திலாவது சிருஷ்டியைப் பற்றிய பேச்சு வருமாகில் அது ஈசுவரனுடைய செயல் என்கின்ற முடிவே அந்நூல்களில் வந்துள்ளன. என்றைக்கும் ஈசுவரன் பரிபூரணன் என்கிற கோட்பாடும் சாஸ்திரங்களுள் வந்திருக்கிறது. பின்பு முக்த புருஷர்கள் பெறுகின்ற அணிமா, மஹிமா போன்ற சித்திகள் சர்வேசுவரனை ஆராதிப்பதாலேயே உண்டாகின்றன என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. எனவே அண்டங்களை ஆளுதல் என்கின்ற செயலில் முக்த புருஷர்களுக்கு இடமில்லை. அண்டங்களை ஆளுதற்குப் பதவி முக்தியடைந்துள்ள அப்புருஷர்களுக்கு அதிகாரம் இல்லை என்பதற்கு வேறு ஒரு காரணமும் இருக்கிறது. அவர்களனைவர்க்கும் அவரவர்க்குரிய மனது உண்டு. எனவே மனதின் துணை கொண்டு அவர்கள் பூணுகிற இச்சைகளுள் வேறுபாடு உண்டாகலாம். முக்த புருஷன் ஒருவன் சிருஷ்டி பண்ண விரும்புகின்றபொழுது மற்ருெரு முக்த புருஷன் சம்ஹாரம் செய்ய விருப்பம் கொள்ளக்கூடும். அத்தகைய வேறுபாடு அவர்களுக்கிடையில் ஏற்பட்டால் அண்டங்களின் நடைமுறையிலேயே குழப்பம் வந்துவிடும். உண்மையில் அத்தகைய குழப்பத்தை அண்டங்களின் நடைமுறையில் நாம் காண்கிரேமல்லோம். ஏனென்ருல் ஜீவபோதத்திலிருக்கின்றவர்கள் கொள்ளுகிற விருப்பங்கள் யாவும் சர்வேசுவரன் ஒருவருடைய ஆணைக்கு உட்பட்டு இருக்கின்றன. அவருடைய பெருந்திட்டத்துக்கு அன்னியமாக வேறு எந்த விதமான செயலையும் அந்த முக்த புருஷர்கள் செய்ய முடியாது. அவருடைய பெருந்திட்டத்துக்கு அன்னியமான போக்கில் எண்ணுதற்குக்கூட அவர்களுக்கு இயலாது. அவர்களுடைய சங்கல்பங்கள் யாவும் ஈசுவர சங்கல்பத்துக்கு உட்பட்டவைகளாகவே இருந்து வருகின்றன.'

பக்தி சாதனம் பண்ண விரும்புகிறவன் சகுண பிரம்ம மாகிய ஈசுவரனிடத்துத் தனது மனதைத் திருப்பவேண்டும்.

क्लेशोऽधिकतरस्तेषां अव्यक्तासक्तचेतसाम्

க்லேசோ அதிகதரஸ் தேஷாம்

அவ்யக்தாஸக்தசேதஸாம்

தேகாத்ம புத்தி படைத்திருக்கிறவர்களுக்கு நிர்க்குணபிரம் மத்திடத்து மனதைச் செலுத்துவது மிகக் கடினமானது. அனந்த கல்யாண குணங்களையுடைய சகுண பிரம்மத் திடத்து மனதைச் செலுத்துவது அவ்வளவு கடினமானது அன்று. ஏனென்ருல் ஈசுவரனுடைய வெவ்வேறு விபூதி களைப் பற்றி நினைக்கவும் பேசவும் பக்தனுக்குச் சாத்திய மாகிறது. சிரமம் ஒன்றுமில்லாது ஆத்ம சாதகன் பக்தியில் முன்னேற்றமடையவேண்டும். உடல் வளர்ச்சியில் எங்ஙனம் சிரமம் சிறிதேனுமில்லையோ பக்தியின் வளர்ச்சியிலும் அங் ஙனம் சிரமம் இருக்கலாகாது. ஒவ்வொரு மனிதனும் தனது இயல்புக்கேற்றவாறே பக்தி மார்க்கத்தில் மேல் நோக்கிச் செல்லலாம். நிர்க்குண பிரம்மத்தைப் பற்றி நாம் ஒன்றும் கருத்தில் வாங்கிக்கொள்ள முடியாது என்பது உண்மை. பின்பு நமக்குக் கட்புலனகின்ற பொருள்களை யெல்லாம் பற்றி நாம் உண்மையில் தெளிந்த அறிவைப் பெற்றுவருகின்ருேமா என்பது கேள்வி. ஐம்பொறிகளின் துணைகொண்டு அறியப்படுகின்ற பொருள்களையே நாம் முழுதும் தெரிந்து கொள்வதில்லை. அப்படியிருக்க மனம் மொழிக்கு எட்டாத பொருளை முற்றிலும் அறிந்துகொள்ள யாருக்குத்தான் இயலும்! உலகம் அறிந்துள்ள மனேதத்துவ ஆராய்ச்சிக்காரர்களுள் பகவான் கபில முனிவர் மேன்மை மிகப் பெற்றுள்ளவர். மனதிலுள்ள கூறுகளையெல்லாம் அவர் விளக்கிக் காட்டியிருக்கிற பிரகாரம் இதுவரையில்

வேறு யாரும் காட்டியது கிடையாது. புறவுலகிலிருக்கிற பொருள்களை யெல்லாம் ஐம்பொறிகளின் துணைகொண்டு நாம் அறிந்து கொள்கிறோம். அகவுலகிலிருக்கும் கருத்துக் களையெல்லாம் எண்ணங்களைக் கொண்டு நாம் பாகுபடுத்து கிறோம். அகம், புறம் ஆகிய இரண்டு விதமான உலகப் பொருள்களையெல்லாம் ஓர்மைப்படுத்துதற்கு மனதின்கண் உள்ள உணர்வு மிக முக்கியமானதென்பதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அந்த முனிவர் நமக்குத் தெளிவு படக் காட்டியிருக்கிறார். நம் உடல்களை நாம் உணர்ந்து கொள்ள முதன் முதல் கற்றுக்கொள்கிறோம். பிறகு புறத்தி லுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாக உணர்ந்து அறிந்துகொள்ள நாம் முயன்று வருகிறோம். அந்த முயற்சியில் நமக்கு வெற்றியும் மிகக் கிடைக்கிறது. புறப்பொருள்களை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நாம் அறிந்து கொள்கின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு அறியும் திறமை நம்மிடத்து வளர்ச்சியடைகிறது. அறியப்படு பொருள்கள் அனைத்திலும் மிக மேலானவர் ஈசுவரன். ஈசுவரனையே சாக்ஷாத்கரிக்க அல்லது அறிந்துகொள்ள நமக்கு இயலுகிறது. உடலை அறிந்து கொள்ளும் திறமை துவக்கத்தில் வருகிறது. ஈசுவரனை அறிந்து கொள்ளும் திறமை முடிவில் வருகிறது. ஏனைய பொருள்களை யெல்லாம் அறிதல் இவ்விரண்டுக்கும் இடை நிலையிலிருக்கிறது. ஆக இத்தனை விதமான உணர்வுகளெல்லாம் நமக்கு எப்படி வந்து அமைகின்றன வென்பதை கபில முனிவர் நன்கு விளக்கிக்காட்டியிருக்கிறார். ஓர்ந்து உணரும் தன்மை நமது உள்ளத்திலிருக்கிறது. உணரப்படும் பொருள்கள் புறவுலகி லிருக்கின்றன. உணரும் தன்மைக்கும், உணரப்படும் பொருளுக்கும் இணக்கம் ஏற்படுகின்ற பொழுதே பொருளை

அல்லது வஸ்துவை நாம் உணர்பவர் ஆகிறோம். இக்கோட்பாடு நமக்கு நன்கு விளங்குவதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். குழந்தை ஒன்று இருக்கிறது. அதற்குத் தாய் ஒருத்தி இருக்கிறாள். குழந்தையினுடைய உணர்ச்சியும் தாயினுடைய முன்னிலையும் சேர்ந்தே குழந்தைக்குத் தாயின் இருப்புப் புலனாகிறது. அயர்ந்து தூங்குகிறபொழுது குழந்தைக்கு உணரும் தன்மை ஒடுங்கி யிருக்கிறது. அப்பொழுது தாய் பக்கத்திலிருக்கிறாளெனினும் அக்குழந்தைக்கு அவள் இல்லாதவள் போன்று ஆகிறாள். இனி, குழந்தை விழித்தெழுந்து புறப்பொருள்களை ஓர்மைப்படுத்துகிற உணர்வுடன் இருக்கிறது. அப்பொழுது தாய் கண்ணெதிரே இல்லாவிட்டால் அவள் எங்கேயோ இருந்தும் குழந்தைக்கு இல்லாதவள் போல் ஆகிறாள். ஆகையினால்தான் பொருள் ஒன்றினுடைய இருப்புக்கு உள்ளத்தின் உள்ளே இருக்கிற உணர்வும் புறத்திலுள்ள பொருளும் ஒன்றோடொன்று சம்பந்தப்படுபவைகளாக வேண்டும் என்று கபில முனிவர் புகட்டியுள்ளார். இங்ஙனம் உள்ளிருக்கும் உணர்வுக்கும் புறத்திலிருக்கும் பொருளுக்கும் தொடர்பு ஏற்படாவிட்டால் பொருள் என்பதற்கே விளக்கம் இல்லாது போய் விடுகிறது. மனிதன் எத்தனை யெத்தனை விதங்களில் அறிவைப் பெற்றிருந்தாலும் அந்த அறிவு அனைத்தும் உணர்வுக்கும் உணரப்படுகிற பொருளுக்கும் இடையிலுள்ள தொடர்பால் உண்டாகிறது.

ஈசுவரன் அல்லது சகுண பிரம்மத்தைப் பற்றிய கோட்பாடு ஒன்றை நாம் இப்பொழுது அறிந்து கொள்ளுதல் அவசிய்மாகிறது. 'உலகனைத்தும் ஆனாய் நீயே' என்று ஈசுவரனைக் குறித்து பக்தர் ஒருவர் பகர்ந்துள்ளார். ஈசுவரனே உலகனைத்தும் ஆயிருக்கிறாரென்றால் உலகம்

வேறு, ஈசுவரன் வேறு அல்ல. உணரும் தன்மை காண்பவனிடத்து இருக்கிறது. உணரப்படுகிற பொருள் புறத்திலிருக்கிறது. உணர்கின்றவனுடைய உணர்வு தெளிவடைந்து வரவர புறப் பொருளின் காட்சியும் மாறியமைகிறது. இதற்கும் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளவேண்டும். மாலை நேரத்தில் வழியில் போய்க்கொண்டிருந்த ஒருவனுக்கு ஏதோ ஓர் உருவம் தென்பட்டது. பேய் போன்று அது அவனுக்குப் புலனாயிற்று. அவனுக்குப் பின்சென்ற மற்றொருவனுக்கு அது திருடன் போன்று புலனாயிற்று. அவனுக்குப் பின் சென்ற மற்றொருவனுக்கு அது போலீசுக்காரன் போன்று புலனாயிற்று. கடைசியாகச் சென்ற ஒருவனுக்கு அது மரக்கட்டையாகத்தென்பட்டது. உணரும் தன்மை தெளிவடைகின்றவளவு புறப்பொருளின் காட்சி மாறியமைகிறதென்பதற்கு மரக்கட்டையில் இத்தனை விதமான காட்சிகளை வழியில் போனவர்கள் கண்டதே சான்று ஆகும். உணர்வு தெளிவடையாதவர்களுக்கு உலகமாகத் தென்படுகிற அதே பொருள், உணர்வு தெளிவடைந்திருக்கிறவர்களுக்கு ஈசுவரனாகத் தென்படுகிறது. ஈசுவரன் என்னும் பொருள் இத்தனைவிதமான காட்சிகளைக் கொடுத்துக்கொண்டிருப்பதால் அவர் மெய்ப்பொருள் ஆகமாட்டார் என்று ஒருசிலர் கருதுகின்றனர். அப்படி அவர்கள் முடிவுகட்டுவது உண்மைக்கு ஒருபொழுதும் ஒவ்வாது. யாண்டும் ஈசுவரன் ஒருவரே எண்ணிறந்த வடிவங்களாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கின்றார். எண்ணிறந்த மகிமைகளும் அவரிடத்து இலங்குகின்றன. உள்ளத்தில் உண்டாகிற உணர்வின் பரிபக்குவத்துக்கேற்ப பல படித்தரங்களில் அவர் ஒருவரே காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறார்.

தத்துவ ஆராய்ச்சிக்காரர்களுக்கிடையில் முடிவில்லாத விவாதம் ஒன்று நிகழ்ந்து வருகிறது. பல தடவைகளில் அந்த விவாதம் கசப்பை உண்டுபண்ணக் கூடிய சண்டை சச்சரவாக வடிவெடுப்பதுண்டு. இந்த விவாதம் எதைப் பற்றியதென்பதை சுருக்கமாக ஈண்டு ஆராய்வோம். ஒருகூட்டத்தார் விக்ஞான வாதம் (Idealism) என்பதில் நம்பிக்கை வைத்துள்ளவர்கள். மற்றொரு கூட்டத்தார் வாஸ்த்துவ வாதம் (Realism) என்பதில் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். விக்ஞான வாதிகள் மனோகற்பிதத்திற்கு அன்னியமாகப் புறப்பொருள் ஒன்றுமில்லைஎன்று விவாதிக்கிறார்கள். வாஸ்த்துவ வாதிகள் மனம் கற்பனை செய்தாலும் கற்பனை செய்யாமலிருந்தாலும் புறப் பொருள் வாஸ்த்துவமாகவே இருக்கிறது என்று விவாதிக்கிறார்கள். இவர்கள் செய்து வருகிற விவாதங்களெல்லாம் வெறும் வாய்ப்பேச்சாக முடிகின்றன. ஈசுவரனைப்பற்றிய உண்மையை நாம் இப்பொழுது அறிந்துகொள்ள வேண்டும். இவர்கள் சொல்லுகிற பிரகாரம் அகம் புறம் என்று பாகுபடுத்த முடியாத பாங்கில் ஈசுவரன் இருக்கிறார். விக்ஞான வாதம் வாஸ்த்துவ வாதம் ஆகிய இரண்டும் ஈசுவரனிடத்து ஒன்றுபட்டிருக்கின்றன. அறிந்துகொள்ளும் திறமைபடைத்துள்ள ஆத்ம சொரூபமாக விளங்குபவரும் அவரே. அறியப்படுபொருளாகிய பிரபஞ்சமாகத் தென்படுபவரும் அவரே. பின்பு அகம் புறம் ஆக அவரே தம்மைப் பாகுபடுத்திக் கொள்கிறார். காண்பவரும் அவரே. காணப்படு பொருளும் அவரே. மெய்ப்பொருள் என்று அவரைத்தான் சொல்லவேண்டும். கயிறு ஒன்று இருந்தால்தான் அது பாம்பு போன்று தென்படக்கூடியதாகும். ஈசுவரன் ஒருவர் இருப்பதால்தான் அவர் இந்த உலகமாகக்காட்சி கொடுத்துக்கொண்டிருக்

கிருர். எல்லாவிதமான காட்சிகளுக்கும் மூலப்பொருளா யிருப்பவர் அவர் ஒருவரே. பிரபஞ்சத்தைக் காணும் நிலை யில் இருப்பவன் ஜீவாத்மன். அவனுல் காணப்படுபொரு ளாகப் பிரபஞ்சம் இருந்துவருகிறது. காண்பவனுகிய ஜீவாத்மன் தன்னைப் பக்குவப்படுத்திக்கொண்டே வர வர காணப்படு பொருளாகிய ஜகத்தின் காட்சி மேன்மைதங்கிய காட்சியாக மாறியமைகிறது. காண்பவனுகிய ஜீவாத்ம னுக்கு மனது காட்சியைப் பெறுவதற்கான கருவியாய் இருந்துவருகிறது. மலினம் படிந்த மனதுடன் காணப்படும் காட்சியே ஜகத் அல்லது பிரபஞ்சம். தூய மனமுடையவ னுக்குப் பிரபஞ்சம் ஈசுவர சொரூபமாகத் தென்படுகிறது. சகுண பிரம்மத்திடத்துள்ள அனந்த கல்யாண குணங்கள் தூயமனம் படைத்துள்ள பக்தனுடைய காட்சிக்கு இலக்கா கின்றன. மனபரிபாகத்தில் பக்தன் இன்னும் மேல் நிலைக் குப் போகின்றபொழுது அந்த ஈசுவரன் ஒருவர்தான் அனந்தங்கோடி ஜீவர்களாகவும், அகிலாண்டங்களாகவும் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிருர் என்பது தெளிவா கிறது. எனவே மனபரிபாகத்துக்கு ஏற்ப மெய்ப்பொருள் காட்சி பலதரப்பட்டிருப்பினும் ஈசுவரன் ஒருவரே இத்தனை விதமான காட்சிகளுக்கும் இலக்காக இருந்து வருகிருர். அவருக்கு அன்னியமாக ஒன்றுமில்லை. இதுவே ஈசுவர தத்துவத்தைப் பற்றிய கோட்பாடு.

---

# 3. பக்தியோகத்தின் குறிக்கோள்

ஈசுவரதத்துவம் போன்ற விஷயத்தை விஸ்தாரமாக ஆராய்வதால் பயன் என்ன என்ற கேள்வி எழக்கூடும். பக்தன் ஒருவனுக்கு அத்தகைய ஆராய்ச்சிகள் முக்கியமானவைகளல்ல. ஆனால் ஒரே ஒரு காரியத்துக்கு அவைகள் பயன்படுகின்றன. ஈசனை அடைதற்பொருட்டு அவன் கொண்டுள்ள எண்ணத்தை உறுதிப்படுத்துதற்கு அத்தகைய ஆராய்ச்சிகள் பயன்படுகின்றன. அதற்குமேல் அவன் புரிகின்ற சாதனங்களுக்கு அவை சிறிதேனும் உதவமாட்டா. ஏனென்றால் பக்தன் செல்லுகின்ற அன்புப் பாதை அலாதியானது. 'அன்பின் வழியது உயிர்நிலை' — என்னும் கோட்பாட்டுக்கு இணங்க அன்பு ததும்பிய உயிர் தன்னைத் தானே விளக்கிக்கொள்கிறது. இனி, ஞான நெறியில் சென்று செய்கிற மெய்ப்பொருளைப் பற்றிய ஆராய்ச்சியோ மிக நுட்பமானது. மிகக் கடினமான வாதப் பிரதிவாதங்கள் அதில் அடங்கியிருக்கின்றன. நுண்ணறிவையும் மயக்கிவிடக் கூடிய கோட்பாடுகள் அதில் புதைந்து கிடக்கின்றன. ஆனால் பக்தன் ஒருவன் பின்பற்றுகின்ற பாதையோ அத்தகைய நுணுக்கமான ஆராய்ச்சிகளையெல்லாம் புறக்கணித்துவிட்டு அருள் துறையில் மேல் நோக்கிப் போகக்கூடியதாயிருக்கிறது. கடினமான சாதனங்கள் பலபுரிந்த பிறகே பெறுதற்கரிய சுவானுபூதியின்கண் அது அவனை அழைத்துச் செல்லுகிறது. இறைவனுடைய அருளுக்கு அவன் நேரேபாத்திரமாகிறான். அதன் விளைவாக இறைவனுடைய சான்னித்தியத்துக்கு அவன் விரைவில் வந்து சேர்கிறான். வெறும் ஏட்டுக் கல்விக்கு ஆங்கு இடமில்லை. நித்தியம் எது, அநித்தியம் எது என்று வெறும் வாய்

வேதாந்தம் பேசுகின்ற பாங்கு பக்தி நெறியில் அறவே புறக்கணிக்கப்படுகிறது. அக்ஞான இருளில் அலைக்கழிந்து கொண்டிருப்பவனுக்கு அறிவு நுட்பம் என்னும் கை விளக்கு காரியத்துக்கு அதிகமாக உதவுவதில்லை. அவன் இருக்குமிடத்தை மட்டும் அறிவு என்னும் கைவிளக்கு சுட்டிக்காட்டுகிறது. அதற்குமேல் வாழ்வு என்னும் காரிருளில் அவன் எந்தத் திக்கை நோக்கி எவ்விதத்தில் நடந்துசெல்ல வேண்டுமென்பதை அவன் படைத்துள்ள மதிநுட்பம் விளக்கிக் காட்டுவதில்லை. இதற்கு மாருக பக்தியின் மூலமாக இறைவனை நேரே சாக்ஷாத்கரிக்கும் தகைமை ஆத்ம சாதகன் ஒருவனுக்கு வந்துவாய்க்கிறது. சூரியன் தன்னைத் தானே விளக்கிக் காட்டுகிருன். ஏனைய பொருள்களைச் சுட்டிக்காட்டுதற்கும் சூரிய வெளிச்சம் பயன்படுகிறது. நேர் பக்தி சாதனத்துக்கு வருபவன் நண்பகலில் தன் குறியை நோக்கிச் செல்பவனுக்கு ஒபபாகிருன். சூரியனுடைய காட்சி இரவைப் பகலாக மாற்றியமைப்பது போன்று பக்தி சாதனமானது சர்வேசுவரனுடைய சான்னித்தியத்தைப் பிரத்தியட்ச அனுபவமாக விளக்கிக் காட்டுகிறது. கடவுள் ஒருவர் இருக்கிருரா அல்லது இல்லையா என்று விசாரித்துப்பார்த்துப் பிறகு அவர் மீது நம்பிக்கை வைத்தல் என்னும் கொள்கை பக்தனுக்கு அவசியமானதன்று. நேரே இறைவனுடைய சான்னித்தியத்துக்கு அவன் வந்து சேர்கிருன். கடவுளைப்பற்றி அவன் விவாதிப்பதில்லை. அவர் எங்கும் நிறைபொருள் என்பதை அவன் நேரே உணர்கிருன். பக்தன் ஒருவனுடைய தன்மை எத்தகையதென்பதை நாம் இப்பொழுது தெளிவுபட மொழியலாம். கடவுளை அவன் காண்கிருன். அவருடைய சான்னித்தியத்தையும், பெருமையையும் அவன் உணர்கிருன். அதன் விளைவாக

அவரிடத்திருந்து வரும் உலப்பிலா ஆனந்தத்தை அவன் அனுபவிக்கிறான். இத்தகைய பெரு நிலையைப் பக்தன் ஒருவன் எட்டியிருப்பது ஏனைய நிலைகளையெல்லாம் விட உயர்ந்ததல்லவா? பக்தனுடைய பெருமையை இன்னும் சிறப்பித்துச் சொல்லுமிடத்து முக்தியைப்பற்றிய கவலை சிறிதேனும் அவனுக்குக் கிடையாது. யாண்டும் பக்தியிலேயே திளைத்திருந்தால் போதுமானதென்று பக்தி மார்க்கத்தில் திருப்தியடைந்திருந்த பக்தர்கள் பலபேர் இம்மண்ணுலகிலே வாழ்ந்திருந்தனர், இப்பொழுதும் வாழ்ந்திருக்கின்றனர்.

பக்தி பண்ணுவதால் வரும் பயன் யாது என்னும் கேள்வி பலர்க்கிடையில் எழுகிறது. பக்தர்கள் அடைந்துள்ள பேரானந்தப் பெருநிலையே பக்தியின் பயன் என்று கூறலாம். மக்களில் பெரும்பாலோர் சிறுநெறி செல்லுபவர்களாயிருக்கின்றனர். உடல் வாழ்க்கைக்கு இன்பம் தருவது எதுவோ அதுவே உண்மையில் பயன்படுவதாகிறது என்று அன்னவர் கருதிவருகின்றனர். உடலின் மூலமாகப் பெறுகிற சுகத்துக்கு மேலானது ஒன்றுமில்லையென்பது அவர்களுடைய கருத்து. சமய அனுஷ்டானம், பாரமார்த்திகப் பெருவாழ்வு, கடவுள், காலத்தைக் கடந்துள்ள பெருநிலை, ஆத்மசொரூபம் — ஆகிய இவை போன்றவைகளுக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லையென்று அன்னவர் கருதி வருகின்றனர். செல்வத்தையோ, சுகஜீவனத்தையோ அளிக்க இயலாத இத்தகையவைகளால் மனிதனுக்கு ஆவதென்ன என்று கருதிப் பாரமார்த்திக விஷயங்களைப்பற்றி அவர்கள் பராமுகமாய் இருக்கின்றனர். மனிதனுடைய இந்திரிய நுகர்ச்சிகளுக்கு உதவாதவைகளையும் பசியைத் துடைப்பதற்கு இயலாதவைகளையும் பயனற்றவை

களென அன்னவர் ஒதுக்கி வைக்கின்றனர். பயன்படுவது எது என்னும் கேள்வி அடுத்தபடியாக எழுகிறது. அவரவர் மனப்பான்மைக்கேற்ப இக்கேள்விக்கு விடைகள் பலதரப்பட்டவைகளாம். மக்களில் பெரும்பான்மையோர் விலங்கு நிலையிலேயே நிற்கின்றனர். அருந்துவது, பருகுவது, பிள்ளைபெறுவது, சாவது போன்ற செயல்களே வாழ்க்கைக்குரியவைகள் என அவர்கள் கருதுகின்றனர். பொறிகளுக்குப் புலப்படுகின்ற பொருள்களையே பயன்படுபவைகளென அவர்கள் எண்ணுகின்றனர். மனபரிபாகத்தில் மேல்நிலைக்கு வாராதிருக்கும் அன்னவர்கள் இன்னும் பிறவிகள் பல எடுத்தாகவேண்டும். இந்திரியங்களின் துணைகொண்டு நுகரும் பொருள்களுக்கு அப்பால் இருப்பவைகளை ஒரு சிறிதளவாவது அறிந்துகொள்வதற்கு ஏற்ற மனபரிபாகம் எண்ணிறந்த பிறவிகளுக்குப் பிறகே உண்டாகிறது. மனபரிபாகம் அடையப்பெறாத மக்களையே பாமரர் என்று பகர்கிறோம். பின்பு மனபரிபாகம் அடைந்துள்ள பெருமக்கள் சிலர் இருக்கின்றனர். ஆத்மாவைப் பற்றிய விஷயங்களில் அவர்கள் கருத்துமிக வைக்கின்றனர். இன்றிருந்து நாளைக்கு அழிந்துபட்டுப்போம் அநித்தியப் பொருள்களில் அவர்கள் கருத்து வைப்பதில்லை. இந்திரிய சுகங்களெல்லாம் விவேகமற்ற சிறுவர்களுடைய விளையாட்டுக்கு ஒப்பானவைகள் என்று அவர்கள் ஒதுக்கி வைக்கின்றனர். பகவானை அடைவதற்கு ஏதுவாயிருக்கும் பாரமார்த்திக விஷயமும் பக்தியுமே வாழ்க்கைக்குப் பயன்படுபவைகளென அப்பெருமக்கள் பொருள்படுத்துகின்றனர். ஆக, வாழ்க்கைக்குப் பயன்படும் பொருள் எது என்னும் கேள்விக்கு அவரவர் மனபரிபாகத்துக்கேற்றவாறு மக்கள் விடைகொடுத்து வருகின்றனர். சிற்றுயிர்களின் நிலைமைக்கு அண்மையில் இருப்பவர்கள்

அப்போதைக்கப்போது தேவையாயிருக்கும் இந்திரிய விஷயங்களை அடையப் பெற்றால் போதுமென்றிருக்கின்றனர். தெளிந்த பக்தியையும் ஞானத்தையும் பெற்றுள்ளவர்கள் யாண்டும் நிலைத்திருக்கும் தெய்விகப் பண்பையே நாடுகின்றனர். உலகப்பற்றிலே மக்கள் மூழ்கிக் கிடக்கின்ற இந்நாளிலும் தெய்வப்பற்று வாய்க்கப்பெற்ற சிலர் இருப்பது பாராட்டுதற்குரியதாகும்.

பக்தியை இருதரப்பட்டதாகப் பாகுபடுத்தலாம் என்று ஏற்கனவே இயம்பியுள்ளோம். ஆரம்பதசையிலிருக்கின்ற பக்தி கௌணீ பக்தி என்றும், முதிர்ந்த நிலைக்கு வந்திருப்பதற்குப் பராபக்தி என்றும் பெயர்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. பக்தி சாதனத்தில் ஆரம்பதசையிலிருக்கின்ற பொழுது ஸ்தூல வஸ்துக்கள் பலவற்றின் உதவியை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம். அவைகளை முறையாகப் பயன்படுத்துவதன் மூலம் பக்தி சாதனத்தில் நாம் மேல்நோக்கிப் போக வல்லவர்களாகின்றோம். ஒவ்வொரு சமயத்திலும் புராண வரலாறுகளை ஏராளமாகக் காண்கிறோம். அதற்குமேல் ஆலயங்களையும் அவைகளுள் எழுந்தருளப் பண்ணியிருக்கும் மூர்த்திகளையும் வேண்டியவாறு காண்கிறோம். இந்த மூர்த்திகளெல்லாம் மெய்ப்பொருளை விளக்கிக் காட்டுவதற்கான சின்னங்களாக அமைந்திருக்கின்றன. இனி அவைகளுக்குரிய ஆராதனை முறைகளில் சீரிய கோட்பாடுகள் பல அமைந்திருக்கின்றன. அந்தக் கிரியைகளெல்லாம் பரதத்துவத்துக்கு விளக்கமாகவே வந்தமைந்திருக்கின்றன. பக்தியின் ஆரம்ப நிலையில் அவை யாவும் சாதனத்துக்கு முற்றிலும் அவசியமானவைகளாக இருந்து வருகின்றன. முறையாக அவைகளைப் பயன்படுத்துவதன் மூலம் ஆத்ம சாதகன் கடவுளை நோக்கிச் செல்ல

வல்லவன் ஆகின்ருன். மற்றொரு முக்கியமான விஷயத்தை நாம் ஞாபகத்தில் வைப்பது அவசியமாகிறது. உலகில் சமயங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் பாரமார்த்திகப் பெருநிலையை அடையப்பெற்றுள்ள பெருமக்களை ஏராளமாக ஈன்றெடுத்துள்ள சமயங்கள் எவை என்னும் கேள்வி எழுகிறது. எங்கெந்த சமயங்களில் சீரிய கருத்துக்கள் நிரப்பப் பெற்றுள்ள இதிகாசங்களும், புராணங்களும் அமைந்திருக்கின்றனவோ அவைகளே ஆத்ம சாதகர்களுக்கு நல்ல அருள் விருந்து அளித்து வந்திருக்கின்றன. அதற்கு மேல் விதவிதமான கிரியைகளும் வழிபாட்டு முறைகளும் அச்சமயங்களில் அமைந்திருப்பதாலேயே பக்தி சாதனங்களுக்கு அவைகள் நன்கு பயன்பட்டு வருகின்றன. வழிபாட்டு முறைகள் ஏராளமாக அமையப்பெற்றிருக்கும் சமயங்களே எண்ணிறந்த மேன்மக்களை உருவாக்கியிருக்கின்றன. சமயங்களில் அடங்கியுள்ள சில சீரிய வழிபாட்டு முறைகளைச் சீர்திருத்தத்தின் பெயரால் நாம் அழித்து விடலாகாது. கவிதைரசம் பொருந்திய சில அனுஷ்டான முறைகள் சமயங்களில் அடங்கியிருக்கின்றன. தெய்வமும் அழகும் ஒன்றேயாம். தெய்வத்துக்கே அழகன் என்னும் பெயர் வந்துள்ளது. அழகைப் பாராட்டும் பகுதிகள் வழிபாட்டில் அமைந்திருக்கின்றன. மனதை மகோன்னத நிலைக்கு எடுத்துச் செல்லக்கூடிய வழிபாட்டு முறைகள் பலதரப்பட்டவைகள் சமய அனுஷ்டானத்தில் இடம் பெற்றிருக்கின்றன. மனிதனுடைய மனதோ பெரும்பாலும் குழந்தைப் பருவத்திலிருக்கிறது. குழந்தை ஒன்று தள்ளாடி நடக்க முயலுகிறது. கடவுளின்பால் செல்ல முயலுகின்ற மனதுக்கும் அத்தகைய குழந்தைப் பருவம் இருக்கிறது. அகண்டாகாரப் பெரிய பொருளை கிரகித்துள்ள அத்தகைய சிறிய மனதுக்குச் சாத்

தியமாவதில்லை. விளங்காத பெரிய பொருளை அந்த இளம் மனதுக்குத் தெளிவுபட விளக்கிக் காட்டுதற்கென்றே ஆலய வழிபாட்டில் கிரியா விசேஷங்கள் பல அமைந்திருக்கின்றன. வீடு ஒன்றுக்குக் கூரைபோடுதற்கு முன்பு விட்டம், சட்டம் முதலியவைகளை அமைக்கின்றோம். அவைகளை அமைக்கா விட்டால் கூரையானது உறுதி பெற்று நிற்காது. பாரமார்த் திக வாழ்வு என்னும் மாளிகைக்கு ஏற்ற கூரையும் உண்டு. அதைத் தாங்கிப் பிடிப்பதற்கான விட்டங்களாகவும், சட்டங் களாகவும் வழிபாட்டு முறைகள் பல அமைந்திருக்கின்றன. ஐதிகங்களாக வந்துள்ள அத்தகைய வழிபாட்டு முறைகள் ஆத்மசாதகர்களுக்குப் பாரமார்த்திகப் புத்துயிர் வழங்கக் கூடியவைகளாக இருந்து வருகின்றன. வளர்கின்ற செடி ஒன்றுக்கு உரம் பயன்படுவது போன்று ஆலய வழிபாட்டில் பல பகுதிகள் பக்தர்களுடைய உள்ளத்திலே பக்தி உயிர் பிடித்து வளர்வதற்குப் பெருந்துணைபுரிந்து வருகின்றன. இத்தகைய கிரியைகளையும், ஐதிகங்களையும், வழிபாட்டு முறைகளையும் அழித்துவிட சீர்திருத்தக்காரர்கள் பலர் முயன்றுவருகின்றனர். கடவுள் உண்கின்றாரா, உறங்கு கின்றாரா, ஊர்வலம் போகின்றாரா என்றெல்லாம் ஞான விசாரம் செய்வதுபோன்று பேசி பக்திவளர்ச்சிக்கு ஏது வாயிருக்கின்ற கிரியைகள் பலவற்றை அவர்கள் தகர்க்க முயலுகின்றனர். சீர்திருத்தம் என்கிற பெயர் வைத்துக் கொண்டு அவர்கள் செய்கின்ற செயலோ உயிர் அற்றதாய்ப் போய்விடுகிறது. சமுதாயத்திலுள்ள ஏதோ சில குறை பாடுகளையும் குருட்டு நம்பிக்கைகளையும் தகர்த்தெறிய முயலு கின்ற அந்தச் சீர்திருத்தக்காரர்கள் சமய வாழ்க்கைக்குரிய உயிரையே ஒழிக்க முற்படுகின்றனர். உள்ளத்தி னுள்ளே உயரிய உணர்வை வளர்ப்பதற்கு மாறாகப் பொரு

ளற்ற சில பேச்சுக்களும் நம்பிக்கைகளுமே அந்தச் சீர்திருத் தத்தின் விளைவாகும். செடிக்கு உரம் போதாவிட்டால் நல்ல தானியம் விளைவதற்கு மாறாகத் தானியம் போன்று தென் படும் பதரே எஞ்சியிருக்கிறது. அது உணவுக்கு உதவாது. கடவுள் வழிபாட்டில் மனிதன் செய்ய முயலுகிற சில சீர் திருத்தங்கள் பயிர்களினின்று பதரை உண்டுபண்ணுவது போன்று பாரமார்த்திக வாழ்க்கைக்குப் பயன்படாதவை களாகப் போய்விடுகின்றன. ஆகவே சீர்திருத்தம் என்னும் கண்ணியமான பெயரை வைத்துக்கொண்டு பயன்தருகின்ற நல்ல பகுதிகளைச் சமய அனுஷ்டானங்களினின்று நாம் நீக்கி விடலாகாது.

சீர்திருத்தம் என்னும் பெயரால் சமயங்களிலுள்ள அனுஷ்டான முறைகள் பலவற்றை அழித்துவிட முயலுகின்ற வர்களில் பெரும்பான்மையோர் மதப்பற்றில்லாதவர்களே யாம். அறிந்தோ அறியாமலோ அன்னவர்கள் லோகாயதர் களுடைய கூட்டத்தைச் சேர்ந்தவர்களாகிறார்கள். சுக போகங்களை ஏராளமாக அனுபவிப்பதே வாழ்க்கையில் அவர்கள் கொண்டுள்ள லக்ஷியமாகும். மறுமையைப் பற்றிய நம்பிக்கை அந்தக் கூட்டத்தாரில் சிலர்க்கு உண்டு. ஆனால் மறுமையிலும் அவர்கள் நாடிநிற்பது சுகபோகம் ஒன்றே யாம். இந்திரிய சுகங்கள் பலவற்றை அனுபவிப்பதை மட்டும் அவர்கள் லக்ஷியமாகக் கொண்டிருக்கின்றனர். அதைத்தவிர வாழ்க்கைக்கு வேறு லக்ஷியம் ஏதாவது இருப் பதாக அவர்களுக்குத் தோன்றுவது கிடையாது. இஷ்டா பூர்த்தம் इष्टापूर्त என்னும் கோட்பாடு ஒன்று சமயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. விரும்பியதை விரும்பியவாறு நிறைவேற்றிக்கொள்ளுதற்கென்று செய்யும் யாகத்துக்கு இப்பெயர் வந்துள்ளது. பொதுநலத்துக்காகவென்று செய்

கிற பல செயல்களும் இஷ்டாபூர்த்தம் என்னும் கோட்பாட்டில் அடங்கியிருக்கின்றன. கிணறு குளம் வெட்டுதல், பாதைகள் அமைத்தல், வைத்திய சாலைகள் அமைத்தல், மக்களுக்கிடையில் சுகஜீவனத்துக்கு இடைஞ்சலாயுள்ள குறைபாடுகள் பலவற்றை அகற்றி வைத்தல் போன்ற செயல்களை அவர்கள் செய்து வருகின்றனர். ஆனால் அவையாவுக்கும் அடிப்படையாயிருக்கின்ற நோக்கம் ஒன்றேயாம். இந்திரிய சுகத்துக்கு ஏதுவாயிருக்கின்ற விதவிதமான வசதிகளும் சௌகரியங்களும் வாழ்க்கையில் வந்து அமையவேண்டும் என்பது ஒன்றே அவர்கள் வாழ்க்கையில் கொண்டுள்ள நோக்கமாகும். இன்புற்று வாழ்ந்திருப்பது ஒன்றைத்தவிர வாழ்க்கையில் வேறு ஏதாவது லக்ஷியம் இருப்பதாக அவர்களுக்குத் தோன்றுவதில்லை. சமயப்பற்று உடையவர்களாகவும் சமய அனுஷ்டானம் செய்து வருபவர்களாகவும் அக்கூட்டத்தார் வெளிக்குக் காட்டிக்கொண்டிருக்கின்றனர். உண்மையில் அவர்கள் அக்ஞான இருளில் உழல்பவர்கள் ஆகின்றனர். போகங்களை அனுபவிப்பதே சமய வாழ்வு என்று கருதிவரும் மதவெறி பிடித்தவர்களும் அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களேயாம். மதத்தின் பெயரால் அவர்கள் அத்தகைய வெளிவேஷம் போட்டிருப்பதற்குப் பதிலாக நாஸ்திகர்களுடைய கூட்டத்தில் அவர்கள் வெளிப்படையாகச் சேர்ந்துகொள்வார்களாகில் அது அவர்களுக்கும் நல்லது, உலகத்துக்கும் நல்லதாகும். மதத்தின் பெயரால் உலகில் தென்படுகின்ற பழக்கவழக்கங்களெல்லாம் உண்மையில் மத அனுஷ்டானங்கள் ஆகமாட்டா. பொருளற்ற வாய்ப்பேச்சையும், புன்மை நிறைந்த புல்லிய உணர்வுகளையும் மலையளவு கிளப்புவதைவிடப் பயன்படுகிற அறநெறியையும், சுவானுபூதிக்கேதுவான செயலையும் எள்ளளவாவது பழக்கத்தில் கொண்டுவருவது மிக மேலானது. அக்ஞானம் நிறைந்த புன்மொழிகளையும், வெறிபிடித்த வீண் பேச்சுக்

களையும் மலையளவு பேசிக்கொண்டிருப்பதால் ஆவதென்ன? அதினின்று பாரமார்த்திகப் பெருநிலையை அடைந்துள்ள சான்றோன் ஒருவனையாவது உண்டுபண்ண முடியுமா என்று எண்ணிப்பார்க்க வேண்டும். வெறும் வாய்ப்பேச்சு வாழ்வை வகைப்படுத்துதற்குச் சிறிதேனும் உதவாது. எனவே பொருளற்ற புன்மொழிகளைப் பேசிக்கொண்டிருப்பதைவிட வாய்பொத்தி மௌனமாய் இருப்பது நலம். அதற்குமேல் மற்றோர் அரிய செயலையும் செய்யவேண்டும். ஜன்னலைத் திறந்து வைத்தால் நல்ல காற்றும் வெளிச்சமும் அறைக்குள்ளே வருவதுபோன்று மனிதன் தனது உள்ளம் என்கின்ற ஜன்னலை இறைவனது அருளுக்கு உரியதாகத் திறந்து வைக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். பாரமார்த்திகப் பெருநிலையைப்பற்றி ஆன்றோர்கள் வேண்டியவாறு புகட்டியிருக்கின்றனர். பக்தியுடனும், முழு நம்பிக்கையுடனும் அப்பெருமக்களின் திருவடிகளில் அமர்ந்திருந்து அருள் நிலையைக் கற்றுக்கொள்ள முயன்றால் நலனனைத்தும் உண்டாகும். அப்பொழுதே ஹிருதய கமலத்தில் அருட்ஜோதி ஒளிர ஆரம்பிக்கும். பக்தி நெறியில் ஆழ்ந்து சென்றிருக்கின்றவர்களைப் பின்பற்றுவதே நாம் செய்யக் கிடக்கும் கடமையாகும். புதிய ஆராய்ச்சி எதையும் நாம் செய்யவேண்டிய அவசியம் இல்லை. அதற்கு அவகாசமும் நமக்குக் கிடையாது. நாம் செய்யக்கிடக்கும் சாதனங்கள் என்னென்ன இருக்கின்றனவோ அவை யாவையும் ஆன்றோர்கள் பழகிப் பார்த்திருக்கின்றனர். அதில் பெரிய வெற்றிகளையும் அவர்கள் கண்டிருக்கின்றனர். தாம் கடைப்பிடித்து வந்த முறைகளை நமக்கும் அவர்கள் கிருபை கூர்ந்து காட்டியிருக்கின்றனர். அவர்கள் காட்டியருளிய பக்தி நெறியை முறையாகப் பழகுகின்றவர்களுக்கு இறைவனைப்பற்றிய அனுபூதி தானாக வந்தமையும்.

---

# 4. குருவின் அவசியம்

ஒவ்வொரு ஜீவாத்மனும் பரிபூரண நிலையையடைந்தே ஆகவேண்டும். பிரபஞ்சத்தில் எண்ணிறந்த உயிர்வகைகள் இருக்கின்றன. அவையாவும் கணக்கற்ற குறிக்கோள்களை நாடிப் போய்க்கொண்டிருப்பவைகள் போன்று தென்படுகின்றன. அவைகளின் இயக்கங்களை உள்ளூற ஆராய்ந்து பார்த்தால் உண்மை ஒன்று விளங்கும். பரிபூரண நிலையை யடைவதற்காகவே அவையாவும் முயன்றுவருகின்றன. இறுதியில் அவை யாவும் அந்நிலையையடைவதும் திண்ணம். இப்பொழுது நாம் அடைந்துள்ள நிலை எதுவாயினும் அது குருட்டு வாய்ப்பாக நமக்கு அமையவில்லை. இறந்த காலத்தில் நாம் பற்பல செயல்களைச் செய்திருக்கிறோம். எண்ணங்கள் பலவற்றையும் எண்ணியிருக்கிறோம். அச் செயல்களும் எண்ணங்களும் சேர்ந்து பழவினைகள் எனப்படுகின்றன. அந்த வினைகளின் விளைவாகவே நாம் இப் பொழுது எய்தியுள்ள நிலை நமக்கு அமைவதாயிற்று. எதிர் காலத்தில் நாம் அடையவிருக்கும் நிலை யாது என்னும் கேள்வி எழலாம். அது நம் கைவசத்தில் இருக்கிறது. நமது எதிர்கால நிலை குருட்டு வாய்ப்பாக அமையப்போவதில்லை. நிகழ்காலத்தில் நாம் எண்ணிக்கொண்டிருக்கின்ற எண்ணங்களும் செய்துகொண்டிருக்கின்ற செயல்களும் நமது எதிர்கால நிலைக்கு முகாமைகளாக அமைந்துவருகின்றன. நாம் அடையும் பெருமைக்கும் சிறுமைக்கும் நாமே பொறுப்பாளிகள் ஆகின்றோம். யாண்டும் நமது கதியை நாமே உருவாக்கி வருகிறோம். இதுவே நமது வரலாற்றைப் பற்றிய உண்மையாகும். ஆனால் பிறரிடமிருந்து உதவி ஒன்றையும் ஒருபொழுதும் பெற முடியாது என்று நாம் முடிவு கட்டலாகாது. நமது முன்னேற்றத்துக்கு ஏதுவான

உதவியை மற்றவர்களிடத்திருந்தும் நாம் பெறமுடியும். நம்மில் பெரும்பான்மையோர் பிறரிடமிருந்து உதவியை எதிர்பார்க்கும் நிலையில்தான் இருந்து வருகிறார்கள். அத்தகையவர்களுக்குப் பிறர் உதவிபுரிவது முற்றிலும் அவசியமாகிறது. பிறரிடமிருந்து உதவி என்ன பாங்கில் வந்து அமைகிறது என்னும் கேள்வி எழலாம். மனிதனுக்குக் கிடைக்கின்ற உதவிகளுள் அருள் துறையைப் பற்றியது மிக உயர்ந்தது. பொருளுதவி ஒரு மனிதனுக்குப் பயன்படக் கூடியதாக இருக்கலாம், அல்லது அது அவனைக் கெடுத்து விடவும் கூடும். ஆனால் அருள் துறையில் கிடைக்கின்ற உதவியோ மனிதனை ஒருநாளும் கெடுப்பதில்லை. மனிதனிடத்துத் தெய்வீக ஆற்றல்கள் புதைந்து கிடக்கின்றன. அரும்பெரும் காரியங்களைச் செய்து சாதிக்கின்ற வல்லமைகள் பல அவனிடத்து மறைந்து கிடக்கின்றன. அனுக்கிரகம் என்று சொல்லப்படும் அருள் உதவி சான்றோர் ஒருவரிடமிருந்து நல்ல ஆத்ம சாதகன் ஒருவனுக்குக் கிட்டுமாகில் அவனுடைய தெய்வீக சக்திகள் தோற்றத்துக்கு வருகின்றன. பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழக்கூடிய விழிப்பு நிலை அவனுக்குண்டாகிறது. ஆத்ம சாதனத்தில் அவனுக்கு முன்னேற்றம் விரைவில் வந்தமைகிறது. புனிதத்துக்கு இருப்பிடமாக அந்த ஆத்ம சாதகன் முன்னேற்றமடைகிறான். இறுதியாகப் பரிபூரண நிலையும் அவனுக்குச் சொந்தமாகிறது.

ஆத்ம சாதனத்துக்குத் துணையாயிருக்கிற இத்தகைய தூண்டுதல் புஸ்தகங்களிலிருந்து சாதகன் ஒருவனுக்கு ஒருநாளும் கிட்டாது. ஏற்கனவே பரிபாகம் அடைந்துள்ள சான்றோர் ஒருவரிடமிருந்தே ஆத்ம சாதனத்துக்கு ஏதுவான தூண்டுதல்களைச் சாதகன் ஒருவன் பெறமுடியும். ஆத்மாவே,

ஆத்மாவை உய்விக்கவல்லது என்பது கோட்பாடு. விழித்தெழுந்துள்ள ஆத்மாவன்றி வேறு எப்பொருளும் ஆத்மீகத் துறையில் மனிதனுடைய முன்னேற்றத்துக்குத் துணைபுரிய மாட்டாது. நம்முடைய ஆயுட்காலம் முழுவதிலும் நாம் கணக்கற்ற புஸ்தகங்களைப் படித்துக் கொண்டே யிருக்கலாம். நூல்கள் பல கற்றதின் விளைவாக நாம் நுண்ணறிவாளர்களாக மாறியமையலாம். ஆனால் நுண்ணறிவாளர் ஆவது வேறு; அருளாளர் ஆவது வேறு. ஆயுட்காலமெல்லாம் நூல்கள் பல படித்தானபிறகும் அருள் துறையிலே நாம் சிறிதேனும் முன்னேற்றம் அடையவில்லை என்பதை நாம் அறிந்துகொள்ள முடியும். அறிவாளர் ஆவது வேறு; அருளாளர் ஆவது வேறு என்னும் பாகுபாட்டைப் பலபேர் அறிந்து கொள்வதில்லை. ஆதலால் இவ்விரண்டுக்குமிடையிலே அவர்களுடைய உள்ளத்தில் குழப்பம் வருகிறது. ஏட்டுக் கல்வியின் மூலம் பெற்றுள்ள நுண்ணறிவை அருள் நிலையென்று எண்ணி மயக்கமுறுபவர் பலர் உளர். கல்வியின் மூலம் நுண்ணறிவு படைத்துள்ள மனிதன் ஒருவன் அக்கல்விக்கேற்றவாறு அருளைப் பெற்றிருக்கிறான் என்று நாம் எண்ணலாகாது. நூலறிவு மிகப் படைத்திருப்பதற்கிடையில் அருளுக்குமுற்றிலும் புறம்பானவனாக மனிதன் இருப்பது இயல்பு. ஸ்வாத்தியாயம் பண்ணுவது அதாவது சாஸ்திரங்களை முறையாக ஆராய்ச்சி பண்ணுவது ஆத்ம சாதனத்துக்குத் துணைபுரிகிறது என்று சான்றோர்கள் அங்கீகரித்திருக்கிறார்கள். ஆனால் அத்தகைய சாஸ்திர ஆராய்ச்சி வெறும் வாசாஞானமாய்ப் போவதுமுண்டு. எனவே நூல்கள் பலவற்றைக் கற்பதனால் பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு நாம் ஆதரவு பெற்று வருகிறோம் என்கின்ற மயக்கம் நமக்கு வரலாகாது. ஒரு தோட்டத்தில் என்

னென்ன வகைப் பழங்களை விளைவிக்கும் மரங்கள் பயிர் பண்ணப்பட்டிருக்கின்றன, அவைகளின் தன்மை யாது, என்ன பருவத்தில் அவைகள் கனிகளைத் தரும் — இவை போன்ற ஆராய்ச்சிகள் வாசா ஞானத்துக்குரியவைகள். பின்பு அக்கனிகளை அருந்தி உடல் நலம் பெறுவது பக்தியின் அனுபவத்துக்கு ஒப்பானது.

சில பண்டிதர்கள் கூடியிருந்துகொண்டு பகவத்கீதைக்குப் பலவிதமான வியாக்கியானங்கள் செய்து சாஸ்திர ஆனந்தத்தில் திளைத்திருந்தார்கள். ஆங்குக் கல்வியறிவு இல்லாத ஒருவன் அமர்ந்துகொண்டிருந்தான். அவன் தன் போக்கில் நெக்குருகி ஆனந்த பரவசமடைந்தான். அவனைப் பார்த்துப் பண்டிதர்கள் வியப்படைந்தார்கள். "கல்வி ஞானம் ஒன்றுமில்லாத நீ பகவத்கீதையில் எப்பகுதியை அறிந்துகொண்டவனாய் இன்புற்றிருக்கிறாய்?" என்று அவர்கள் கேட்டார்கள். "கீதையைப் பற்றி நீங்கள் செய்கின்ற சம்வாதம் ஒன்றும் எனக்குப் புரியவில்லை. ஆனால் கண்ணனைப்பற்றிக் காதில் கேட்டதும் அவன் என்சித்தமிசை குடிகொண்டிருப்பதை உணர்ந்து ஆனந்த பரவசமடைகிறேன்" என்றான் பாமரன் போன்று தென்பட்ட அந்தப் பக்தன். இனி கண்ணப்பநாயனாரையும் ஒரு சான்றாக எடுத்துக் கொள்ளலாம். சிவலிங்கத்திற்குப் பூஜை செய்த அர்ச்சகருக்குப் பூஜைக்குரிய சாஸ்திர ஞானம் வேண்டியவாறு இருந்தது. தன் போக்கில் பக்திபண்ணிய கண்ணப்பருக்கு அது ஒன்றும் கிடையாது. ஆனால் உண்மையில் சிவபக்தியின் விளைவாக அவரே ஞானக்கண் பெற்றிருந்தார். வாசா ஞானத்துக்கும், மெய்யன்புக்கும் உள்ள வித்தியாசத்தை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு 'கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்' என்று மாணிக்கவாசகர் பகர்ந்துள்ளார்.

எனவே பக்தியைப் பற்றிய நூல்கள் பல கற்பது வேறு, பக்தியை இயல்பாக மனதினுள் பெற்றிருப்பது வேறு. இந்த இரண்டிற்கும் இடையிலுள்ள வேற்றுமை நமக்கு எளிதில் விளங்குவதில்லை. வெறும் புஸ்தகப்படிப்பை வைத்துக்கொண்டு நாம் அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்த லாம். பிறருடைய மனதைக் கவரும்படியான பேச்சுத் திறமையை நாம் வெளியிடலாம். ஆனால் நாம் வாழ்ந்து வரும் வாழ்க்கையை ஆராய்ச்சி செய்துபார்த்தால் நமது சொல்லுக்கும் செயலுக்கும் வெகுதூரம் என்பதை நாம் அறிந்துகொள்வோம். அன்பைப் பெருக்கி அருளுக்குப் பாத்திரமாய் இருக்கின்றவர்கள் பிரசங்கம்பண்ண இயலாத வர்களாயிருந்தாலும் பரமனுக்குரிய பெருவாழ்வை அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் வெறும் வாய்ப்பேச்சுக் காரர்கள் வாழவேண்டிய பக்தி நிறைந்த வாழ்க்கையில் பெரிதும் கீழ்த்தரத்தில் இருந்து வருகிறார்கள். உள்ளிருக் கும் அருள் ஒளியைத் தூண்டிக் கிளப்புதல்வேண்டும். அது அருட்பேறுபெற்றுப் பக்தியில் உயர்ந்த நிலைக்கு வந்துள்ள சான்றோர் ஒருவருக்கே இயலும். பக்தியில் ஊறியிருக்கும் பெரியோர் ஒருவரே பிறர் உள்ளத்தில் பக்தியை ஊட்ட வல்லவராகிறார்.

உள்ளத்தினுள்ளே அருள் உணர்வை யார் ஊட்ட வல்லவர் ஆகின்றாரோ அவரே குரு ஆகத் தகுதியுடையவர். எந்தச் சாதகன் ஒருவனுடைய உள்ளத்தில் அந்த அருள் உணர்வை அவர் கிளப்புகின்றாரோ அந்தச் சாதகனுக்கு சிஷ்யன் என்று பெயர். உமாதேவியார் திருஞானசம்பந் தருக்கு ஞானப்பால் ஊட்டினார். அதை ஞானப்பால் என்று சொல்லுதற்குப் பதிலாகப் பக்தியில் கலக்கிய பால் என்று பகர்வது பொருந்தும். பெற்ற தாய் ஒருத்தி அன்பில்

குழைத்த பாலைத் தன் குழந்தைக்கு ஊட்டுகிருள். சிசு அன்பில் ஊறி வளர்கிறது. ஆனல் அநாதைக் குழந்தை ஒன்றே அந்த அன்பை அறிந்தது கிடையாது. அதற்கேற்ற வாறு அன்பின் வளர்ச்சியும் அநாதைக் குழந்தையினிடத்துத் தடைபட்டு விடுகிறது. குரு ஸ்தானத்தில் இருக்கின்றவர் உமாதேவியாருக்கு ஒப்பாகிருர். அந்த குரு இடத்தில் பக்தி உணர்வு பொங்கிக்கொண்டு இருக்கவேண்டும். சாலப் பரிந்து சிஷ்யனுடைய உள்ளத்திலே அந்த உணர்வு உரு வெடுக்கும்படி ஊட்டுகிற திறமையும் அவரிடத்திருக்க வேண்டும். தம்மிடத்து அந்த அருள் உணர்வு இல்லாது போய்விடுமாகில் பிறர் உள்ளத்தில் அதை ஊட்ட அவருக்கு ஒரு பொழுதும் இயலாது. அன்பில் பால் சுரப்பதுபோன்று அருளில் பக்தி சுரக்கப் பெற்றவரே பிறர்க்குப் பக்தியை ஊட்டுகிருர். பக்தியை ஊட்டும் திறமை குரு இடத்தி லிருப்பதுபோன்று அதை ஏற்றுக்கொள்ளும் தகுதி சிஷ்ய னிடத்து இருக்கவேண்டும். விதை ஒன்றினுள் உயிர்த் தத்துவம் நிறைந்திருந்தால் மட்டும் அது செடியாக முளைக்க வல்லதாகிறது. பிறகு எந்தப் பூமியில் அந்த வித்து விதைக்கப்படுகிறதோ அந்தப் பூமி திருத்திப் பக்குவப் படுத்தியதாய் இருக்கவேண்டும். நல்ல விதையும் பண்பட்ட நிலமும் சேர்ந்து நல்ல விளைவை உண்டுபண்ணுகின்றன. அதே விதத்தில் பக்தியுணர்வில் நிறைந்துள்ள குருவும் அதை ஏற்றுக்கொள்ள அவாவுடையவனுயிருக்கும் சிஷ்ய னும் இணக்கம்கொள்ளுகிற இடத்து இறைவனுடைய அன்பு என்னும் பக்திச் செடி செழிப்புற்று வளர ஆரம்பிக் கிறது.

आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा ।

ஆச்சர்யோ வக்தா குசலோ:அஸ்ய லப்தா

என்பது உபநிஷத வாக்கியம். 'பக்தியை எடுத்து வழங்குகின்ற குரு வியப்புக்குரிய திறமை வாய்க்கப்பெற்றவர். அவரிடமிருந்து அந்த அருள் பேற்றை ஏற்றுக்கொள்ளும் சிஷ்யனே அதற்கேற்ற தகுதி மிக வாய்க்கப் பெற்றவனாக இருக்கவேண்டும்' என்பது இந்த உபநிஷத வாக்கியத்தினுடைய மொழி பெயர்ப்பாகும். இங்ஙனம் அன்பு நெறியை எடுத்து வழங்குபவனும் அதை ஏற்பவனும் மேன்மை மிக வாய்க்கப் பெற்றவர்களாய் இருப்பார்களாகில் அதிசயிப்பதற்குரிய ஆன்ம வளர்ச்சி அந்த இணக்கத்தினின்று உண்டாகும். குரு, சிஷ்யன் ஆகிய இருவரிடத்தும் இத்தகைய பரிபாகம் இல்லாது போய்விடுமாகில் உயர்ந்த நலன் எதுவும் உண்டாகாது. பரிபாகம் அடைந்து தகுதி மிக வாய்க்கப் பெற்றவர்களையே குரு ஸ்தானத்துக்குத் தகுதியுடையவர்களென்று தெரிந்து கொள்ளவேண்டும். உண்மையான அருள்தாகம் எடுத்து அருள் ஒன்றையே நாடுகின்றவர்களைத் தகுதியுடைய சிஷ்யர்கள் என்று கருதவேண்டும். தகுதியொன்றும் வாய்க்கப்பெறாத மற்றவர்கள் குருமார்களாகவோ சிஷ்யன்மார்களாகவோ நடந்துகொள்வது நாடகத்தால் இறைவனுடைய அடியார்கள் போன்று நடந்துகொள்வதற்கு ஒப்பாகும். வெறும் விளையாட்டுப் பிள்ளைகளுடைய செயல்கள் போன்று அன்னவர்களின் முயற்சிகள் அருட்பேற்றை உண்டுபண்ணமாட்டா.

வெறும் விளையாட்டுக்காகவென்று அவர்கள் ஏன் அத்தகைய முயற்சியில் ஈடுபடுகிறார்கள் என்னும் கேள்வி எழலாம். விளையாட்டுக்காகச் செய்கிற செயலிலும் ஓரளவு சிரத்தை இருக்கிறது. பாரமார்த்திக வாழ்வு எத்தகையதாயிருக்கும் என்பதை அறிந்துகொள்ள ஆவல் சிறிது உடையவர்களாக அவர்களிருக்கிறார்கள். அறிவுத்துறை

யிலே அதைப்பற்றிய கருத்துக்கள் சிலவற்றைப் பெறுவதே அவர்கள் கொண்டுள்ள நோக்கமாகும். அவர்கள் அவாவுக் கேற்ற நன்மைகள் ஏதோ சிலவற்றை அவர்கள் பெறுகிறுர் களென்பது உண்மையெனினும் பாரமார்த்திகப் பெருவாழ்வு என்னும் பெரு நிலத்தின் எல்லைப் புறத்திலேயே அன்ன வர்கள் நின்றுவிடுகின்றனர். அதன் உயர்ந்த உன்னத நிலைக்கும் அம்மனிதர்க்கும் வெகு தூரம். ஆனல் விளையாட் டுப் பிள்ளைகள் போன்று அவர்கள் செய்துவருகின்ற பக்தி சாதனத்தில் ஓரளவு பயன் உண்டு. நாளடைவில் அவர் களுடைய உள்ளத்திலும் அருள்தாகம் பொங்கியெழக்கூடும். பாரமார்த்திகப் பெருவாழ்வைத் தீவிரமாக வாழவேண்டு மென்கின்ற ஆர்வம் அப்பொழுது அவர்களுக்கு உண்டாகும். இயற்கையைப் பற்றிய நியதி ஒன்று உண்டு. ஒரு மனிதன் எதற்குத் தகுதியுடையவன் ஆகின்றுனே அதை அவன் அடைந்தே தீருவான். பொருள் துறைக்கு அவ்வுண்மை பொருந்துவது போன்று அருள்துறைக்கும் அது பொருந்து கிறது. பூமி பக்குவமானதும் அதில் விதை விதைக்கும் செயல் நிகழ்ந்தே தீரும். அதே விதத்தில் அருளுக்குப் பாத்திரமாக வேண்டும் என்னும் அவா ஆத்மசாதகன் ஒருவனுடைய உள்ளத்தில் ததும்பி எழுங்காலை அவனை ஆட்கொள்ளுதற்கான குரு ஒருவர் அவனைச் சந்திக்க நேரிடு கிறது. அருள் உணர்வை அவனுடைய உள்ளத்திலே நிலை நாட்டுதற்கான ஆத்மீகப் பேராற்றல் வாய்க்கப்பெற்றவ ராகவும் அக்குரு இருப்பார். அத்தகைய சீரிய குருவுக்கும் தகுதி வாய்ந்த சிஷ்யனுக்குமிடையில் தொடர்வு ஏற் படுவது திண்ணம். அந்த அரிய செயல் நிகழ்ந்தே தீரும். அது ஒருநாளும் தடைப்பட்டுப் போகாது. உள்ளத்தி னுள்ளே அருள் ஒளியைப் பெற்றேயாகவேண்டும் என்னும்

அருள் பித்தம் சாதகன் ஒருவனுடைய உள்ளத்தில் தீவிர மாக உண்டாகவேண்டியது ஒன்றுதான் பாக்கி. வலிவு மிக வாய்ந்ததாக அவ்வுணர்வு அவனுடைய உள்ளத்தில் உதிக்கின்றபொழுது அந்த அவாவைநிறைவேற்றி வைப்பதற் கான பெருமகன் ஒருவர் தாமாக அங்கு வந்து சேருகிறார். அந்தச் சாதகனுடைய உள்ளத்தினுள் அருள் ஒளியை நிலை நாட்டுதல் என்கின்ற அரிய செயலை அவர் செய்துவைக் கிறார். தக்க தருணத்தில் தங்குத் தடையின்றி இத்தகைய தெய்வீகச் செயல் தானாகவே நிகழ்ந்துவருகிறது.

பக்தி நெறியில் ஆபத்துக்கள் சில இருக்கின்றன என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்வது அவசிய மாகிறது. சிஷ்யன் ஒருவனுடைய மன நிலையையே ஈண்டு இதற்குச் சான்றாக எடுத்துக்கொள்வோம். ஆத்ம சாதகன் ஒருவனுக்குத் தாற்காலிகமாக உள்ளத்தினுள்ளே எழுச்சி ஒன்று உண்டாகக் கூடும். அத்தகைய நிலையற்ற எழுச்சியை உண்மையான அருள்தாகம் என்று கருதி அவன் ஏமாற்றம் அடைகிறான். ஆத்மசாதகர்களாக இருக்கின்ற நாம் அனைவரும் நமது மனநிலையைத் துருவி ஆராய்ந்து பார்க்கவேண்டும். உலகிலுள்ள மக்களுள் யாரோ சிலரை நாம் ஆழ்ந்து நேசிக்கின்றோம். நம் அன்புக்கு இலக்காயிருக்கும் அன்னவர் மடிந்து மறைந்து போகின் றனர். அந்நிகழ்ச்சி நம் உள்ளத்தைப் பெரு வேகத்துடன் வந்து தாக்குகிறது. சகிக்கவொண்ணாத் துன்பத்துக்கு நாம் அப்பொழுது ஆளாகிறோம். இவ்வுலக வாழ்வைப்பற்றி நாம் கொண்டிருந்த கருத்தை அப்பொழுது நாம் மாற்றி யமைக்க ஆரம்பிக்கிறோம். இவ்வுலகிலே நம்முடையவைகள் என்று கருதப்பட்டவைகள் எல்லாம் கைநழுவிப் போய் விட்டன என்று உணர்கிறோம். நிலையற்ற இவ்வுலக

இணக்கத்தைவிட உயர்ந்ததும் உறுதியானதுமான வேறு ஏதாவது ஒன்றை அடையவேண்டுமென்று அப்பொழுது நாம் விரும்புகிறோம். அதன் பொருட்டுப் பாரமார்த்திகப் பெருவாழ்வில் ஈடுபட வேண்டுமென்கின்ற தீர்மானத்தையும் அப்பொழுது நாம் செய்கிறோம். இத்தகைய மனநிலையையே ஸ்மசான வைராக்கியம் என்று பகர்கிறோம். ஆனால் நம்முடைய ஜீவிதத்திலே இங்ஙனம் நாம் செய்துள்ள தீர்மானம் எவ்வளவு காலத்துக்கு நிலைத்திருக்க வல்லது என்பதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். நாட்கள் சில கடப்பதற்கு முன்பு அலைபோன்று உதித்த அந்த உணர்வு அடங்கிவிடுகிறது. தீவிரமாக நாம் கொண்டிருந்த தீர்மானம் தானாகத் தணிந்துபோகிறது. உலகப் பற்றில் அழுந்திக் கிடத்தல் என்னும் பழைய நிலையிலேயே நாம் திரும்பவும் வைக்கப்பட்டவர்கள் ஆகிறோம். பரத்தை நோக்கிச் செல்லுதல் என்னும் பாங்கு அப்பொழுது தானாக நமது மனதினின்று மறைந்து பட்டுப்போகிறது. இப்படித் தாற்காலிகமாக உண்டாகிற உணர்வை அருள் தாகம் என்று நாம் தவறுதலாகப் பொருள் படுத்துகிறோம். பொருளற்றதும் நிலையற்றதுமான உணர்வை பொருள் படைத்ததும் நிலையானதும் எனக் கருதுவது மயக்கமாகும். அந்த மயக்கத்துக்கு நாம் உட்பட்டிருக்கும் வரையில் உண்மையான பேருணர்வு நமக்குண்டாகாது. அப் பேருணர்வையே அருள்தாகம் என்று இயம்புகிறோம். அதற்குத் தங்குத்தடையொன்றும் கிடையாது. சாந்த முள் யாண்டும் வடதிசையை நாடி நிற்பது போன்று அருள்தாகம் யாண்டும் இறைவனையே நாடிக் கொண்டிருக்கிறது. பெறுதற்கரிய இப் பேரார்வம் நமக்கு வருகின்றபொழுது அந்த உணர்வை உறுதிப்படுத்தவல்ல அருள் குருவும் நமக்கு வந்து வாய்ப்

பார். நமது தெய்வீக இயல்பை உறுதிப்படுத்தவல்ல பாரமார்த்திகப் பேராற்றல் படைக்கப் பெற்றவராகவும் அக்குரு இருக்கிறார். நாம் படைத்துள்ள அருள்தாகத்துக் கேற்றதாக சாந்தி நமக்கு வந்து வாய்க்கவில்லையென்று பல தடவைகளில் நாம் முறையிடுகிறோம். அப்படி வீணே முறையிடுதற்கு முன்பு உண்மையானதும் நிலைத்ததுமான அருள்தாகம் நம்மிடத்து இருக்கிறதா, என்று நம்மையே நாம் ஆராய்ச்சி செய்து பார்க்கவேண்டும். நம்மிடத்துள்ள அருள் நாட்டம் பொய்யானதாய்ப் போய்விடுமாகில் அருள் பேறு நமக்கு ஒருநாளும் அகப்படமாட்டாது. அருளுக்குப்பாத்திரமாக வேண்டுமென்று அவாக் கொண்டிருப்பவர்களுள் பெரும்பான்மையோருக்கு உண்மையான அருள் நாட்டம் இன்னும் வாய்க்கவில்லை என்பதுதான் உண்மை. பாரமார்த்திகப் பேருண்மையை ஏற்றுக்கொள்ள அவர்கள் இன்னும் தகுதியற்றவர்களாகவே இருந்து வருகிறார்கள். உண்மையான அருள்தாகம் உண்டாவது மனிதனுக்கு வாய்க்கின்ற வாய்ப்புகளுள் தலையாயது. தன்னிடத்து இல்லாத அருள் தாகத்தை இருப்பதாகச் சொல்லுகின்ற மனிதனே இறுதியில் ஏமாற்றமடைகிறான்.

சிஷ்யனாக விரும்புகின்றவனிடத்து உள்ள குறைபாடுகள் இவை என்றால், குரு ஸ்தானத்தை ஏற்க இருப்பவரிடத்து இன்னும் பெரிய குறைபாடுகள் அமைந்திருப்பதும் இயல்பே. குரு ஒருவனுடைய பொறுப்பை வகிக்க முன் வருபவர்கள் பலர் அக்ஞான இருளில் உழன்று கொண்டிருக்கின்றனர். எனினும் தாங்கள் அனைத்தையும் அறிந்திருப்பதாக எண்ணி அன்னவர் இறுமாப்பு எய்துகின்றனர். தாங்கள் அறியவேண்டிய அனைத்தையும் அறிந்திருப்பதாகவே எண்ணிக்கொள்கின்றனர். அவர்களுடைய இறு

மாப்பு அத்துடன் நின்று விடுவதில்லை. மற்றவர்களையும் தோள்மீது தூக்கி வைத்துக்கொண்டு பிறவிப் பெருங்கடலை கடந்து அக்கரை போய்ச் சேரவும் அன்னவர் துணிந்து முன்வருகின்றனர். இங்ஙனம் குருடனுக்குக் குருடன் வழி காட்ட முயன்று இருவரும் பாழுங்குழியில் விழுகின்றனர்.

अविद्यायामन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितं मन्यमानाः ।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥

அவித்யாயாமந்தரே வர்தமாநா:
ஸ்வயம் தீரா: பண்டிதம் மன்யமாநா:
ஜங்கன்யமாநா: பரியந்தி மூடா
அந்தேநைவ நீயமாநா யதாந்தா:

அக்ஞான இருளில் உழலும் மூடர்கள் தங்களைப் பண்டிதர்களாகப் பாவித்து மயக்கமுறுகின்றனர். தங்களது பொருளற்ற அறிவைக்குறித்து அவர்கள் வீண் பெருமை கொண்டு பிரவிருத்தி சக்கரத்தில் சுழன்று சுழன்று வருகின்றனர். குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவதை அன்னவர் ஒத்திருக்கின்றனர்.

குரு ஸ்தானத்துக்குத் தகுதியற்றவர் எனினும் தங்களைத் தகுதியுடையவர்களாகக் கருதுபவர்கள் உலகில் பல பேர் இருக்கின்றனர். குருவின் ஸ்தானத்தை ஏற்றுக் கொள்ள ஒவ்வொருவனும் முன்வருகின்றான். வறியன் ஒருவன் கோடிக்கணக்கான ரூபாயைக் கொடையாக எடுத்து வழங்க முயலுதற்கு ஒப்பாகும் அம் மாந்தரது முயற்சி! தானம் கொடுக்க வறியர் தகுதியற்றவர்களாக இருப்பது போன்று தகுதியற்ற குருமார்களும் அருள்பேற்றை வழங்க இயலாதவர்களாம்.

மலர் ஒன்று மலர்ந்ததும் அதனிடத்துள்ள தேனை அருந்த வண்டுகள் தாமே வந்துசேருகின்றன; அவைகளைத் தேடிப்பிடித்துக்கொண்டு வரவேண்டிய அவசியமில்லை. அதுபோன்று அருளாளராகிய சத்குரு ஒருவர் வாய்க்குங் கால் அவரிடத்திருந்து அருளைப்பெற நல்லார் வந்து வாய்க் கின்றனர். குருவின் தகுதியைக் குறித்துப் பத்திரிகையில் விளம்பரம் ஒன்றும் செய்யவேண்டியதில்லை. அவர் ஒரு குகையில் அமைதியாக அமர்ந்து கொண்டிருந்தாலும் சரி, அவருக்கும் சிரத்தையுடைய சிஷ்யருக்குமிடையில் தொடர்வு தெய்வாதீனமாக உண்டாகிறது. குருவுக்கும் சிஷ்ய னுக்குமிடையில் இப்படியுண்டாகிற அருள் இணக்கம் இயற்கையில் உள்ள நிகழ்ச்சிகளுள் அரிதிலும் அரிதானது.



# 5. குரு சிஷ்ய லக்ஷணம்

குரு ஸ்தானத்துக்கு ஒருவர் தகுதியுடையவர் என்பதை நாம் எப்படித் தெரிந்து கொள்ளமுடியும்? சூரியனை விளக்கிக் காட்டுதற்குத் தீவட்டி ஒன்று பிடித்துக் காட்ட வேண்டிய அவசியமில்லை. அல்லது மெழுகுவர்த்தி ஒன்றி னுடைய துணைகொண்டு நாம் சூரியனைத் தேடிப் பார்க்க வேண்டியதில்லை. சூரியன் உதயமாகின்றபொழுது இயல் பாகவே அதை அறிந்து கொள்கிறோம். பரமாசாரியர் ஒருவருடைய வருகை சூரியோதயத்துக்கு ஒப்பானது. மாந்தர்க்கு நன்னெறியைக் காட்டுதற்கு அவர் எழுந்தருளு கிறார். சிஷ்யன் ஒருவன் தன்னுடைய உள்ளத்தினுள் அந்தப் பரமாசாரியரின் அருள் ஒளி ஒளிர்வதை இயல்பாக அறிந்துகொள்கிறான். எது உண்மையோ அது தன்னைத் தானே விளக்கிக்கொள்ளவல்லது. அது சத்தியம் என்பதை நிரூபிப்பதற்கு வேறு அத்தாட்சி ஒன்றும் தேவையில்லை. தன் பிரகாசத்தைக்கொண்டு சூரியன் தன்னையே விளக்கிக் கொள்வதுபோன்று உண்மையும் தனது ஒளியால் தன்னையே விளக்கிக்கொள்கிறது. நமது சொரூபம் முழுவ திலும் அது ஊடுருவிப் பாய்கிறது. உண்மை தோற்றத் துக்கு வருங்கால் 'இதோ இதுதான் உண்மை' என்று அண்டங்களனைத்தும் அதன் முன்னிலையில் நின்று அதைச் சேவிக்கின்றன. சூரியப் பிரகாசம் போன்று எந்தப் பரமாசாரியர்களிடத்து ஞானமும் பேருண்மையும் ஒளிர்கின் றனவோ அப் பெருமக்களையே நன்னெறி காட்டும் சான்றோர் என உலகம் போற்றுகிறது. மானுடவர்க்கத்தின் பெரும் பான்மையோர் அப்பெரியோர்களைத் தெய்வமெனப் போற்று கிறார்கள். ஆனால் அத்தகைய தலைத்தரமான சான்றோர்களை நாம் உலகில் அடிக்கடி காணமுடியாது. பரிபாகத்தில்

அவ்வளவு மேல்நிலைக்குப் போகாத மற்ற குருமார்களிடத்திருந்தும் நாம் உதவியைப் பெறமுடியும். அப்படி உதவியைப் பெறுவதற்கான மனபரிபாகம் அமைந்திருக்க வேண்டும். நமக்கு உபதேசம் செய்து நன்னெறியைக் காட்டித் தருகிற மேலோர் ஒருவரை உள்ளபடி அறிந்துகொள்ளுதற்கான தகுதி நம்மிடத்தில் இருக்கவேண்டும். குரு ஸ்தானத்திற்குத் தகுதியுடையவர் யார் என்பதைத் தெரிந்துகொள்ளுதற்கான சோதனைகள் சில இருக்கின்றன. நிபந்தனைகள் சிலவற்றை நிறைவேற்றுகின்ற சிறப்பு குருவிடத்து இருக்க வேண்டும். அத்தகைய தகுதிகள் எல்லாம் அவரிடத்து அமையப்பெற்றிருக்குமாகில் அவர் குரு ஸ்தானத்துக்குத் தகுதி வாய்ந்தவர் என்று நாம் ஏற்றுக்கொள்ளலாம். அதே முறையில் சிஷ்யனாக இருக்கத் தகுந்தவன் யார் என்பதற்கும் சில அடையாளங்களும் நிபந்தனைகளும் இருக்கின்றன.

சிஷ்யன் ஒருவன் தூய்மையே வடிவெடுத்தவனாக இருக்கவேண்டும். நல்லறிவையும் விவேகத்தையும் பெறுதற்கான ஆர்வம் அவனிடத்து யாண்டும் ததும்பிக்கொண்டிருக்கவேண்டும். தான் எடுத்துக்கொண்டுள்ள லக்ஷியத்தில் தளராத முயற்சி கொண்டிருப்பவனாக அந்த சிஷ்யன் இருப்பது முற்றிலும் அவசியம். மனத் தூய்மையில்லாத மனிதன் பாரமார்த்திக வாழ்க்கைக்கு ஒரு பொழுதும் தகுதியுடையவன் ஆகமாட்டான். மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களிலும் தூய்மைபடைத்திருப்பது பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு முற்றிலும் அவசியமானதாகிறது. இனி, ஞானவேட்கை அல்லது அருள்தாகம் என்பது ஆத்மசாதகனுக்கு முற்றிலும் அவசியமானது. நாம் வாழ்க்கையில் எதை நாடுகிறோமோ அதைத்தான் பெறுகிறோம் என்பது என்றைக்கும் மாற்றமுடியாத பழங்கோட்பாடு ஆகும். நம்

கருத்தை நாம் எதனிடத்துச் செலுத்துகின்றோமோ அதைத் தான் பெறுகிறோம். நாம் நாடுவது ஒன்று, நமக்கு வந்தமைவது மற்றொன்று என்கிற முரண்பாடு ஒருநாளும் ஏற்படுவதில்லை. பாரமார்த்திகப் பெருவாழ்வு ஒன்றுதான் நமக்கு வேண்டும் என்று நாம் அதையே நாடியிருப்பது மிகக் கடினமானது. அருள் நாட்டம் கொண்டிருப்பது மிக எளிது என்று நாம் நினைக்கிறோம். ஆனால் உண்மையில் நாம் நினைப்பதுபோன்று அது அவ்வளவு எளிதானதன்று. பாரமார்த்திக வாழ்க்கைக்குரிய பேச்சுக்களை நாம் பிரியமாகக் கேட்கிறோம். சமய நெறிகளைப் புகட்டுகின்ற நூல்களை நாம் ஆர்வத்துடன் வாசிக்கிறோம். இப்படிக் கேட்பதாலும், வாசிப்பதாலும் நமக்கு அருள்தாகம் வந்துவிட்டதென்று நாம் எண்ணிவிடலாகாது. பெருநிலையைப் பெற்றாக வேண்டும் என்னும் பேரியக்கம் இடையறாது நம் உள்ளத்தில் நிகழ்ந்துகொண்டிருக்க வேண்டும். உள்ளத்தில் உள்ள கீழ்மையை அகற்றுதற்கான இயக்கம் ஓய்வு ஒழிச்சலின்றி நம்மிடத்து நிகழ்ந்துகொண்டிருக்க வேண்டும். நீந்துகிறவன் நீரோடு போராடுவது போன்று பிறவிப் பெருங்கடலைத் தாண்டிப் பரத்தினையடைதற்கான போராட்டம் இடையறாது நம்மிடத்து நிகழ்ந்துகொண்டிருக்க வேண்டும். நீருக்குள் மூழ்கிக்கிடப்பவர்கள் காற்றுக்குத் திணறுவதுபோன்று மேலாம் நிலையை எய்துதற்பொருட்டு நாம் இடையறாது முயன்றுகொண்டிருப்பது அவசியம். கொண்டுள்ள குறியைப் பெற்று வெற்றியடையும் பரியந்தம் இந்தப் போராட்டத்தை நிறுத்திவிடலாகாது. நல்ல சாதகன் ஒருவனுக்கு அதை நிறுத்திவிட ஒருபொழுதும் முடியாது. ஏதோ இரண்டொரு நாள் முயற்சி எடுத்துக்கொண்டால் போதும் என்று எண்ணலாகாது. சில ஆண்டுகளாக யத்தனித்தால் பெரு

நிலையைப் பெறமுடியும் என்று கருதுவதும் பிசகு. சில பிறவிகளுக்குப் பிறகு அது கிட்டுகிறது என்று கருதுவதும் சரியல்ல. பல நூற்றுக்கணக்கான பிறவிகளாக ஆத்மசாதகன் பெருநிலையின் பொருட்டு ஓயாது போராடிக் கொண்ருக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம். அதற்கெல்லாம் ஆயத்தமாயிருப்பவனே நல்ல முயற்சியுடையவன் ஆகின்ருன். சில வேளைகளில் நாம் எதிர்பாராத வெற்றி அதி விரைவில் வந்து அமையக்கூடும். ஆனால் வெற்றி கிட்டவில்லையே யென்று எண்ணி நாம் தளர்வுறலாகாது. பல கல்பாந்தரங்கள் வரையில் பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருப்பது அவசியமென்ருல் அதற்கும் நம்மில் யார் ஒருவன் ஆயத்தமாயிருக்கிருனோ அவனே நல்ல ஆத்மசாதகன் ஆகின்ருன். அத்தகைய இடையருத முயற்சியில் ஈடுபட ஆயத்தமாயிருக்கிற சிஷ்யனுக்கே வெற்றி இறுதியில் உறுதியாகக் கைகூடுகிறது.

குரு எத்தகைய இயல்புடையவராக இருக்கிருர் என்பதைக் கவனிக்கவேண்டும். சாஸ்திரங்களின் உட்கருத்தை அவர் அறிந்திருப்பது முற்றிலும் அவசியம். உலகிலுள்ள மக்களிற் பெரும்பான்மையோர் கிறிஸ்து மதத்துக்குரிய பைபிளையோ, ஹிந்து மதத்துக்குரிய வேதசாஸ்திரங்களையோ இஸ்லாமிய மதத்துக்குரிய குரானையோ வாசிக்கின்ருர்கள். ஆனால் அப்படி வாசித்து அறிந்துகொண்டது யாது என்பது கேள்வி. வார்த்தைகளையும், வாக்கியங்களையும், சொல்லமைப்பையும், உச்சரிப்பையும், மொழி நயத்தையும் பற்றியுமே அவர்கள் கற்றவர்களாகிருர்கள். இப்படி மொழியமைப்பில் கருத்தைவைப்பதுசமயத்தின் உட்கருத்து ஆகாது. மனிதனுடைய ஜீவிதத்தை அறிந்து கொள்வது வேறு; அவன் செத்துப்போன பிறகு சரீரத்திலிருந்த எலும்பைப்

பற்றி ஆராய்ச்சி செய்வது வேறு. சாஸ்திரங்களில் உள்ள மொழியைப்பற்றி ஆராய்வதெல்லாம் உலர்ந்துபோன எலும்பை ஆராய்வதற்கு ஒப்பாகும். வார்த்தைகளை மிகை பட உபயோகிக்கின்றவர்களும், சொல்வன்மையைப் பெரு மிதமாகக் கையாண்டு மனதைக் கவர்கின்றவர்களும் பெரும் பாலும் குரு ஸ்தானத்திற்குத் தகுதியற்றவர்கள் ஆவார்கள். சாஸ்திரங்களின் உட்கருத்தை அன்னவர்கள் அறிந்து கொள்ளவில்லையென்றே இயம்பலாம். உண்மையான சமயா சாரியர் ஒருவர் சாஸ்திரங்களின் அடிப்படைக் கோட் பாட்டை உள்ளபடி அறிந்தவராக இருக்கவேண்டும். சொற் களின் மூலமாகவே சாஸ்திரங்கள் அரிய கருத்துக்களை வெளியாக்குகின்றன. ஆனால் வெறும் சொற்களில் மன தைச் செலுத்துவது பொருந்தாது. சாஸ்திரங்களிலுள்ள சொற்களை மட்டும் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளுதல் பெரிய வனாந்திரத்துக்குள் அகப்பட்டுக் கொள்ளுதற்கு ஒப் பாகும். அதைவிட்டு வெளியே வரத்தெரியாது உள்ளேயே திகைத்துத் திண்டாடிக் கொண்டிருப்பது பொருந்தாது.

**शब्दजालं महारण्यं चित्तभ्रमणकारणं**
**சப்தஜாலம் மஹாரண்யம் சித்தப்ரமணகாரணம்**

'சொற்கள் என்னும் வலை ஓர் அடர்ந்த காடு போன்றது. மனதை வெறுமனே அலைந்து திரியப்பண்ணுவது அது.' சொற்களைப் பல கருத்துப்படப் பிரிப்பது இணைப்பது, சொல்லழகைக் கையாண்டு பல்வேறு முறைகளிலே பேசு வது, சாஸ்திரங்களில் அமைந்துள்ள கூற்றுக்கு விதவித மான வியாக்கியானங்கள் பண்ணுவது—இச்செயல்கள் எல்லாம் வெறும் நூலறிஞர்களுடைய விவாதங்களுக்கும் மகிழ்ச்சிகளுக்கும் உரியவைகளாம். பாரமார்த்திகப் பேருண்

மையை அறிந்து கொள்வதற்கும், பாரமார்த்திகப் பெருவாழ்வில் முன்னேற்றம் அடைவதற்கும் அவைகள் உதவமாட்டா.

वाग्वैखरी शब्दभरी शास्त्रव्याख्यानकौशलं ।
वैदुष्यं विदुषां तद्वत् भुक्तये न तु मुक्तये ॥

வாக்வைகரீ சப்தபரீ சாஸ்ரவ்யாக்யாநகௌசலம்
வைதுஷ்யம் விதுஷாம் தத்வத் புக்தயே ந து முக்தயே

மற்றவர்களுக்கு சமயக் கோட்பாட்டைப் புகட்டுதற்கு இத்தகைய முறைகளைக் கையாளுகின்றவர்கள் பிறர்க்குத் தங்களுடைய பாண்டித்தியத்தை விளம்பரப் படுத்துதலிலேயே விருப்பமுடையவர்களாக இருக்கிறார்கள். உலகத்தவர்கள் தங்களை மகாபண்டிதர்கள் என்று போற்றவேண்டுமென்பதே அவர்கள் கொண்டுள்ள நோக்கமாகும். உலகிலே பரம குருக்களாகப் பலபேர் அமைந்திருந்தனர். அத்தகையவர்கள் சாஸ்திரங்களுக்கு வியப்புக்குரிய வியாக்யானங்கள் பண்ணுவதில் தங்களுடைய கருத்தைச் செலுத்தவில்லை. சாஸ்திரங்களைக் கசக்கிப் பிழிந்து அவைகளினின்று பல விதமான கருத்துக்களைக் கொண்டுவர அவர்கள் முயற்சி செய்யவில்லை. சொற்களுக்கு என்னென்ன பொருள்கள் அமையக்கூடுமென்பதை விரிவாக விளக்கிக்காட்ட அவர்கள் முயலவில்லை. நூல்களில் வந்துள்ள சொற்கள் பலவற்றிற்கு அடிச்சொற்களாக இருந்தவைகள் எவை என்று விளக்கிக் காட்டுதலிலும் அவர்கள் கருத்தைச் செலுத்தவில்லை. அவர்கள் பேசியது மிகக்குறைவு. அதன் மூலம் அவர்கள் வழங்கியவை சீரிய கோட்பாடுகளேயாம். வாழ்வைப் பண்படுத்துவதற்கான மேலாம் கோட்பாடுகளை எடுத்து வழங்க இயலாதவர்கள் செய்த செயலோ வேறு ஒரு போக்கானது. வெறும் பாண்டித்தியம் படைத்தவர்களிடத்து புகட்டுதற்குரிய

மேலாம் கோட்பாடு எதுவுமில்லை. ஏதோ ஒரு வார்த்தையை சில சமயங்களில் அவர்கள் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டார்கள். ஒரு வார்த்தையைக் குறித்து அவர்கள் இரண்டு மூன்று தொகுதிநூல்களை எழுதிக் குவித்து விட்டார்கள். அந்தச் சொல் எப்படி உண்டாயிற்று, அதை முதல் முதல் உச்சரித்த மனிதன் யார், அம்மனிதன் எத்தகைய உணவை உண்டு வந்தான், அவன் நாள்தோறும் எவ்வளவு நேரம் தூங்கினன் ஆகிய ஆராய்ச்சிகளை வெறும் நூலறிஞர் பெருமிதமாகச் செய்திருக்கின்றனர்!

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபமானக் கதை யொன்று பகர்ந்துள்ளார். மாந்தோப்பு ஒன்றனுள் மாந்தர் சிலர் சென்றனர். ஆங்கு அவர்கள் மரங்களிலிருந்த சிறு கிளைகளையும், பெருங்கிளைகளையும் எண்ணுவதில் கவனம் செலுத்தினர்கள். இலைகள் என்னென்ன நிறம் உடையவைகளாக இருந்தன என்பதை ஆராய்ச்சி பண்ணினர்கள். பின்பு தங்களுக்கிடையில் தங்கள் ஆராய்ச்சியைப் பற்றிய விவாதம் ஒன்று நிகழ்த்தினர்கள். பேச்சுக்குரிய வெவ்வேறு விஷயங்களைப் பற்றி மிக விரிவாக எடுத்து விளக்கினர்கள். அவர்கள் கொடுத்த விளக்கங்கள் கேட்பதற்கு மிக உற்சாகமுடையவைகளாயிருந்தன. ஆனல் அத்தோப்புக்குள் சென்றவர்களுக்கிடையில் ஒரே ஒரு மனிதன் வேருரு போக்கில் நடந்துகொண்டான். ஒரு விதத்தில் அவனை மற்றவர்களை விட விவேகம் படைத்தவன் என்றே இயம்பலாம். இலைகளை எண்ணுதலில் அவன் கருத்தைச் செலுத்தவில்லை. தோட்டக்காரனேடு சிநேகம் செய்துகொண்டு அவனுடைய அனுமதியைப்பெற்றுக் கனி யுண்ண ஆரம்பித்தான். அந்தத் தனி மனிதனுடைய செயலே புத்திசாலித்தனமானது என்று இயம்புவதல்லாது நாம் வேறு என்ன

முடிவுக்கு வருவது! உலகில் இருதரத்தார் இருக்கின்றனர். இலைகளையும், கொம்புகளையும், கிளைகளையும் எண்ணிக் கொண்டிருப்பவர் ஒரு கூட்டத்தார். ஒருவேளை இத்தகைய ஆராய்ச்சி செய்வதில் ஒருவிதப் பயன் இருக்கலாம். ஆனால் கனி அருந்துதல் இலை எண்ணுவதைவிட உயர்ந்த செயல். பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ விரும்புகின்றவர்கள் இலை எண்ணிக்கொண்டிருக்கலாகாது. கனி அருந்துதலே வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை அவர்கள் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். இலை எண்ணுபவர்க்கிடையில் அதாவது வெறும் நூலாராய்ச்சியிலேயே கண்ணுங்கருத்துமாயிருப்பவர்களுக்கிடையில் பாரமார்த்திகப் பெருவாழ்வில் உயர்ந்த நிலைக்குச் சென்றுள்ள அருளாளர்களைக் காண்பது ஒருபொழுதும் சாத்தியமல்ல. பாரமார்த்திகப் பெருவாழ்வே மனிதன் பெறக்கூடியவைகளுள் மிக உயர்ந்தது. மனிதனுக்கு எல்லாவிதமான மேன்மையையும் வழங்கவல்லது அப்பெருவாழ்வு ஒன்றேயாம். பின்பு அத்தகைய நல்வாழ்வு வாழுதற்கு இலை எண்ணுவது போன்ற பெரும் பாடு படவேண்டியது அவசியமல்ல, நீ ஒரு பக்தன் ஆக விரும்புகின்றாயா? அதற்கு ஏற்ற முயற்சியை நேராக எடுத்துக் கொள். எது அவசியமல்ல என்பதையும் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள். கண்ணன் மதுராபுரியில் பிறந்தானா அல்லது விரஜையில் பிறந்தானா என்பதைப் பற்றிய ஆராய்ச்சியைச்சிலர் தீவிரமாகச் செய்கின்றார்கள். அவன் சிறுவனாயிருந்த பொழுது செய்த செயல்கள் எவை என்பதைப்பற்றியும் தீவிரமாக ஆராய்ச்சி செய்பவர்களுண்டு. ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு கீதையை என்ன தேதியில் எந்த நேரத்தில் பகர்ந்தருளினார் என்பதைப் பற்றி விசாரிப்பவர்களும் உண்டு. இவையெல்லாம் உனக்குத் தெரியாது போய்விட்டால்

உன்னுடைய பக்தியின் வளர்ச்சிக்கு அதனால் இடைஞ்சல் ஒன்றும் வாராது. உன்னிடத்தில் அத்தியாவசியமாய் இருக்கவேண்டியது யாது என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள். மனிதன் தன்னுடைய கடமையைச் செய்வதில் எப்படிக் கண்ணுங்கருத்துமாயிருக்கவேண்டும் என்பதைப் பற்றி நேர்த்தியான பாடங்களைக் கீதையில் பகவான் புகட்டியிருக்கிறார். அன்பை ஒரு மனிதன் எப்படி வளர்க்க வேண்டுமென்பதையும் அவர் பகர்ந்தருளியிருக்கிறார். முறையாக உன் கடமையைச் செய்யவும் அன்பைப் பெருக்கவும் நீ கற்றுக்கொண்டால் போதுமானது. ஸ்ரீ கிருஷ்ணபகவான் புகட்டிய கீதோபதேசத்துக்குக் கணக்கற்ற வியாக்யானங்கள் சொல்லுவதும் கீதாசாரியனாகிய அப்பரமாத்மாவின் வாழ்க்கைச் சம்பவங்கள் பலவற்றைப்பற்றி ஆழ்ந்து ஆராய்ச்சிகள் செய்வதும் வெறும் பாண்டித்தியத்தில் விருப்பம் உள்ளவர்களுடைய மனமகிழ்ச்சிக்காக ஏற்பட்டவைகளாம். அத்தகைய பாங்குடையவர்கள் தாங்கள் விரும்பியவாறு அந்த ஆராய்ச்சிகளில் மகிழ்வடைந்திருக்கட்டும். நுண்ணறிவாளர்களாகிய அந்த மஹாமேதைகளினுடைய சம்வாதங்களுக்கு 'சாந்தி உண்டாகட்டும், சாந்தி உண்டாகட்டும்' என்று ஆசீர்வதித்து அவர்களிடத்திருந்து எட்ட விலகியிருந்துகொள். பக்தி என்னும் கனி அருந்த நீ முயற்சி செய். வாழ்க்கையிலே நீ பெறக்கூடிய பேறுகளில் பக்தியைப் பெறுவதே ஒப்பு உயர்வு அற்றது ஆகும். அதை வற்புறுத்துபவர் நல்ல குரு ஆவார்.

குரு ஆக இருக்கிற ஒருவரிடத்து இரண்டாவது நிபந்தனை ஒன்று நிறைவேறப் பெற்றிருக்கவேண்டும். அவர் தூய்மையே வடிவெடுத்தவராயிருப்பது முற்றிலும் அவசியம். எந்தவிதமான பாபச்செயலும் அவருடைய வாழ்க்கை

யில் இடம் பெறலாகாது. மறந்தும் அவர் தப்பான வழியில் போக முடியாது. ஆனால் இதைக் குறித்துச் சிலர் சமாதானம் ஒன்று சொல்ல முன்வரலாம். 'குரு ஒருவருடைய குணாதிசயங்களைப் பற்றியோ, வாழ்க்கை வரலாறுகளைப் பற்றியோ நாம் எதற்காக விசாரித்துப் பார்க்கவேண்டும்? அவர் என்ன புகட்டுகின்றாரோ அது சரியானதா என்று ஆராய்ச்சி செய்து பார்க்கவேண்டும். அவர் கற்பிப்பது ஒழுங்குப்பாடானதாயிருக்குமாகில் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். அவருடைய வாழ்க்கை எத்தகையது என்பதையெல்லாம் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை'—இம்முறையில் பகர்பவர் பலர் உளர். ஆனால் இக்கூற்று சரியானதன்று. பாடம் புகட்டுபவர்களில் இருதரத்தார் இருக்கின்றனர். கணிதம், ரசாயன சாஸ்திரம் போன்ற இப்பிரபஞ்ச சம்பந்தமான விஷயங்களைப் புகட்டுகிறவர்கள் ஒருகூட்டத்தார். வேறொரு விதத்தில் பகருமிடத்து வித்தைகளுள் இரண்டு விதமுண்டு. ஒன்று பரவித்தை, மற்றது அபரவித்தை. கடவுளைப் பற்றிய பாடம் பரவித்தை. இப்பிரபஞ்சத்தைப் பற்றிய கணக்கற்ற கலைஞானங்களெல்லாம் அபரவித்தை. அபரவித்தைகளாகிய ஜோதிடம், வைத்தியம், கணிதம், ரஸாயனம், நாட்டியம், இசை போன்றவைகளைப் புகட்டுகிற மனிதன் எத்தகைய வாழ்க்கை முறையையுடையவனாக வேண்டுமென்றாலும் இருக்கலாம். அவனுடைய வாழ்க்கைக்கும், அவன் புகட்டுகின்ற கலைஞானத்துக்கும் எந்தவிதமான தொடர்புமில்லை. இந்த அபரவித்தைகளை அவன் முறையாக அறிந்துகொண்டவனாகவும், ஐயம் திரிபு அற மற்றவர்களுக்கு எடுத்துப் புகட்ட வல்லவனாகவும் இருந்தால் போதுமானது. அம்மனிதனிடத்து ஒழுக்கம் இல்லாது போய்விட்டால் அவன் புகட்டுகிற பாடத்துக்கு இழுக்கு ஒன்றும்

வாராது. ஆனால் கடவுளை அறிவதற்கு உரிய பரவித்தையோ வேறொரு பாங்குடையது. பக்தி போன்ற பரவித்தையை புகட்டுகிற மனிதன் ஒருவனிடத்துத் தூய்மையும், ஒழுக்கமும் இல்லாது போய் விட்டால் பக்தியைப் பெறவோ அதைப் பிறர்க்கு எடுத்துப் புகட்டவோ அவனுக்கு ஒரு பொழுதும் இயலாது. பக்தியைப் புகட்டுகின்ற குரு இடத்து ஆதியோடந்தமாகப் புனிதத்தோடு கூடிய நல்வாழ்வே நிறைந்திருக்க வேண்டும்.

தூய வாழ்வினின்றே அருள் ஒளி உருவெடுக்கிறது. யார் ஒருவனிடத்து ஒழுக்கமும் தூய்மையும் இல்லையோ அவன் அருள் ஒளிக்கு முற்றிலும் வேற்றான் ஆகின்றான். அத்தகைய புல்லிய மனிதன் புகட்டுதற்கான பாரமார்த்திகப் பெருநெறி ஒன்றுமேயில்லை. அருள் ஒளியைப் பெறவிரும்புகின்ற மனிதனுக்குத் தூயவாழ்வு முற்றிலும் இன்றியமையாதது. மனத் தூய்மை, சொல் தூய்மை, செயல் தூய்மைஆகிய திரிகரண சுத்தி வடிவெடுத்தவனாக அம்மனிதன் இருக்க வேண்டும். இடையீடின்றித் தூயவாழ்வு வாழ்கின்றவனுக்கே அருள் பேறு கிட்டுகிறது. அப்படி அருள்பேறு அடையப் பெற்றவனே அதைப்பிறர்க்கெடுத்து வழங்க வல்லவனாகின்றான். கடவுள்காட்சி காண வேண்டுமென்கின்ற பேச்சு பலர்க்கிடையில் உண்டாகின்றது. ஆனால் கடவுள் காட்சியைக்காண வல்லவர் யார்? முற்றிலும் மனபரிபாகம் அடைந்து தூயமனம் படைத்திருப்பவனுக்கே தெய்வத்தின் காட்சி கிட்டுகிறது. கருவி கரணங்களோய்ந்த தொண்டர்களிடத்தோ நீ வீற்றிருப்பது! என்பது கடவுள் காட்சியைப்பற்றிய ஆப்த வாக்கியமாகும். இப்பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள பெருநிலையைப் பற்றிய அனுபவம் சிறிதளவாவது கிட்டாதா என்று அதை நாடி அலைபவர்களும் உண்டு. கண்ணில்லாதவன் எவ்வ

ளவு தான் முயன்ருலும் கதிரவனைக் காண முடியாது. மனத்தூய்மையடையப் பெருதவன் எவ்வளவு தான் முயன்ருலும் இப்பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள பெருநிலையைச் சிறிதளவாவது சுவானுபவத்தில் பெறமுடியாது. எனவே பக்தி நெறி ஆகிய பாரமார்த்திகத்தைப் புகட்டுகின்ற குரு ஒருவர் வாழ்ந்து வருகிற வாழ்வு மிக முக்கியமானது. அவர் எத்தகைய வாழ்வு வாழ்கிருர் என்பதை ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கவேண்டும். அவர் என்ன புகட்டுகிருர் என்பது முக்கியமானதல்ல. அவர் எத்தகைய வாழ்க்கை வாழ்ந்து வருகிருர் என்பதே மிக முக்கியமானது. பழக்கத்தால் கிளிப்பிள்ளை பேசுகிறது. இக்காலத்தில் யந்திரங்கள் பேசுகின்றன. ஆனல் வெறும் பேச்சால் நமக்கு ஒரு நலனும் உண்டாகாது. தூய்மையே வடிவெடுத்துள்ள குரு ஒருவர் வாழ்ந்து வருகிற நல்வாழ்வு நம்மை நல்லவர்களாகத் திருத்தியமைக்கும். அவர் வாய் திறந்து பேசாவிட்டாலும் அவர் வாழ்ந்து வருகிற புனிதமான வாழ்வு மற்றவர்களை நல்வழியில் கொண்டு செலுத்த வல்லதாகிறது. பக்தியைப் புகட்டுகிற குரு ஒருவர் எவ்வளவுக்கெவ்வளவு தூய்மையே வடிவெடுத்தவராக இருக்கின்ருரோ, அவ்வளவுக்கவ்வளவு அவருடைய செயல்களுக்கு தெய்வீக ஆற்றல் உண்டாகிறது. 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும்' என்பது கோட்பாடு. சொல்லுக்கு சக்தி வருவது தூயவாழ்வை முன்னிட்டேயாம். காந்தக்கல் தன்னிடத்துள்ள காந்த சக்தியை நல்ல இரும்பு அல்லது எஃகு இடத்துச் செலுத்த வல்லது. அதே விதத்தில் தூயவாழ்வு வாழ்ந்து அருள்பேறதனுக்குப் பாத்திரமாயிருக்கிற பெருமகன் ஒருவர் தம்மிடத்துள்ள அருள் பேறதனைப் பக்குவப்பட்டு வருகிற மற்ருெரு ஆத்ம சாதகனிடத்

துச் செலுத்த வல்லவராய் இருக்கின்றார். காந்த சக்தி இல்லாத வெறுங்கல் இரும்பினிடத்து சக்தி எதையுமே செலுத்தாது. அருளாளன் அல்லாதவனுக்கு சிஷ்யனுடைய உள்ளத்தில் அருள் ஒளியைத் தோற்றுவிக்க ஒருபொழுதும் இயலாது. யாரொருவர் குருவுடைய பொறுப்பை ஏற்க வேண்டியவராயிருக்கிறாரோ அவர் ஆத்ம போதம் அடையப் பெற்றவராய் இருக்கவேண்டும். அப்பேருணர்வு அவரிடத்துப் பொங்கித் ததும்பிக்கொண்டிருக்கவேண்டும். அப்பொழுது தான் அந்த அருள் உணர்வை அவர் சிஷ்யனுடைய உள்ளத்திலும்உருவெடுக்கும்படி செய்துவைக்கவல்லவராவார். கொழுந்து விட்டு எரிந்துகொண்டிருக்கின்ற விறகுக் கட்டை ஒன்று அதனோடு தொடர்வு வைக்கும் ஏனைய உலர்ந்த விறகுக் கட்டையில் தீயை மூட்டுகிறது. ஆத்ம போதத்தைக் குருவானவர் சிஷ்யனுக்கு வழங்குவது அத்தகையதாம். சிஷ்யனிடத்திலிருக்கின்ற அறிவுக்கும் அன்புக்கும் ஏதோ சிறிது ஆதரவு தருவது போன்றதல்ல குரு செய்கின்ற செயல். தன்னிடத்துள்ள நெருப்பை விறகுக் கட்டை மற்றவைகளிடத்து மூட்டுவது போன்று அருள் ஒளியை ஆசாரியர் சிஷ்யனுடைய உள்ளத்தில் ஏற்றி வைக்கிறார். அப்படி குருவிடத்திருந்து சிஷ்யனுக்கு வருவது உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற அருள் விருந்து ஆகும். தூய்மையே வடிவெடுத்திருக்கிறவருக்குத்தான் அந்த அருளை வழங்குவது சாத்தியமாகிறது.

மூன்றாவது நிபந்தனை குரு தமது மனதில் கொண்டுள்ள நோக்கத்தைப் பற்றியதாகும். தமக்கு அதனால் பிரதிபலன் ஏதாவது கிடைக்கவேண்டும் என்கின்ற எண்ணம் கொண்டிருப்பவர் தகுதி வாய்ந்த குரு ஆகமாட்டார். சுயநலத்துக்கும் அருள் குருவின் இயல்புக்கும் வெகுதூரம். பொருளையோ,

பெயரையோ, புகழையோ, எதிர்பார்க்கின்றவர் ஒரு நாளும் அருள் குரு ஆகமாட்டார். தூய அன்பினால் தூண்டப் பட்டு அவர் தம் கடமையைச் செய்யவேண்டும். தாய் ஒருத்தி தன் குழந்தைக்கு அல்லும் பகலும் அயர்வடையாது அரும்பணி செய்கின்றாள். அதற்குக் கைம்மாறாக அவள் எதையும் எதிர்பார்ப்பதில்லை. அத்தகைய தாயினும் சாலப் பரிந்து மக்கள் அருள் துறையிலே உய்வு அடையவேண்டும் என்னும் புனிதமான அன்பு சுரந்தவராக அவர் இருக்கவேண் டும். அன்பின் வழியது அருள்போதம். அன்பு இல்லார்க்கு அருளை எடுத்து ஊட்டுவது யாண்டும் இயலாத காரிய மாம். எப்பொழுதாவது குருவுடைய மனதில் சுயநல உணர்வு உருவெடுத்து வருமாகில் அப்பொழுதே அவரிடத் துள்ள அருள் பேறு அழிந்துபட்டுப்போம். இவ்வுலக சம்பந்தமான ஊதியம் எதையும் கருத்தில் கொண்டு அவர் தமது ஒப்பற்ற அருள் பணியைச் செய்யலாகாது. தம்மை ஒரு பரமாசாரியனாக மற்றவர்கள் பாராட்ட வேண்டுமென் கின்ற எண்ணமும் அவருடைய உள்ளத்தில் உதிக்கலா காது. அப்படிப்பட்ட லௌகீக எண்ணங்கள் அவருடைய மனதில் புகுமாகில் அவர் அப்பொழுதே அருள் நிலையினின்று வழுவியவர் ஆவார்.

**அன்புஞ் சிவமும், இரண்டென்பர் அறிவிலார்;**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்;**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்,**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.**

அன்பு சொரூபமாய் இருப்பவர்களே சிவசொரூபம் ஆகின்றனர். அப்படி சிவ சொரூபம் ஆகின்றவரே குரு ஆகிறார். தம்மிடத்துள்ள பேரன்பு என்னும் சிவ சொரூ

பத்தை சிஷ்யனுக்கு எடுத்து நல்கவும் அவருக்கு இயலுகிறது.

நீ யார் ஒருவரை உனக்குக் குருவாக ஏற்றுக்கொள்ள விரும்புகின்றாயோ அவரிடத்து ஈண்டு கூறியுள்ள சிறப்புக்கள் எல்லாம் அமையப்பெற்றிருக்குமாகில் உனக்கு நல்ல ஆதரவும், பாதுகாப்பும் அமைந்து விட்டன என்று வைத்துக் கொள். அல்லது நீ நாடுகின்ற மனிதரிடத்து இப்பெருமைகள் எல்லாம் அமையப்பெறாது இருக்குமாகில் நீ அவரிடமிருந்து உபதேசம் ஏற்றுக்கொள்ளாதிருப்பது நலம். ஏனென்றால் குரு சிஷ்ய இணக்கத்தில் ஆபத்து ஒன்று நிகழ்வதுண்டு. குருவினுடைய இயல்பு சிஷ்யனுக்கு வந்தமைகிறது என்பது வாழ்க்கையைப் பற்றிய கோட்பாடு ஆகும். குரு ஸ்தானத்தை வகித்திருப்பவர் சிஷ்யனுடைய உள்ளத்தில் நலத்தை நிலைநாட்ட இயலாவிட்டால் அதற்கு மாறாகக் கேட்டை அவன் உள்ளத்தில் பதிய வைப்பார். இத்தகைய ஆபத்துத் தனக்கு நேராதிருத்தல் பொருட்டு சிஷ்யன் மிக எச்சரிக்கையாயிருப்பது அவசியம். அதாவது ஆத்ம சாதகன் ஒருவன் அவசரப்பட்டு அகப்படுகிற எவரையேனும் தனக்குக் குருவாக ஏற்றுக்கொள்ளலாகாது. பொறுமையுடன் அவன் காத்திருப்பதே முறை.

श्रोत्रियोऽवृजिनोऽकामहतो यो ब्रह्मवित्तमः ।

ச்ரோத்ரியோ அவ்ருஜினோ அகாமஹதோ

யோ ப்ரஹ்ம வித்தமః

'சாஸ்திரங்களை நன்கு கற்றுத் தெளிந்திருப்பவன், பாபங்களனைத்திடத்திருந்தும் விடுபட்டிருப்பவன், காமத்துக்கு வசப்படாதிருப்பவன், பிரம்மத்தை சாக்ஷாத்கரித்திருப்

பவன்'—இத்தகைய பக்குவமுடையவரே குரு ஆவதற்குத் தகுதியுடையவர்.

இதுகாறும் பகரப்பட்டதினின்று பொருள் ஒன்று விளங்குகிறது. நாம் பக்தியையோ, பாரமார்த்திகப் பெரு வாழ்வையோ அறிந்துகொள்ளவிரும்புவோமாகில் அவைகளை நமக்கு விளக்கிக் காட்டுதற்கு எல்லாரும் தகுதியுடையவர்கள் ஆகமாட்டார்கள். எங்கிருந்து வேண்டுமென்றாலும் நாம் அவைகளைப் பெற்றுவிடவும் முடியாது. பக்தி நிறைந்த பாரமார்த்திக வாழ்வைப் பொருத்தமான பரமாசாரியர் ஒருவரிடத்திருந்தே நாம் பெறமுடியும் என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். கவிஞர் ஒருவர் அரிய கருத்து ஒன்றைக் கவிதைச் சுவையுடன் வெளியிட்டிருக்கிறார். அவர் பகர்ந்திருப்பதாவது: கற்கள் ஹிதோபதேசங்கள் செய்கின்றன. ஓடுகின்ற ஓடைகள் நூல்களாக அமைந்திருக்கின்றன. தென்படுகின்ற ஒவ்வொன்றும் நலமே வடிவெடுத்ததாக இருக்கின்றது. கவிதை என்கிற முறையில் இக்கருத்து பாராட்டுதற்குரியது. மனிதன் ஒருவன் பாரமார்த்திகப்பெருவாழ்வை ஏற்றுக்கொள்ளுதற்கான பரிபாகம் அடையப்பெறாதவனாக இருப்பானாகில் அவனுக்கு யாரும் எவ்வுண்மையையும் ஒருசிறிதளவாவது புகட்ட முடியாது. வியாழபகவானே அவனுக்கு குருவாக வந்து வாய்த்தாலும் அவனுடைய மனதில் பரிபாகம் இன்னும் ஏற்படாதிருக்குமாகில் அவன் ஒரு நலனையும் அடையமாட்டான். கற்கள் யாருக்கு ஹிதோபதேசங்கள் செய்கின்றன என்பது கேள்வி. ஓடுகின்ற ஓடைகள் நல்லறிவைப் புகட்டும் நூல்களாக யாருக்குப் பயன் படுகின்றன என்பதும் கேள்வி. யார் ஒருவனுடைய ஹிருதய கமலம் தூய்மையில் மலர்ந்திருக்கிறதோ, யாரு

டைய உள்ளத்தினுள் தெய்வீகம் திகழ ஆரம்பித்திருக்கிறதோ, யாருடைய வாழ்வு பாரமார்த்திகத்தைப் பெறுதற்கேற்ற பரிபக்குவம் அடைந்திருக்கிறதோ அத்தகைய மனிதனுக்கு இயற்கையில் இருப்பவைகளெல்லாம் நல்லுபதேசங்கள் செய்து கொண்டிருக்கின்றன என்பது உண்மை. சூரிய வெளிச்சம் படிவதால் தாமரை மலர்கின்றது. மனது என்னும் மலர் நல்வாழ்வில் முதிர்ச்சியடைகிறது. நலன் அனைத்தும் வாய்க்கப்பெற்றுள்ள ஞான குருவின் அருள் ஒளியால் அத்தகைய மனம் என்னும் மலர் விரிகிறது. இங்ஙனம் அருளுக்குப் பாத்திரமாகி பக்தியில் விரிந்திருக்கின்ற ஹிருதயகமலம் நல்லுபதேசத்தை ஏற்றுக்கொள்ளத் தகுதியுடையதாகிறது. இத்தகைய மனபரிபாகம் அடைந்திருக்கிறவனுக்குக் கற்களினின்று ஹிதோபதேசம் வந்து கொண்டிருக்கிறது என்பது உண்மை. ஓடைகளினின்று அவனுக்கு உயர்ந்த செய்திகள் எட்டுகின்றன என்பதும் உண்மை. வானத்தில் இலங்குகின்ற நக்ஷத்திரங்கள், சூரியன், சந்திரன் ஆகிய இவையாவும் பக்குவப்பட்டுள்ள ஆத்மாவுக்கே உயர்ந்த கருத்துக்களைப் புகட்டிக் கொண்டிருக்கின்றன. மனபரிபாகம் அடைந்திருக்கின்றவனுக்குப் பிரபஞ்சம் முழுதுமே பாடம் புகட்டுகிறது என்பது உண்மை. இயற்கையில் உள்ள எப்பொருளைப் பார்த்தாலும் அதனிடத்திருந்து சீரிய எண்ணத்தை வாங்கிக்கொள்ள அவன் தகுதியுடையவன் ஆகின்றான். ஆனால் ஹிருதயகமலம் இன்னும் திறக்கவில்லையென்றால், உயர்ந்த கோட்பாடுகளை வாங்கிக் கொள்வதற்கான பரிபாகம் அவனுக்கு இன்னும் வரவில்லையென்றால் கற்கள் எல்லாம் வெறும் கற்களாகவே அவனுக்குத் தோன்றும். ஓடைகளிலும் அவன் அருள் ஒளி ஒன்றையும் காணமாட்டான். காண்பதற்கரிய பொருள்களைக் காட்சிச் சாலை

யில் சேகரித்து வைத்திருக்கிறார்கள் என்று வைத்துக்கொள் வோம். ஆங்கு குருடன் ஒருவன் போய்ச் சேருகிறான். எவ்வளவுதான் முயற்சி எடுத்துக் கொண்டாலும் அவன் எப்பொருளையும் காணமாட்டான். அக்காட்சிச் சாலைக்குள் செல்லுவதால் அவன் பயன் எதையும் அடையமாட்டான். முதலில் அவன் கண்ணைப் பெறவேண்டும். அதன் பிறகே அக்காட்சிச் சாலையிலுள்ள பொருள்களின் பெருமை அவனுக் குப் புலனாகும். அங்ஙனம் பாரமார்த்திகப் பெருவாழ்வின் சிறப்புகளை அறிந்து கொள்ளுதற்கு மனக்கண் திறக்கப் பெற்றிருக்கவேண்டும்.

சிஷ்யனுக்கு ஞானக்கண்ணைத் திறந்து வைப்பவர் குரு என்று அழைக்கப்படுகிறார். எனவே குருவுக்கும் சிஷ்யனுக்கு மிடையில் உள்ள இணக்கம் மிக மேலானது. ஒரு குடும்பத் தில் பெற்றோர்க்கும் பிள்ளைகளுக்கும் எத்தகைய இணக்கம் இருக்கிறதோ அத்தகைய இணக்கம் குருவுக்கும் சிஷ்யனுக்கு மிடையில் உண்டு. ஒரு குடும்பத்தில் முன்னோர்க்கும் பின் னோர்க்கும் எத்தகைய தொடர்வு உண்டோ அத்தகைய தொடர்வு குருவுக்கும் சிஷ்யனுக்குமிடையில் உண்டு. குரு விடத்தில் நம்பிக்கையும், பணிவும், அடிபணிந்து நடத்தலும், போற்றுதலும் சிஷ்யனுக்கு உண்டாக வேண்டும். அத்த கைய சீரிய மனப்பான்மைகள் அவனுக்கு உண்டாகாவிட் டால் பாரமார்த்திகப் பெருவாழ்வில் மேல் நோக்கிப் போதல் என்பது அவனுக்கில்லை. குரு சிஷ்ய இணக்கம் எவ்வளவுக் கெவ்வளவு உயர்ந்ததாகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு ஆத்மீக வாழ்க்கையில் மேல் நிலையடைவதும் சாத்தியமா கிறது. குரு பக்தியின் மூலமாகவே சான்றோர்கள் மிகப் பெரு நிலைக்கு வந்திருக்கிறார்கள். இது வாழ்க்கையைப் பற்றிய பேருண்மையாகும். எந்த நாட்டில் குரு சிஷ்ய

இணக்கம் பக்தியை அடிப்படையாகக்கொண்டு இத்தகைய உயர்ந்த நிலையில் அமையவில்லையோ, அந்த நாட்டில் மத போதகர்கள் வெறும் பிரசங்கிகளாக இருக்கிறார்கள். மதத்தைப் புகட்டுகிறவர் தம் உழைப்புக்கீடாக ஏதோ கொஞ்சம் செல்வத்தை எதிர் பார்க்கிறார். அவர் பிரசங்கத்தைக் கேட்கப் போகின்றவர்கள் தங்களுடைய மூளையில் போதகருடைய சொற்கள் நன்கு திணிக்கப் பெற்றிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். இப்படிக் கொஞ்சம் சொற்பொழிவு நிகழ்த்தியான பிறகு மத போதகர் தம் போக்கில் போகிறார். அதன் பிறகு போதித்தவருக்கும், போதிக்கப் பெற்றவர்க்கும் இடையில் ஒரு விதமான தொடர்வும் உண்டாவதில்லை. அத்தகைய சூழ்நிலைகளில் பாரமார்த்திகப் பெருவாழ்வு என்பது சிறிதேனும் உருவெடுக்காது. அருட்பிரசாதத்தை அந்நிலையிலே எடுத்து வழங்குதற்கு யாரும் இல்லை. பெறுதற்கரிய அப்பேற்றினை ஏற்றுக் கொள்ளுவாரும் அந்நிலையில் இல்லை. சமய போதனை என்பது அத்தகைய மாந்தர்க்கிடையில் ஒருவிதமான வர்த்தகமாகும். பணம் கொடுத்து அருட்பேற்றினைப் பெறலாம் என்று அன்னவர்கள் எண்ணி வருகின்றனர். பாரமார்த்திகப் பெருவாழ்வு என்பது அவ்வளவு எளியதாகுமாகில் நாம் கடவுளுக்கு நன்றி மிகச் செலுத்தலாம். ஆனால் அதுதான் சாத்தியமல்ல. சமய உணர்வும், சமய வளர்ச்சியும் வியாபாரமுறையில் ஒருநாளும் வந்தமையாது. அது மிக உயர்ந்த நிலையிலிருப்பதால் அதற்கேற்ற பரிபக்குவம் அடைந்தவர்களாக நாம் ஆகவேண்டும்.

மனிதன் பெறுகிற அறிவுகளுள் மிக உயர்ந்த நிலையிலிருப்பது பாரமார்த்திக வாழ்வைப் பற்றிய அறிவு. மனிதன் அடைகின்ற ஞானங்களுள் மிக உயர்ந்த நிலையிலிருப்பது

பரத்தைப் பற்றிய மெய்ஞ்ஞானம். இந்த மெய்ஞ்ஞானத்தை விலை கொடுத்து நாம் வாங்க முடியாது. புஸ்தகங்களி னின்றும் நாம் அதைப் பெற முடியாது. உலகிலுள்ள வெவ்வேறு மூலை முடுக்குகளுக்கு எல்லாம் சென்று நீ உன் தலையை மோதிக்கொள்ளலாம். இமயமலை முழுதையுமே வேண்டுமானாலும் நீ சுற்றிப் பார்க்கலாம். பொதியாசலம் முழுதிலும் நீ அலைந்து திரியலாம். குகைகளுக்குள்ளே தேடிப் பார்க்கலாம். கோகர்ணம் போன்ற தீவுகளிலும் தேடிப் பார்க்கலாம். திபேத்திலுள்ள கயிலாயகிரியை அங்கப்பிரதக்ஷிணம் செய்து பார்க்கலாம். கண்ணன் வாழ்ந் திருந்த துவாரகைக்குப் போகலாம். அப்படி உலகெலாம் தேடியும் நீ நாடுகிற பாரமார்த்திகப் பெருவாழ்வை எங்கும் காணமாட்டாய். அப்படி அலைந்து திரிதற்கு மாறாக உன் உள்ளத்தைப் பக்குவப்படுத்து. அருள் ஒளியைப் பெறுதற் கான தூய மனநிலையை உன் உள்ளத்தினுள் உண்டுபண் ணிக்கொள். உன் உள்ளத்தினுள்ளே அருள் ஒளியை நிலை நாட்டுதற்கான சத்குரு ஒருவர் உனக்கு வாய்க்கவேண்டு மென்று இறைவனுடைய அருளை நாடி நில். நீ பக்குவம் அடைகின்றபொழுது இறைவன் அருளால் உனக்கு சத்குரு வாய்க்கிறார். அத்தகைய ஞானத் தந்தை தெய்வாதீனமாக உனக்கு வந்து வாய்க்கின்றபொழுது ஒரு குழந்தையினு டைய முழு நம்பிக்கையும் தூய மனப்பான்மையும் உடைய வனாக இருந்துகொண்டு அவருக்குப் பணிவிடை செய். உன் மனதில் கோணலான தன்மை எதும் இருக்க இடந்தரலா காது. எளிமையும், இனிமையும் வடிவெடுத்தவனாக இரு. புறத்திலுள்ள தூய காற்று அறையினுள்ளே வருவதற்கு ஜன்னலைத் திறந்து வைப்பது போன்று உன்னுடைய உள் ளத்தை அந்த அருள் குருவுக்கு உரியதாக அவரிடம்

ஒப்படைத்து வை. கடவுளே அந்த வடிவில் உன்னை ஆட் கொள்வதற்கு எழுந்தருளியிருக்கின்றாரென்று உணர் வாயாக. கடவுளையும், குருவையும் ஒரேபாங்கில் காண்பவனே நல்ல ஆத்ம சாதகன் ஆகின்றான். இத்தகைய மேலாம் மனப் பான்மையுடன் கடவுளை நாடுகின்றவர்களே உண்மையான ஆத்ம சாதகர்கள் ஆகின்றார்கள். தூய அன்பும், தீவிரமான பக்தியும் அவருடைய உள்ளத்தில் ததும்பிக்கொண்டு இருக்க வேண்டும். சத்திய சொரூபமாயுள்ள ஈசன் அப்பொழுது தமது சொரூபத்தை அந்த சாதகனுக்கு குருவின் மூலமாகக் காட்டியருளுகிறார். சத்தியம், சிவம், சுந்தரம் என்னும் அடைமொழிகள் எல்லாம் அப்பரம்பொருளுக்கு முற்றிலும் பொருத்தமானவைகள் என்பதை பக்தன் அப்பொழுது உணர்வான்.



## 6. ஆசாரிய புருஷர்களும் அவதாரமும்

இறைவனுடைய திருநாமம் எந்த இடத்தில் உச்சரிக்கப்படுகிறதோ அந்த இடம் தானே தூயதாய் அமைகிறது. நாமம் உச்சரிக்கப்படுகிற இடத்துக்கு அவ்வளவு மகத்துவம் உண்டாகிறதென்றால் அதை உச்சரிக்கிற மனிதன் இன்னும் எவ்வளவு மேன்மை வாய்க்கப்பெற்றவனாக இருக்கமாட்டான்! ஆத்மீகப் பேருண்மை இன்னதென்று தன் வாழ்க்கையின் மூலம் விளக்கம் தருகிற மனிதர் ஒருவர் இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அத்தகைய பெரும்கனிடத்து நாம் எத்தகைய பரம பக்தி வைக்கவேண்டுமென்பது சொல்லாமலேயே விளங்குகிறது. பாரமார்த்திகப் பேருண்மையைத் தாம் வாழ்ந்து வரும் வாழ்க்கையின் மூலம் விளக்கிக் காட்டுகின்ற பரமாசாரியர்கள் இப்பாருலகிலே பார்ப்பதற்கரியவர்களாம். எனினும் இவ்வையகத்தில் அத்தகைய பெருமக்கள் அறவே இல்லாது போய்விடுவதில்லை. மானுட சமுதாயத்தினுள் அத்தகைய பெருமக்களே யாண்டும் மாண்புமிக வாய்க்கப்பெற்றவர்கள் ஆகின்றனர். சமுதாய மென்னும் பூஞ்சோலையில் அலர்ந்துள்ள அரிய மலர்களென்று அன்னவர்களை இயம்பவேண்டும். அப்பெருமக்களின் இயல்பு எத்தகையதென்பது அடுத்த கேள்வி.

**अहेतुकदयासिन्धुः அஹேதுக தயாஸிந்துः**

'பிரதிபலன் எதையும் எதிர்பாராத கருணைக் கடல்' என்று அவர்களை இயம்பவேண்டும். இனி, யாரெல்லாம் அவதார மூர்த்திகளாக அவனியில் வருகின்றார்களோ அவர்கள் மற்றவர்களுக்கு யாண்டும் வழிகாட்டிகள் ஆகின்றனர்.

**आचार्यं मां विजानीयात्**

**ஆசார்யம் மாம் விஜாநீயாத்**

'என்னை ஆசாரியன் என்று அறிந்து கொள்க' என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாகவதத்தில் பகர்ந்துள்ளார். இவ் வையகத்திலே ஆசாரியப் பெருமக்கள் எப்பொழுதாவது ஒரு காலத்தில் இல்லாது மறைந்து பட்டுப் போவார் களாகில் அப்பொழுது இது ஒரு காழ்நகரம் ஆகிவிடுகிறது. அதனால் இவ்வையகம் விரைவில் அழிவை நோக்கிச் செல்வ தாகிறது.

ஆசாரிய புருஷர்களுக்கிடையில் சாமானியமானவர்க ளென்றும், சிறப்பு மிக வாய்க்கப்பெற்றவர்களென்றும் இரு தரத்தார் இம்மண்ணுலகில் இருக்கின்றனர். சாக்ஷாத் பரம் பொருளே அவதார மூர்த்திகளாகத் தோன்றி வருவதுண்டு. அன்னவர்களிடத்து ஈசுவர விபூதிகள் தலைமை தாங்கித் திகழ்வதைக் காணலாம். தங்கள் திருக்கரத்தால் தீண்டுவ தாலேயே மன்னுயிர்களிடத்துப் பாரமார்த்திகப் பேரியல்பை மூட்டுவிக்கும் மகிமை அவர்களிடத்து மிளிர்கிறது. இனி, அப்பெருமக்களுடைய திருமேனி சிஷ்யர்களுடைய உடலின் மீது தோய வேண்டுமென்கின்ற அவசியமுமில்லை. வெறும் சங்கல்பத்தாலோ, அல்லது ஆசீர்வாதத்தாலோ சிஷ்யர்களை உயர்நிலைக்கு எடுத்துச் செல்லும் பேராற்றல் அவர்களுக்கு உண்டு. அப்பெருமக்களின் எண்ணத்தின் வேகத்தால் சீலத்திலே கடைப்பட்டுக் கிடக்கும் கீழ் மக்களும் நொடிப்பொழுதிலே மேன்மக்களாக மாறியமைகின்றனர். பரமாசாரியர்கள் என்று அழைப்பதற்கு அப்பெருமக்களே தகுதி மிக வாய்க்கப்பெற்றிருக்கிறார்கள். மானுட வடிவங் களில் கடவுள் தம்மை விளக்கிக் காட்டுகிறார் என்று அன்ன வர்களைக் குறித்து இயம்பலாம். கடவுளைக் காண்பதெங்ஙனம் என்னும் கேள்வி யாண்டும் எழுகிறது. அச்சான்றோர்களின் வாயிலாகவன்றி நாம் ஒரு பொழுதும் கடவுளைக் காண

முடியாது. அப்பெருமக்களைப் போற்ருது புறக்கணித்து விடவும் நமக்கு இயலாது. உண்மையில் நம்முடைய போற்று தலுக்கு முற்றிலும் பொருத்தமானவர்கள் அவர்களேயாம்.

கடவுளைக்காண வல்லவன் யார்? ஏதேனும் ஒரு வடிவத்தின் மூலமாகவன்றிக் கடவுளை யாரும் காண முடியாது. வடிவங்களுள் மானுட வடிவமே கடவுளின் சொரூபத்தை உள்ளபடி விளக்கிக்காட்ட இதுகாறும் உதவி புரிந்திருக்கிறது. மானுட வடிவத்தின் மூலமாகவன்றி வேறு எந்த விதத்திலாவது நாம் கடவுளைக் காண முயற்சி செய்தால் நாம் அவரைப் பரிகாசத்துக்குரிய ஒரு வடிவினராகப் பண்ணி விடுகிரேம். அவருக்கு நாம் கற்பிக்கின்ற புதிய வடிவங்களெல்லாம் ஒரு பொழுதும் மானுட வடிவத்துக்கு ஒப்பாகமாட்டா. கதை ஒன்றைப்பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கின்ரேம். சிவபெருமானுடைய சொரூபத்தை அமைத்துத் தரும்படி அக்ஞான இருளில் உழன்ற மனிதன் ஒருவன் வேண்டிக் கொள்ளப்பட்டான். அவனும் அவ்வேண்டுதலுக்கிணங்கி பல நாட்களாகப் பெருமுயற்சி யெடுத்துக்கொண்டு இறைவனுக்கு வடிவம் ஒன்று கொடுக்கலாஞன். அதைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தவர்கள் அது ஒரு குரங்கின் வடிவம் எனக் கண்டனர். கடவுளுக்குச் சரியான வடிவத்தை அமைத்துக் கொடுக்க அந்த அறிவிலி ஒருவனுக்குத்தான் இயலாது போய்விட்டதென்று நாம் எண்ணலாகாது. வடிவங்களையெல்லாம் கடந்துள்ள கடவுளுக்கு வடிவம் கொடுக்க முயலுகின்ற ஒவ்வொரு மனிதனும் தோல்வியுறுவது திண்ணம். ஏனென்ருல் எத்தகைய வடிவத்தில் நாம் இப்பொழுது இலங்கிக் கொண்டிருக்கின்ரேமோ அத்தகைய வடிவத்துக்கு உயர்ந்தது எதையும் உருவாக்க நமக்கு இயலாது. கடவுளை ஒரு மேலான மனித

ஞக்க் கருதுவதுதான் மனிதனுடைய போக்கு. இப்பொழுது மானுட வடிவத்திலே கட்டுண்டவர்களாக நாம் இருந்து வருகிறோம். மானுட வடிவத்தையும் மானுடத் தன்மையையும் கடந்து அவைகளுக்கப்பாலுள்ள பெருநிலை ஒன்றை எய்த நமக்கு இயலும். அப்பொழுது கடவுளையும் அவருடைய நிஜ சொரூபத்தில் காண நமக்குச் சாத்தியமாகும். ஆனால் நாம் மானுடராய் இருக்கும் வரையில் நாம் கடவுளை மானுட வடிவத்தின் மூலமாகத்தான் வழிபடமுடியும். கடவுளையும், பரிபூரண நிலையிலுள்ள ஒரு மனிதனை நாம் கருதுகிறோம். வேண்டுமென்றால் மனிதன் என்னென்னவோ பேசலாம். ஏதேதோ முயற்சிகளையெல்லாம் அவன் எடுத்துக் கொள்ளலாம். அவையாவுக்குமிடையில் தெய்வத்தை ஒரு பரிபூரண நிலையடைந்த மனிதனைக் கருதுவதைத் தவிர வேறு எதையும் அவன் செய்ய முடியாது. பரம்பொருளைப் பற்றி நுண்ணறிவு நிறைந்த சொற்பொழிவுகள் பல செய்யலாம். பிரபஞ்சத்தின்கண் உள்ள ஏனைய பற்பல பொருள்களைப் பற்றியும் அறிவு நிறைந்த பேச்சுக்களைப் பேசலாம். பெரிய பகுத்தறிவாளர்களாகவும் மக்கள் மாறியமையலாம். கடவுள் மானுட வடிவத்தில் அவதரித்து வருவது பொருளற்ற மூட நம்பிக்கை யென்றும் யுக்தி பூர்வமாக ஏராளமாகப் பேசலாம். திறமை வாய்ந்த அப்பேச்சுக்களினின்று மனிதனுக்குத் திருப்தியும் மிக உண்டாகக்கூடும். ஆனால் பழக்கத்தில் கொண்டு வரக்கூடிய கோட்பாடு ஒன்றைப் பற்றிச் சற்று நிதானமாக எண்ணிப் பார்ப்போம். கடவுள் இப்படி இருக்கிறார், இப்படியில்லை யென்று வெறும் வாய்ப் பேச்சை ஏராளமாகப் பொழிவதற்கு அடிப்படையாக இருப்பது யாது? பேசிய பேச்சுக்களெல்லாம் வெறும் பூஜ்யமாக முடிந்து விட்டன என்பது புலனாகும். பெருமிதமான பிதற்றுதல் நிகழ்ந்ததே கண்கூடான பலன் ஆயிற்று.

கடவுள் மானுட வடிவத்தில் வருவதில்லை என்னும் கோட்பாடுடைய மதங்கள் சில உலகில் இருக்கின்றன. கடவுள் மானுட வடிவத்தில் வந்தால் அவருடைய கடவுள் தன்மைகளெல்லாம் அவரை விட்டு அகன்று போய்விடுகின்றன என்பது அம்மதக்கோட்பாடுகளின் முடிவாகும். அத்தகைய கோட்பாடுகளை மக்களுக்கிடையில் புகட்ட விரும்புகின்ற சிலர் அறிவுத் திறன் வாய்க்கப்பெற்றவர்களாக இருந்துகொண்டு அரிய பிரசங்கங்கள் செய்வதுண்டு. அவதார மூர்த்திகளாக உலகில் தோன்றியிருக்கின்றவர்களைக் கடவுளாகக் கருதி வணங்கலாகாதென்று அத்தகைய பேச்சாளர்கள் தங்கள் யுக்திக்கு ஒத்த முறையில் மனதைக் கவரக்கூடிய அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்துகின்றனர். கேட்டுக்கொண்டிருப்பதற்கு அவர்களுடைய பேச்சுக்கள் வசீகரமாய் இருக்கின்றன. எனினும் அத்தகைய பிரசங்கிகளிடத்து நாம் திருப்பிக்கேட்கவேண்டிய கேள்வி யொன்று இருக்கிறது. கடவுள் என்னும் பெரிய பொருளுக்கு அன்னவர்கள் கொடுக்கின்ற விளக்கம் யாது என்று நாம் அவர்களை மடக்கிக்கேட்கவேண்டும். கடவுளை சர்வசக்திமான் என்றும், எங்கும் நிறைபொருள் என்றும் இன்னும் அஃதோரன்ன அரிய சொற்களைச் சொரிந்து அவர்கள் கடவுளுக்கு விளக்கம் கொடுக்கிறார்கள். பகட்டான அச்சொற்களுக்கு அடிப்படையாயுள்ள கருத்துக்கள் யாவை என்று நாம் விசாரித்துப் பார்க்கவேண்டும். அடுக்கடுக்காக ஏதோ பதங்களை அவர்கள் பிரயோகித்து விட்டார்களே யொழிய கருத்து ஒன்றும் அவர்களுடைய மனதில் படியவில்லை யென்பது வெளியாகும். பாமரன் ஒருவன் வீதியில் போய்க்கொண்டிருக்கிறான். புத்தகம் எதையும் அவன் படித்தது கிடையாது. கடவுளைப் பற்றிய கருத்தும் அவனுக்கு ஒன்றும்

இல்லை. அத்தகைய அறிவிலிக்கும், இத்தகைய பெரிய பேச்சாளனுக்குமிடையில் அதிக வித்தியாசமில்லை. உண்மையில் அந்தப் பாமரனைப் போன்றே இப் படிப்பாளனும் ஈசுவரத்தத்துவம் எதையும் அறியாதவனாகவே இருக்கிறான். மானுடனாகப் பிறந்துள்ள ஒருவன் மானுட இயல்புக்கு அன்னியமாகக் கடவுளை ஒருநாளும் கிரஹிக்க முடியாது. இனி படிக்காத பாமரனுக்கும் படித்துள்ள பேச்சாளிக்குமிடையில் பேதம் ஒன்று இருக்கிறது. பாமரன் அமைதியுற்று இருக்கிறான். உலகத்தவர்க்கிடையில் மனக்குழப்பம் ஒன்றையும் அவன் உண்டுபண்ணுவதில்லை. ஆனால் சொல் திறமை வாய்க்கப் பெற்றவனோ மக்களுடைய மனதில் குழப்பத்தையும், துன்பத்தையும் உண்டுபண்ணுகிறான். மன அமைதியைக் கலைப்பது ஒன்றே வெறும் வாய்ப்பேச்சின் விளைவு ஆகும். சமய அனுஷ்டானம் என்றால் என்ன என்பதை நாம் தெளிவுபட உணர்ந்திருக்கவேண்டும். சமயக் கோட்பாடுகளையெல்லாம் முறையாக அனுஷ்டிப்பதினின்று சுவானுபூதி உண்டாகிறது. அதாவது கடவுளை நேரே கண்டு உணரும் மனபரிபாகம் ஆத்மசாதகனுக்கு வருகிறது. கடவுளைப் பற்றிய வெறும் வாய்ப்பேச்சு வேறு, சுவானுபவம் வேறு என்பதைத் தெளிவுபட நாம் உணர்ந்திருக்கவேண்டும். உள்ளத்தினுள்ளே சுவானுபவத்தில் நாம் உணர்வது எதுவோ அதைத்தான் அனுபூதி என்கிறோம். மனிதனுக்குப் பகுத்தறிவு வேண்டுமென்றும் அவன் நல்லறிவு படைத்தவனாக இருக்கவேண்டுமென்றும் நாம் பெருமிதமாகப் பேசுகிறோம். ஆனால் கடவுளைப் பற்றிய பாரமார்த்திக விஷயத்தில் பகுத்தறிவையும், நல்லறிவையும் பெற்றிருப்பவர்கள் மிகச் சிலரேயாம். அனுபூதிக்கு ஒத்திருக்கிற பேச்சுக்களையே ஆத்மசாதகர்கள் பேசவும், கேட்கவும் வேண்டும்.

அனுபூதியின்கண் சாதகனை எடுத்துச் செல்லுகிற சமய அனுஷ்டானங்களையே அவர்கள் கையாளவேண்டும். வெறும் சொல் திறமையில் மனிதன் சொக்கிவிடலாகாது.

நாம் மானுட இயல்பும், மானுட வடிவமும் அமையப் பெற்றவர்களாக இருக்கிறோம். எனவே, இந்த இயல்பிலும் வடிவத்திலும் நாம் கட்டுண்டவர்கள். இனிக் கடவுளைப் பற்றி நாம் கருதுமிடத்து அவரையும் மனித நிலையில் வைத்தே நாம் உணர்ந்தாகவேண்டும். இதற்கு மற்றொரு சான்றை எடுத்துக்கொள்வோம். எருமைகள் கடவுளை வழுத்த முயலுகின்றனவென்று வைத்துக்கொள்வோம். அவைகளின் இயல்புக்கு ஒப்ப கடவுளை வண்ணத்தில் மிகப் பெரிய ஒரு எருமையாகவே அவைகள் உணர்வனவாகும். மீன் ஒன்று கடவுளை வழுத்த முயன்றால் அவர் வடிவத்தில் மிகப்பெரிய மீன் என்றே அது அவரைப்பற்றிக் கற்பனை செய்யும். இனி, மனிதன் கடவுளைப் பண்பும் ஆற்றலும் நிறைந்த ஒரு மனிதனாகவே கற்பித்தாகவேண்டும். அதைத் தவிர வேறு எதையும் செய்ய மனிதனுக்கு இயலாது. இங்ஙனம் ஒவ்வோர் உயிரும் தனது இயல்புக்கேற்ப தெய்வத்தைப்பற்றிப் பாவனை செய்வது குறைபாடுடைய கற்பனையென்று நாம் கருதலாகாது. மனிதன், எருமை, மீன் ஆகிய உயிர்வகைகளை அத்தனை விதமான பாண்டங்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்பாண்டங்களைக் கடலுக்கு எடுத்துச்சென்றால் நீர் மொள்ளுதற்கு அவைகள் பயன்படுகின்றன. ஒவ்வொரு பாண்டத்திலும் நீர் நிறைந்திருக்கிறது. உள்ளிருக்கும் நீர் அந்தந்தப் பாண்டத்தின் வடிவத்தை எடுத்தேயாகவேண்டும். அதற்கு மேல் பெரிய பாண்டம் அதிக நீர் கொள்கிறது. சிறியதில் அதன் வண்ணத்துக்கு ஏற்ற அளவு நீர் இருக்கிறது. மனித வடிவத்தி

லுள்ள பாண்டம் உள்ளிருக்கும் நீரையும் மனித வடிவத்தில் அமைக்கிறது. எருமை வடிவத்திலிருக்கும் பாண்டம் உள்ளிருக்கும் நீருக்கு எருமை வடிவத்தைக்கொடுக்கிறது. மீன் வடிவத்திலுள்ள பாண்டமும் அதற்கேற்ற செயலைச் செய்கிறது. இப்பாண்டங்களுள் இருப்பது ஒரே நீர் எனினும் அவைகளின் அளவைகளும், வடிவங்களும் வேறுபட்டவைகளாகின்றன. அதே முறையில் சச்சிதானந்தம் என்னும் மெய்ப்பொருள் எண்ணிறந்த உயிர்களின் வடிவங்களில் இலங்குகிறது. மானுடனாயிருப்பவன் அந்தச் சச்சிதானந்தப் பொருளை மானுடவடிவில் காண்கிறான். கடவுளைப்பற்றிய எண்ணத்தை உண்டுபண்ண விலங்குகளுக்கு இயலுமாகில் அவரை ஒரு விலங்கு இனமாகவே அவைகள் பாவிக்க ஆரம்பிக்கும். ஒவ்வோர் உயிரும் தான் தான் என்னென்ன கொள்கைகளையும் கருத்துக்களையும் உடையதாயிருக்கிறதோ அதற்கேற்றபடியே கடவுளைப்பற்றிய கருத்தும் அவ்வுயிருக்கு அமைகிறது. உயிர் வகைகளின் அமைப்பு இப்படி இருப்பதால் கடவுளை மனித வடிவத்தில் காண்பதைத் தவிர வேறு எதையும் நாம் செய்யமுடியாது. எனவே, கடவுளை மானுட வடிவத்தில் நாம் கருதுதலில் குற்றமொன்றுமில்லை. அதைத் தவிர வேறு எத்தகைய கொள்கையையும் நாம் கொள்ளமுடியாது.

இரண்டுவித இயல்புடைய மாந்தர் கடவுளை மனித வடிவத்தில் வைத்து வணங்குவதில்லை. அந்த இரண்டு தரத்தாருள் மானுட வடிவெடுத்திருக்கும் மாக்கள் ஒரு கூட்டத்தினர் ஆகின்றனர். அவர்களுக்குச் சமய அனுஷ்டானத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. தெரிந்துகொள்ளவேண்டுமென்கின்ற அவாவும் அவர்களுக்கில்லை. பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். இனி,

மற்றொரு கூட்டத்தாருக்குச் சமய அனுஷ்டானங்கள் தேவை யில்லை. அத்தகையவர்கள் பரமஹம்ஸர் எனப்பகரப்பெறு கின்றனர். மானுடர்களுக்கிடையிலுள்ள குறைபாடுகளை யெல்லாம் கடந்து அதீதத்திலுள்ள பெருநிலைக்குச் சென்றுள்ளவர்கள் அன்னவர்கள். ஜீவபோதம் தரித்திருந்த பொழுது என்னென்ன உபாதிகளை உடைத்திருந்தனரோ அந்த உபாதிகளையெல்லாம் இப்பொழுது அவர்கள் தாண்டி அப்பால் சென்றிருக்கிறார்கள். இயற்கையின்கண் தென்படு கின்ற எண்ணிறந்த வேறுபாடுகளெல்லாம் பரமாத்ம சொரூ பமாக அந்தப் பரமஹம்ஸர்களுக்குத் தென்படுகின்றன. இத்தகைய பாரமார்த்திகப் பெருநிலையை அடையப்பெற்றி ருக்கின்றவர்களே பரம்பொருளை உள்ளபடி அறிந்துகொள்ள வும், வணங்கவும் வல்லவர்கள் ஆகின்றனர். ஒன்றோ டொன்று ஒவ்வாது இருகோடிகளிலிருக்கின்ற இயல்புகள் வெளித்தோற்றத்துக்கு ஒன்றுபோல் தென்படுவது உண்டு. வெளிச்சத்தையும், இருளையும் உதாரணமாக எடுத்துக் கொள்ளுவோம். மிகைபட்ட வெளிச்சத்தில் கண் தெரியாது. மிகைபட்ட இருளிலும் கண் தெரியாது. இங்ஙனம் முரண் படுகின்ற இரண்டு இயல்புகள் உச்சநிலைக்குப் போகும் பொழுது, கண்தெரியாமை என்னும் ஒரே பயனை விளைவிக் கின்றன. அதே விதத்தில் அக்ஞான அந்தகாரமும் ஞானப் பேரொளியும் ஒரே தன்மையுடையவைகள்போன்று வெளிக் குத் தென்படுகின்றன. முழு மூடனாயிருப்பவனும், பரமஞானி யாய் இருப்பவனும் வழிபாடு செய்தல் என்னும் சாதனத் தில் ஈடுபடுவது கிடையாது. விலங்கின் நிலையிலிருக்கும் முழுமூடர்கள் அறியாமையினால் வழிபாடொன்றையும் இயற்று வதில்லை. இனி, ஜீவன் முக்தர்களோ தங்கள் உள்ளும் புறமும் யாண்டும் பரம்பொருளையே சுவானுபூதியில் காண்ப

தால் அவர்களும் கடவுள் வழிபாடு செய்வதில்லை. எனவே, வெளித்தோற்றத்துக்கு இவர்களிருதரத்தாரும் ஒரே இயல்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். விலங்கின் நிலையிலிருக்கும் கூட்டத்தாருக்கு வழிபாட்டைப்பற்றி ஒன்றும் தெரியாது. பரமஹம்ஸரின் கூட்டத்தாருக்கு வழிபாடு தேவையில்லை. இந்த இரு கோடிகளுக்கும் இடையிலே இருக்கின்ற சாதாரண மாந்தர் ஈசுவர ஆராதனை என்னும் சாதனத்தைச் செய்தே ஆகவேண்டும். இன்னும் பரமஹம்ஸ நிலைக்கு வாராதிருக்கும் சாதாரண மனிதன் ஒருவன் கடவுள் வழிபாடு செய்யவேண்டிய அவசியம் தனக்கு இல்லையென்று மொழிவானாகில் அம்மனிதனைப்பற்றி எச்சரிக்கை மிக எடுத்துக்கொள்ளவேண்டும். அவனுடைய பேச்சை ஆத்ம சாதகர்கள் காதில்போட்டுக்கொள்ளலாகாது. பின்பு கடவுள் வழிபாடு செய்கின்றவிடத்தும் அக்கடவுளை ஒரு பரிபூரண நிலையிலுள்ள மனிதனை வைத்து வழுத்துவதுதான் முறை. அப்படிச் செய்ய மறுக்கின்றவன் விஷயம் தெரியாது பிதற்றுகிறான். அவன் நல்ல விவேகத்தை அடையப்பெற்றவன் அல்லன். அவனுடைய அறிவிலே சீரிய எண்ணங்கள் இன்னும் உருவெடுக்கவில்லை யென்றே இயம்பவேண்டும். பக்தி சாதனத்தில் சிரத்தையுடன் செல்கின்றவர்கள் அத்தகைய பொறுப்பற்ற மனிதனிடத்திருந்து விலகியிருந்து கொள்வது உத்தமம்.

மாந்தரிடத்துள்ள குறைபாடுகள் எவை என்பதைச் சர்வேசுவரன் நன்கு அறிகின்றார். அத்தகைய மாந்தர்க்கு நலம் புரிதற்பொருட்டே சர்வேசுவரன் மானுட வடிவத்தில் அவதரித்து வருகிறார். அப்படி அவர் அவதரித்து வருவதைப் பற்றி அவதார மூர்த்திகளுள் மிகச் சிறந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பகவத்கீதையிலே இங்ஙனம் பகர்ந்துள்ளார்.

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥
परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥
பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥

*"பாரதா, எப்பொழுதெல்லாம் அறம் அழிந்துபோய் மறம் மேலெழுகிறதோ, அப்பொழுதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக் கொள்கிறேன். நல்லாரைக் காப்பதற்கும், கெட்டவரைக் கரந்தொடுக்குதற்கும், தர்மத்தை நிலைநாட்டுதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்."*

*அவதார புருஷர் ஒருவரை மக்கள் எப்படி அறிந்து கொள்ள முடியும் என்னும் கேள்வி பிறக்கிறது. ஊசிகள் சிதறடைந்து கிடக்கின்ற தரையிலே காந்தக்கல் ஒன்றைக் கொண்டுவந்து வைத்தால் அவ்வூசிகளெல்லாம் அதனிடத்து கவர்ந்து இழுக்கப்படுவனவாகின்றன. அவதார புருஷர் ஒருவருடைய செயல் அத்தகையது. மக்களுடைய மனதைக் கவர்ந்திழுக்கும் நல்லியல்பு அவரிடத்து ஏராளமாக மிளிரும். சின்னஞ்சிறு வயதிலிருந்தே அவரிடத்துத் தெய்வீகப் பேராற்றல் தலையெடுத்துத் திகழும். சிற்சில வேளைகளில் அசாதாரணமான தெய்விகச் சம்பவங்கள் அவருடைய ஜீவிதத்தில் நிகழ்வனவாகும். மறந்தும் அம்மேன்மகன் அறநெறி பிறழ்ந்து போவதில்லை. அவர் ஆற்றுகிற ஒவ்வொரு செயலிலும் அறத்தின் விளக்கம் தெற்றெனெ வெள்ளிப்படும். மற்ற ஜீவர்கள் போன்று கர்ம பந்தத்தால் தூண்டப்பட்டு அவர்*

பிறவியெடுப்பவர் அல்லர். வினை ஒன்றிலும் கட்டுப்படாத அம்மேன்மகன் சமுதாயத்தின் வினைத்தொகையைத் தமது வினையாக, விளையாட்டாக எடுத்துக் கொள்கிறார். உண்மையில் அவருக்குக் கர்ம பந்தம் கிடையாது. கர்மத்தில் கட்டுப் பட்டவர் போன்று அவர் தென்படுகிறார். பொதுமக்கள் என்ன முறையில் வாழ்ந்திருந்தால் வினைத் தளைகளினின்று விடுபடுவார்களோ அத்தகைய வாழ்க்கை முறை அந்த அவதார புருஷர் மூலமாக வெளியாகிறது. அக்ஞான இருளிலே அலைமோதித் திரிகின்றவர்களுக்கு ஞான விளக்கை எடுத்துக் கையில் கொடுப்பவர் போன்று அந்த அவதார மூர்த்தி திகழ்வார்.

**अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।**
**परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥**

**அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।**
**பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேச்வரம் ॥**

'என்னுடைய பர சொரூபத்தையும், நான் உயிர்களுக் கெல்லாம் ஈசனாயிருப்பதையும் அறியாத மூடர்கள், ஒரு மானுட வடிவம் எடுத்தவன் என்றெண்ணி என்னை அவமதிக் கின்றனர்.' அவதார புருஷர் ஒருவருடைய மகிமை இத்தகையதென்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் இங்ஙனம் கீதையில் பகர்ந்தருளியிருக்கிறார். இக்கோட்பாட்டை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இன்னொரு விதத்தில் சொல்லியிருக்கிறார். 'பெரும் பிரவாகம் ஒன்று வருகின்றபொழுது அது சிற்றோடைகள், குளம் குட்டைகள் ஆகியவைகளை எளிதில் நிரப்பி விடுகிறது. அதே போன்று அவதார புருஷர் ஒருவர் உலகில் வருகின்றபொழுது ஆத்மீகப்பெருவெள்ளம் எங்கும் பரவி ஓடுகிறது. மாந்தரது உள்ளத்திலே அருள் ஒளி மிளிர்வதாகிறது. பாரமார்த்திகப் பெருவாழ்வில் அவர்கள் சிரமமின்றி ஈடுபடுகின்றனர்.'

---

# 7. மந்த்ரம்

அவதார புருஷர்கள் உலகில் அடிக்கடி தோன்றுவ தில்லை. எனவே உடல் தாங்கியவர்களாக இருந்து அன்ன வர்கள் உலகுக்கு உதவிபுரிவதை நாம் அடிக்கடி காணமுடி யாது. ஆனால் சாதனங்கள் பல புரிந்து சித்த புருஷர்கள் ஆகி ஆசாரியருடைய ஸ்தானத்துக்குத் தகுதி வாய்ந்தவர் களைப்பற்றி நாம் ஆராய்ச்சி செய்யலாம். பக்குவம் அடைந் துள்ள அத்தகைய பெருமக்களே உலகுக்கு குருமார்களாக வாய்க்கக்கூடும். சிஷ்யர்களிடத்து அவர்கள் எவ்விதத்தில் பாரமார்த்திகப் பேர் அருளை எடுத்து வழங்குகிறார்கள் என் பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தியானத்துக்கும் ஜபத்துக்கும் பொருத்தமான மந்த்ரங்களை அவர்கள் சிஷ்யர் களுக்கு தீக்ஷையாகக் கொடுத்தருள்கிறார்கள். இப்படி மந்த்ரங்கள் என்று சொல்லப் பெறுபவை யாவை? இந்தப் பிரபஞ்சமே எப்படித் தோற்றத்துக்கு வந்திருக்கிறது என் பதை நமது சமய சாஸ்திரங்கள் விளக்கியிருக்கின்றன. பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் நாம ரூப சொரூபமாய் அமைந்திருக்கின்றன. ஓசையும் அந்த ஓசையின் புறத் தோற்றமுமே பிரபஞ்சம் எனப் பகரப்படுகின்றது. நாமம், ஓசை, மந்த்ரம் ஆகிய சொற்கள் ஒரே கருத்தை விளக்கு கின்றன. மரம் ஒன்று தோற்றத்துக்கு வருவதற்கு முதற் காரணமாய் இருப்பது வித்து. அதே முறையில் பிரபஞ்சத் தில் இருப்பவைகள் தோற்றத்துக்கு வருவதற்கு நாதம், மூலகாரணம் ஆகிறது. எனவே மந்த்ரத்தை நாதவிந்து என்கிறோம். அண்டத்திலுள்ள அமைப்பு முழுதும் மானுட சரீரம் என்னும் பிண்டத்திலும் இருக்கிறது. பிண்டம் என்னும் சரீரத்தில் வாழ்ந்திருக்கிற மனிதனுக்கு உள்

ளம் அல்லது சித்தம் என்னும் அகக் கருவி இருக்கிறது. இந்தச் சித்தத்தைக் கடலோடு ஒப்பிடலாம். கடலில் அலைகள் உண்டாவது போன்று உள்ளம் என்னும் கடலில் எண்ணங்கள் என்னும் அலைகள் உதித்துக்கொண்டே இருக்கின்றன. ஒவ்வோர் அலைக்கும் நாமரூபம் உண்டு. நாமரூபமில்லாத அலை மனதில் ஒரு பொழுதும் உண்டாவதில்லை. புற உலகம் என்று பகரப்படும் பிரம்மாண்டமானாலும் சரி, அகவுலகம் என்று பகரப்படும் சித்தம் ஆனாலும் சரி இவ்விரண்டுக்கும் அமைப்புத்திட்டம் ஒன்றேயாம். உண்மையில் அகிலாண்டத்திலுள்ள அனைத்துக்கும் பொதுவாய் ஒரே அமைப்புத்திட்டம் ஏற்பட்டிருக்கிறது. நாமரூப மயமாகவே அண்டத்திலுள்ள யாவும் அமைந்துள்ளன. இக்கோட்பாடு ஒரு சூத்திரத்தின் மூலம் விளக்கப்பட்டிருக்கிறது.

**यथा एकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात् ।**

**யதா ஏகேன ம்ருத்பிண்டேன ஸர்வம்**
**ம்ருண்மயம் விக்ஞாதம் ஸ்யாத் ।**

ஒரு கைப்பிடி களிமண்ணை அறிந்துகொண்டால் களிமண்ணால் ஆகியுள்ள அனைத்தும் அறியப்பட்டது ஆகின்றது. அப்படிப் பிண்டத்தில் இருப்பதை அறிந்து கொள்ளுபவன் அண்டத்தில் இருப்பதை அறிந்து கொள்பவன் ஆகிறான். இனி, நாம ரூபத்தைப் பற்றிய கோட்பாட்டை நாம் அறிந்து கொள்ளவேண்டும். பழம் ஒன்றில் மேல் தோலும் உள்ளிருக்கும் சதைப் பகுதியும் சேர்ந்து அமைந்திருக்கின்றன. இரண்டும் சேர்ந்தது தான் பழம். நாம ரூபம் என்று சொல்லப்பெறுவதைப் பதார்த்தம் என்று மற்றொரு சொல்லாலும் விளக்கலாம். பதம் என்பது சொல். அர்த்தம் என்பது அதன் விளக்கம். ஒவ்வொரு வஸ்துவும் பதமும் அதனுடைய அர்த்தமுமாக

அமைந்திருக்கிறது. அர்த்தமாக வந்துள்ளது வடிவம் அல்லது ரூபம். நாமம் அல்லது பதமாக வந்திருப்பது பழத்தின்சதைப் பகுதிபோன்றது. சதைப் பகுதிக்குப் புறத்தோற்றமாக மேல் தோல் அமைந்திருக்கிறது. நாமம் அல்லது எண்ணத்துக்குப் புறத்தோற்றமாய் அமைந்திருப்பது பிரபஞ்சப் பொருள். மனிதனுடைய அமைப்பில் அவனுடைய உடல் புறத்தோற்றமாகிறது. அதற்கு ரூபம் அல்லது உருவம் உண்டு. மனிதனுடைய மனது அல்லது அந்தக்கரணம் நாம சொரூபமானது. அதில் உண்டாகிக்கொண்டிருக்கும் ஓசையே விந்து ஆக அமைந்து உடலை உண்டு பண்ணுகிறது. ஓசை ஓயாது உள்ளத்தில் உண்டாகிக் கொண்டிருக்கிறது. அந்த ஓசையை நாமம் என்று நவிலுகிறோம். பேசும் திறமை இந்த ஓசையினின்றே வருகிறது. எண்ணம் என்னும் அலையாக மனதில் எது உதிக்கிறதோ அது ஓசை வடிவமானது. அகிலாண்டத்துக்கும் பொதுவாக இருக்கிற மனதை **மகத்** என்கிறோம். ஒரு ஜீவனுக்கு மட்டும் சொந்தமாயிருக்கிற உள்ளத்தை சித்தம் என்கிறோம். **மகத்** என்னும் பிரம்மாண்ட மனதில் தோன்றுகிற ஓசைக்குப் புறத்தோற்றம் வருகிறது. அந்தப் புறத்தோற்றமே பிரபஞ்சம் என்று பகரப்படுகிறது. மனிதனுடைய சித்தத்தில் உண்டாகிற ஓசை மானுட சரீர அமைப்பாக உரு எடுக்கிறது. எனவே அண்டத்திலும் பிண்டத்திலும் நாமங்களே பின்பு ரூபங்களாக வடிவெடுத்து வருகின்றன. நாமம் சூக்ஷ்மமானது; ரூபம் ஸ்தூலமானது.

அகிலாண்டம் முழுதும் திரண்டு ஒரு விச்வ மூர்த்தியாக வடிவெடுத்திருக்கிறார். தத்துவ தர்சனங்கள் அவருக்கு வெவ்வேறு பெயர்களை வழங்கியிருக்கின்றன. நான்முகக் கடவுள் அல்லது பிரம்மா என்பது ஒரு பெயர். ஹிரண்ய

கர்ப்பன் என்பது மற்றொரு பெயர். சமஷ்டி என்றும், மகத் என்றும் அவர் அழைக்கப்படுகிறார். மெய்ப்பொருள் தோற் றத்துக்கு அப்பாற்பட்டவராகவும், தோற்றத்துக்கு வந் துள்ளவராகவும் ஆக இரு தன்மைகளில் இருக்கிறார். தோற்றத்துக்கு வரும் பொழுதே ஈண்டு நாம் இயம்பியுள்ள இப்பெயர்கள் எல்லாம் அவருக்கு உரியனவாகின்றன. சப்தம் அல்லது நாம சொரூபமாக அவர் முதல் முதல் தோற்றத்துக்கு வருகிறார். ஆதலால் அவரை நாத பிரம்மம் என்று அழைப்பதும் பொருந்தும். இப்படி தோற்றத்துக்கு வந்துள்ள பிரபஞ்சத்திற்கு மூலப்பொருளாய் இருப்பவர் ஸ்போடம் அல்லது நாத பிரம்மம் என்று சொல்லப்படுகிறார். ஆங்கிலத்தில் இந்த நாத பிரம்மம் (Logos) லோகோஸ் என்று இயம்பப்படுகிறார். ஓசை வடிவத்திலுள்ள இவருக்கு ஆதியந்தமில்லை. சர்வகாலமும் நாத வடிவமாக இவர் இருந்து வருகிறார். அகிலாண்டத்துக்கும் முதற் காரண மாகின்றவர் இவரே. ஆதலால் இவருக்குக் காரண சப்த பிரம்மம் என்கிற பெயரும் வந்திருக்கிறது. அகிலாண்டத் துக்கும் இவர் சமவாயி காரணமாகவும் உபாதான காரண மாகவும் நிமித்த காரணமாகவும் இருந்து வருகிறார். இக் கோட்பாட்டை இன்னும் தெளிவுபடுத்துவது அவசியமா கிறது. குயவன் ஒருவன் களிமண்ணைக் கொண்டு மட் பாண்டத்தை வனைகிறான். குயவன் நிமித்த காரணமாகிறான்; களிமண் உபாதான காரணமாகிறது. பாண்டம் சமவாயி காரணமாகிறது. பிரம்மதேவன் அல்லது நான்முகக்கடவுள் ஏககாலத்தில் இந்த மூன்று காரணங்களாகவும் இருக்கிறார். காரியமாக வந்துள்ள இந்தப் பிரபஞ்சம் யாவும் காரண நிலை யில் இருக்கின்றபொழுது அவருக்கு சமவாயி காரணம் என் னும் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. இப்படித் தம்மை

அவர் பிரபஞ்ச சொரூபமாகக் காட்டிக்கொள்ளும் தன்மைக்கு அவரிடத்துள்ள ஸ்போட சக்தி என்று பெயர். நாதாதீதம் அதாவது நாதத்துக்கு அப்பாற்பட்ட நிலையிலிருக்கின்ற அவர் நாதஸ்வரூபம் அல்லது ஸ்போடமாக தம்மை ஆக்கிக் கொள்கிறார். அந்த நாதம் அல்லது ஓசை சூக்ஷ்ம நிலையில் இருக்கிறது. அதற்கு ஸ்தூல வடிவம் வருகின்ற பொழுது பிரபஞ்சம் என்னும் பெயர் வருகிறது. அப்பொழுது ஐம் பொறிகளுக்கும் அது புலனாகிறது. இந்த ஸ்போடம் அல்லது சூக்ஷ்ம நிலையிலிருக்கிற ஓசை எது என்னும் கேள்வி வருகிறது. அந்த ஓசையைத்தான் ஓம் என்றும் பிரணவம் என்றும் பகர்கிறோம். சொல்லையும், சொல்லுக்கு அடிப் படையாக இருக்கின்ற கருத்தையும் நாம் ஒரு பொழுதும் பிரிக்க முடியாது. ஓம் என்கின்ற சொல்லும் அதற்கு அடிப் படையாக இருக்கின்ற ஸ்போடமும் யாண்டும் இணைபிரியா தவைகள். கடவுளை நாம் வருணிக்க முயலுகின்றபொழுது நாமமும் நாமியும் ஒன்றே என்கிறோம். அதாவது சொல்லும் அந்தச் சொல் குறித்துக் காட்டுகிற பொருளும் ஒன்றேயாம். ஓம் என்பது சொல். அச்சொல்லால் குறிக்கப்படும் பொருள் மெய்ப்பொருள் அல்லது பிரம்மம். ஓம் என்னும் சொல் வேறு, பிரம்மம் வேறு அல்ல. மெய்ப்பொருளே ஓம் என் னும் சொல் சொரூபமாக இருப்பதனால் இந்தச் சொல்லை மந்த்ரம் என்கிறோம், புனிதம் வாய்ந்த சப்தங்களுள் ஓம் என்னும் சப்தம் மிகப் புனிதம் வாய்ந்தது. அகிலாண்டம் முழுதிலுமுள்ள ஏனைய நாம ரூபங்களுக்கு ஓம் என்னும் மந்த்ரம் முதற்காரணமாய் இருக்கிறது. அந்த ஓசைக்குத் துவக்கமும் முடிவும் இல்லை. அது நித்தியமானது. அகி லாண்டங்களும் அதனிடத்திருந்தே தோற்றத்துக்கு வந் திருக்கின்றன.

ஈண்டு ஐயம் ஒன்று எழக்கூடும். சொல்லும் அது உண்டுபண்ணும் எண்ணமும் இணைபிரியாதவைகள் என்பது உண்மை. ஒரு பொருளுக்குப் பதார்த்தம் என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. பதமும் அதன் அர்த்தமும் என அது பிரிவுபடுகிறது. சொல்லும் அதன் விளக்கமுமாக இயற்கையிலுள்ள யாவும் வந்தமைந்திருக்கின்றன. ஆனால் ஒரே பொருளைக் குறிப்பதற்குப் பல மொழிகளில் பல சொற்கள் வந்து அமைந்திருக்கின்றன அல்லவா? தலை என்னும் சொல் இருக்கிறது. அதைப் பகர்ந்தவுடனே நம் உடலிலுள்ள மேலான உறுப்பை நாம் எண்ணுகிறோம். மற்றொரு மொழியில் சிரஸ் என்று சொன்னவுடனே அந்தச் சொல்லை கேட்கின்றவர்களும் சரீரத்திலுள்ள அதே அங்கத்தை நினைக்கின்றனர். ஆங்கிலத்தில் (head) ஹெட் என்னும் பதத்தைப் பகர்ந்தவுடனே அதே உறுப்பின் ஞாபகம் வருகிறது. இங்ஙனம் ஒரு பொருளை விளக்கப் பல சொற்கள் இருக்கின்றன. ஓசையும் ஓசையின் விளக்கமுமாக உலகிலுள்ள பொருள்கள் எல்லாம் அமைந்திருக்கின்றன என்று இயம்புங்கால் பலவித ஓசைகளிலிருந்து ஒரே பொருள் ஆவது எங்ஙனம் என்னும் கேள்வி பிறக்கிறது. எந்த விதையை விதைத்தாலும் அதிலிருந்து தென்னைமரம் உண்டாகிறது என்பது உண்மையல்ல. எந்த மரத்தை உண்டுபண்ண விரும்புகிறோமோ அதற்குரிய விதையைத்தான் நாம் விதைத்தாகவேண்டும். பிரபஞ்சம் முழுதும் சொல் சொரூபமாயிருக்கின்ற, அதாவது நாதபிந்துவாய் இருக்கின்ற கடவுளிடத்திலிருந்து வந்திருக்கின்றன என்னும் கோட்பாட்டை நாம் எப்படி ஏற்றுக்கொள்வது? கடவுள் என்று நாம் தமிழில் சொல்லுகிறோம். அது மெய்ப்பொருளைக் குறிக்கிறது. ஈச்வரன் என்று சம்ஸ்கிருத

சொல்லில் அவரைத் தெரிவிக்கிறோம். அதுவும் மெய்ப் பொருளைக் குறிக்கிறது. அல்லா என்று அரேபிய மொழியில் பகர்பவர் இருக்கின்றனர். அந்தச் சொல்லும் மெய்ப் பொருளை விளக்குகிறது. 'ஜெஹோவா' என்று யூதர் பகர்கின்றனர். அந்தப்பதமும் பரம்பொருளையே குறிக்கிறது. 'டோ' என்று சீனர்கள் சொல்லுகின்றனர். அந்தச் சொல் லும் பரத்துக்குரியதாகிறது. இத்தனை விதச் சொற்களில் எந்தச் சொல்லை உச்சரித்ததன் விளைவாக வந்துள்ள ஓசை மெய்ப்பொருளுக்கு பீஜ மந்திரமாகிறது என்பது கேள்வி. இதற்குத் தக்க விடை பகர்ந்தாக வேண்டும். மனிதன் உச்சரிக்கின்ற சொற்களிலே இயற்கை உண்டுபண்ணுகிற ஓசையை ஒத்திருக்கின்ற சொற்கள் இருக்கின்றன. இயற் கையில் தானாக உண்டாகிக்கொண்டிருக்கின்ற ஓசைக்கு முரண்பட்டுள்ள சொற்களும் இருக்கின்றன. இயற்கையில் தானாக ஒலித்துக்கொண்டிருக்கின்ற ஓசையே உண்மையான பீஜ மந்த்ரமாகின்றது. அதற்கு அனாஹத த்வனி என்று பெயர். 'ஓவாத சத்தத்து ஒலியே போற்றி' என்று ஒரு பெரியவர் அதைப் பற்றிப் பகர்கின்றார். மனிதனால் உச்சரிக் கப்பட்டாலும் உச்சரிக்கப்படாவிட்டாலும் அந்த ஓசை சர்வ காலமும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. சந்தைக்கடையில் கூடியிருக்கிறவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து இடுகிற ஓலத்தை எட்ட இருந்து கேட்கின்ற பொழுது அது ஒன்று பட்ட ஓசையாகப் புலனாகிறது. அண்டம் முழுதும் இயங்கு வதால் உண்டாகின்ற ஓசை எப்படி ஒலிக்கிறது? அது ஒலிப்பதை ஆன்றோர்கள் சுவானுபவத்தில் கேட்டு அறிந் திருக்கின்றனர். மனதை அந்த நிலைக்குக் கொண்டுவந்தால் நாமும் அந்த ஓசையைக் கேட்கலாம். ஓசைகள் அனைத்துக் கும் மூல ஓசை என்று அந்த ஓசையைக் குறித்து இயம்ப

லாம். அதுதான் ஓம்—காரம். பிரணவம் என்றும் அதைப் பகர்கிறோம். சந்தைக்கடையில் உண்டாகின்ற ஓலத்தைத் திரும்பவும் சான்றாக எடுத்துக் கொள்வோம். நாம் தூரப் போகப்போகச் சந்தையில் உண்டாகிற சொற்கள் எல்லாம் தனி வடிவங்களை இழந்து விடுகின்றன. அச்சொற்கள் எல் லாம் ஒன்றாகக் கலந்து ஒரே இரைச்சல் ஆகிறது. இயற் கையில் எண்ணிறந்த பொருள்கள் எண்ணிறந்த ஓசை வடி வங்களில் இருக்கின்றன. இத்தனைவித ஓசை வடிவங்கள் தோற்றத்துக்கு வாராத மூலநிலையை ஸ்போடம் என்கிறோம். அதே பொருளை நாத பிரம்மம் என்று இயம்புகிறோம். மரத்தின் இயல்பு அனைத்தும் அதன் பீஜத்தில் அடங்கி யிருப்பது போன்று நாதபிரம்மம் என்னும் பீஜத்தினுள் அண்டங்கள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. மூலப் பொருளாகிய ஸ்போடம் அல்லது நாத பிரம்மத்தை விளக்கு தற்குக் கடவுள், ஈசுவரன், அல்லா, ஜெஹோவா, டோ ஆகிய இத்தனை விதச் சொற்கள் பயன்படுகின்றனவா என் பது கேள்வி. இயற்கையாக நாத பிரம்மத்திடத்து எந்த ஓசை அடங்கியிருக்கிறதோ அந்த ஓசைதான் உள்ளபடி ஸ்போடத்துக்கு உரியதாகும். இயல்பாகவே அந்த ஓசை அதனிடத்திருந்து உதித்து வருவதால் அந்த ஓசைக்கே ஸ்வயம்பு என்றும் பெயர் வந்துள்ளது. தானாகத் தோன்றி வந்துள்ளது என்பது அதன் பொருள். அந்த ஓசையே பிரணவம். ஓயாது ஓம் என்னும் சத்தம் அண்டமெங்கும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஓசைகள் அனைத்துக்கும் அதுவே மூல ஓசை. அந்த ஓசையின் தோற்றங்களாகவே அண்டத்திலுள்ள அனைத்தும் உருவெடுத்திருக்கின்றன. ஒரு மரத்திலுள்ள அடிப்பாகம், கிளைகள், இலைகள், தளிர் கள், மலர்கள், கனிகள் ஆகிய அனைத்தும் பீஜத்தின் புறத்

தோற்றங்கள். ஓம் என்னும் பீஜ மந்திரத்தின் புறத்தோற்றங்களாகப் பிரபஞ்சத்திலுள்ள யாவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. எனவே, ஓம் என்னும் ஓசை மனிதனால் கற்பிக்கப்பட்டதன்று. அது இன்னமொழிக்கு உரியதென்று பகர்வதும் பொருந்தாது. மொழிகள் யாவும் ஓம் என்னும் மூல மந்த்ரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்று இயம்புவதே பொருந்தும்.

ஓம்—காரத்தை ஏகாக்ஷரம் என்கிறோம். ஆயினும் மூன்று எழுத்தைக்கொண்டு அது அமைந்துள்ளது. அகரம் உகரம் மகரம் ஆகிய மூன்று எழுத்துக்களின் ஒன்றுபட்ட உச்சரிப்பு ஓம். ஓசைகளுள் 'அ' என்னும் ஓசை மூல நிலையினின்று பிளவுபடாத ஓசையாகிறது. கரும்பிலுள்ள சாறு பிளவுபடாத நிலையில் இருக்கிறது. பாகு, வெல்லம், சர்க்கரை, சீனி, கற்கண்டு ஆகிய இவைகள் எல்லாம் அந்தச் சாற்றின் பிளவுபட்ட நிலைகள். 'அ' என்னும் ஓசை மூலத்தில் இருந்தபடி இருக்கிறது. ஆகையினால் 'அகர முதல எழுத்தெல்லாம்' என்னும் கோட்பாடு வந்துள்ளது. அதே கோட்பாட்டை 'அக்ஷராணாம் அகாரோஸ்மி' என்று பகவான் கீதையில் பகர்ந்திருக்கிறார். எழுத்துக்களுள் நான் அகரமாய் இருக்கிறேன் என்பது அதன் பொருள். பிரபஞ்சத்தில் எழுகின்ற ஓசை ஒலிகள் அனைத்தும் மனிதனுடைய வாயினின்றும் வரக்கூடியவைகள் ஆகின்றன. நாக்கின் அடியில் ஓசை உற்பத்தியாகி உதட்டில் அது முடிவு பெறுகிறது. தொண்டையில் தோன்றும் ஓசை 'அ' என்னும் எழுத்து. உதட்டில் முடிவு பெறும் ஓசை 'ம்' என்னும் எழுத்து. துவக்கம் முடிவு ஆகிய இந்த இரண்டுக்கும் இடை நிலையில் இருக்கும் ஓசை 'உ' என்னும் எழுத்து. ஓம் என்னும் ஏகாக்ஷரத்தை முறையாக உச்சரிக்குமிடத்து

ஓசையின் துவக்கம் இருப்பு முடிவு ஆகிய யாவும் அதில் அடங்கியிருக்கின்றன. இதையே சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் என்று சொல்லுகிறோம். இந்த மூன்றுவிதச் செயல்களும் ஓம் என்னும் பிரணவத்தில்தான் அடங்கியிருக்கின்றன. வேறு எந்த ஓசையிலும் இந்த மூன்றுவிதச் செயல்களை ஒன்று சேர்த்து அமைக்க முடியாது. எனவே ஓம் என்னும் இந்த ஓசை புதியதாக எவராலும் சிருஷ்டிக்கப்பட்டதன்று. நித்திய சொரூபமாக, மெய்ப்பொருள் வடிவமாக இது யாண்டும் உளது. எனவே ஓம் என்பதும் ஸ்போடம் என்பதும் ஒன்றே. கைவசம் விதை ஒன்று இருந்தால் அது மரம் இருப்பதற்குச் சமானமாகிறது. அந்த விதையைக் கொண்டு மரத்தை உண்டுபண்ணிக்கொள்ளலாம். விதை வேறு, மரம் வேறு அல்ல. காரண நிலையில் இருப்பது விதை, காரிய நிலையில் இருப்பது மரம். கடவுளை ஓங்காரத்தின் உட்பொருள் என்கின்றோம். ஓங்காரத்தின் உட்பொருளும் அவரே, அதன் புறப்பொருளும் அவரே. சொல்லற்கரிய பொருளாகிய கடவுளை ஒரு சொல்லால் விளக்குதல் என்றால் ஓம் என்பதே அந்தச் சொல் ஆகிறது. கடவுள், ஈசன், ஜெஹோவா போன்ற ஏனைய ஓசைகள் மூலப் பொருளுக்கு உரியவைகள் அன்று. ஓம் என்கின்ற ஓசையே கடவுள் என்னும் மூலப்பொருளுக்குரிய ஓசையாகிறது. பீஜ மந்த்ரம் என்று அதையே பகரவேண்டும். ஓம் என்று நாம் உச்சரிக்கின்றபொழுது நாம் அறிந்திருந்தாலும், அறியாதிருந்தாலும் மூலப்பொருளையே அந்த ஓசையின் மூலம் எட்டுகிறோம். பறவை ஒன்று ஒரு பழத்தை அருந்துகிறது. அதனுள் இருக்கிற பீஜத்தின் உட்பொருளை அது அறிகிறதில்லை. மற்றோர் இடத்தில் அது மலமாகக்கொண்டு கழிக்கிறது. அப்படி அது இட்ட பீஜம் அல்லது விதை ஆங்கு ஒரு மர

மாகிறது. பறவைக்கு அது விளங்காவிடினும் அது செய்த செயலின் விளைவாக ஒரு மரம் ஆகிறது. ஓம் என்னும் அக்ஷரத்தை மனிதன் அறிந்து உச்சரித்தாலும் சரி, அறியாது உச்சரித்தாலும் சரி அந்த மந்த்ரத்தின் உரு அவனிடத்து ஏற ஏற அவனிடத்துத் திரு ஏறுகிறது. தெய்வத்தன்மை தானாக அவனிடத்துத் திகழ்வதாகிறது. எனவே ஓங்காரம் ஒன்றே கடவுளைக் குறிப்பிடும் ஓசை ஆகிறது. கடவுளை அடைவதற்கு உறுதுணையாக இருப்பதும் அதுவே. கடவுள் ஓசை வடிவமாக இருக்கிறார் என்று சொல்லுமிடத்து அவர் ஓம்காரவடிவமாக இருக்கிறார் என்று கருதவேண்டும். மெய்ப் பொருளை அகண்ட சச்சிதானந்தம் என்கிறோம். நாவால் அப்படிப் பகர்ந்தாலும் அப்பொருளை உள்ளபடி கிரகித்துக் கொள்ள மானுட மனதுக்கு இயலுவதில்லை. அகண்ட பொருளை அறியும் பரிபாகம் அதனிடத்துக் கிடையாது. எனவே அப்பெரிய பொருளை வெவ்வேறு நிலையிலுள்ள மகிமைகளின் மூலமாகவே மனது அதை ஏகதேசம் அறிந்து கொள்கிறது. குணம் குறிகளையெல்லாம் கடந்துள்ள அப் பொருளை கணக்கற்ற கல்யாண குணங்களை உடையதாகவும் வடிவங்களை உடையதாகவும் மனது பொருள்படுத்துகிறது. பரந்த இப்பிரபஞ்சம் அப்பரமாத்மனுக்குரிய ஸ்தூல சரீரமாகிறது. அவருடைய ஸ்தூல சரீரத்தையும் அவரைக் கருத்தில் வாங்கிக்கொள்ளுகிற மானுடனுடைய மனநிலைக்கு ஒத்தவாறே அவன் பொருள்படுத்துகிறான்.

ஈசுவரனை வழுத்துகின்ற பக்தனுடைய மனப்பான்மை அல்லது அந்தக்கரண தத்துவம் எத்தகையதோ அதற்கு ஏற்றவாறே அப்பரமனை மானுட மனது பொருள்படுத்துகிறது. இக்காரணத்தை முன்னிட்டே ஏகமாய் உள்ள பரம் பொருள் பற்பல தெய்வங்களாகத் தென்படுகிறார். அப்படித்

தென்படுகிற ஒவ்வொரு தெய்வமும் தமக்கே அலாதியாயுள்ள குணவிசேஷங்கள் பல படைத்தவராகவும்தென்படுகிறார். அப் பரமனுடைய சரீரமாக இலங்குகின்ற இந்த ஒரே பிரபஞ்சம் எண்ணிறந்த வடிவங்களை உடைத்திருப்பதாகவும் தோன்றும். பிரணவ மந்த்ரம் பேதங்களையெல்லாம் கடந்துள்ள நாத பிரம்மத்தைக் குறிக்கிறது. இந்தப் பிரணவ மந்த்ரத்தை உச்சரிக்கின்றபொழுது இந்த மந்த்ரத்துக்கு இலக்காக இருக்கின்ற பிரம்மமே உபாசிக்கப்படும் பொருள் ஆகின்றார். ஏனென்றால் ஓசையும் அதன் உட்பொருளும் இணைபிரியாதவைகளாய் இருக்கின்றன. உச்சரிக்கின்ற மந்த்ரமும் அந்த மந்த்ரத்துக்கு இலக்காக இருக்கின்ற தெய்வமும் இணைபிரியாதவைகளாய் இருக்கின்றன. இக்கோட்பாடு கடவுளின் கணக்கற்ற வடிவங்களுக்கும் உரியதாகிறது. ஒரு கடவுளின் வெவ்வேறு வடிவங்களுக்கு வெவ்வேறு மந்த்ரங்கள் அமைந்திருக்கின்றன. அக்கடவுளுக்கு இப்பிரபஞ்சம் சரீரமாகிறது. இந்தச் சரீரமோ பஞ்ச பூதங்கள் போன்ற தத்துவங்களைக்கொண்டு அமைந்துள்ளது. அந்தந்த பூதத்துக்குரிய மந்த்ரமும் இருக்கிறது. உதாரணமாக அக்னி என்னும் பூதத்துக்குரிய மந்த்ரம் அக்னிக்குச் சமானமானது. நீரும் நீருக்குரிய மந்த்ரமும் ஒன்றே. எனவே மந்த்ரங்கள் பல இருக்கின்றன. சிவன், நாராயணன், அம்பிகை போன்ற தெய்வ வடிவங்களுக்கேற்ற மந்த்ரங்கள் உண்டு. இம்மந்த்ரங்கள் மனிதனால் கற்பிக்கப்பட்டவைகள் அல்ல. ஆன்றோர்கள் ஆழ்ந்த ஞான திருஷ்டியில் இம்மந்த்ரங்களைத் தரிசித்தார்கள். அப்படி அவர்கள் சுவானுபவத்தில் கண்டறிந்த மந்த்ரங்களை ஓதுவது ஒன்றே அம்மந்த்ரங்களுக்கு இலக்காக இருக்கின்ற தெய்வங்களை உள்ளபடி உபாசிப்பதற்கு உற்ற உபாயமாகிறது. கடவுளின் வெவ்வேறு சொரூபங்

களை அறிந்துகொள்ளுதற்கும் பிரபஞ்சத்தின் வெவ்வேறு தத்துவங்களை அறிந்துகொள்ளுதற்கும் மந்த்ர உச்சாரணை ஒன்றே உற்ற உபாயமாகிறது. பரம்பொருளின் அகண்ட சொரூபத்தை ஓங்கார மந்த்ரம் விளக்கவல்லது. கடவுளின் வெவ்வேறு தனித்தனி சொரூபங்கள் அல்லது பிளவுபட்ட சொரூபங்களை விளக்குதற்கு சிவ, நாராயண, ராம போன்ற மந்த்ரங்கள் உதவுகின்றன. இந்த மந்த்ரங்கள் யாவும் பரம் பொருளைக் குறித்துத் தியானம் பண்ணுவதற்கும் உபாசிப்பதற்கும் உதவுகின்றன. பரஞானத்தைப் பெறுதற்கும் இதே மந்த்ரங்கள் பயன்படுகின்றன.



## 8. பிரதீக பிரதிமா உபாசனை

ஈசுவர உபாசனையை நேராகச் செய்வது எல்லார்க்கும் சாத்தியமன்று. நெடுந்தூரத்திலிருக்கும் ஒரு மனிதனைப் போற்ற விரும்புகின்றவர்களுக்கு அம்மனிதனைக் காணவோ, அவனோடு பேசவோ இயலாது. அம்மனிதனுடைய புகைப் படம் ஒன்று அருகிலிருந்தால் அதற்கு மாலை சூட்டுதலின் மூலம் தூரத்திலிருக்கும் மனிதனுக்குப் பாராட்டுதல் தெரிவிக்கப்படுகிறது. இதே முறை கடவுள் வழிபாட்டிலும் கையாளப்படுகிறது. ஈசனைக் காணவோ, அவரோடு உரையாடவோ மக்களுக்கு இயலுவதில்லை. ஆயினும் அவ் ஈசனை ஆராதிக்க மக்கள் விரும்புகின்றனர். எவ்விதத்தில் அவரை ஆராதிப்பது என்னும் கேள்வி எழுகிறது. அவரை ஞாபகமூட்டுகிற சின்னங்கள் வாயிலாக அவரை வழுத்தலாம் என்னும் நியமனம் உண்டாயிற்று. நெடுந்தூரத்திலிருக்கும் பெருமகன் ஒருவரைப் பாராட்டுகின்றவர்கள் அந்தப் பெருமகனுடைய சொந்தக்காரர்கள் யாராவது இருந்தால் அவர்களைக் கூட்டத்திற்கு அழைத்து அவர்களைக் கண்ணியப் படுத்துவதுண்டு. இப்படிச் செய்வது மானுட இயல்பு. பக்கத்திலிருக்கும் சொந்தக்காரர்களைப் பாராட்டுதல் மூலம் எட்ட இருக்கும் போற்றுதலுக்குரிய பெருமகனும் பாராட்டப் படுகிறார்.

ஈசுவர உபாசனையில் பிரதீக, பிரதிமா என்னும் இரண்டு விதமான சின்னங்கள் பயன்பட்டு வருகின்றன. அவைகளின் துணைகொண்டு கடவுளை உபாசனை பண்ணுவது பொருந்தும். 'புறத்தார்க்குச் சேயோன்' என்று பரம்பொருள் இயம்பப்படுகிறார். அதே பரம்பொருள் கரங்குவிவார்க்கு உள்ளிருந்து இன்பம் ஊட்டுபவர் என்றும்

இயம்பப் பெறுகிருர். கரங்கள் கூப்பி அவரைத் தொழு தற்கு அவருடைய சின்னம் ஒன்று வழிபடுகின்றவர்களுக்குத் தேவையாயிருக்கிறது. அந்தச் சின்னத்தினுடைய அமைப்புக்கு ஏற்ப அது 'பிரதீகா' என்றும் 'பிரதிமா' என்றும் இயம்பப்பெறுகிறது. கணபதி வழிபாடு சர்வசாதாரணமாக எல்லாராலும் எல்லாச்சந்தர்ப்பங்களிலும் செய்யப்படுகிறது. அந்த வழிபாட்டில் வசதிக்கும் சூழ்நிலேக்கும் ஏற்ப 'பிரதீக' என்னும் சின்னமும், 'பிரதிமா' என்னும் சின்னமும் உபயோகிக்கப்படுகின்றன. மஞ்சள் தூளில் அல்லது சாணத்தில் ஓர் உண்டைபிடித்து வைத்து அதன் மீது ஓர் அருகம் புல்லேக் குத்திஅதைக் கணபதி என்கிறேம். அந்த உண்டையே கணபதியாகாது. ஆனல் கணபதியை ஞாபகமூட்டிப் பிறகு அவர் வழிபாட்டுக்கு ஏதுவாயிருப்பது அச்சின்னமாகும். அதற்குப் 'பிரதீக' என்னும் பரிபாஷை வழங்கப்பெற்றிருக்கிறது. இனி, கணபதியின் 'பிரதிமா' அல்லது 'பிரதிமை' என்பது இருக்கிறது. வேழ முகத்தினனுக, ஐந்து கரத்தினனுக, தாழி வயிற்றினனுக, அங்குச பாசத்தைப் பிடித்திருப்பவனுக அம்மூர்த்தி அமைக்கப்பெற்றிருக்கிருர். இவ்வடிவத்தின் ஒவ்வொரு பகுதியும் ஒரு தத்துவத்துக்கு விளக்கமாகிறது. எனவே அது பிரதிமை. ஒரு தேசபடத்தை உத்தேசமாகப் போட்டால் அது 'பிரதீக' ஆகிறது. அதே தேசபடத்தை முறையாக வரைந்தால் அது 'பிரதிமா' ஆகிறது. 'பிரதிமை' மூலப்பொருள்களுக்குப் பொருத்தமான விளக்கமாக அமைகிறது. நமக்குத் தோன்றியவாறு 'பிரதீக' என்கின்ற சின்னத்தை அமைத்துக் கொள்ளலாம். கடவுள் எண்ணத்தை ஊட்டுதற்கு அது துணைபுரிந்தால் போதுமானது; ஆனல் பிரதிமையை நமக்குத் தோன்றியவாறு கற்பிக்கலாகாது. மூலப் பொருளின் விளக்கமாகவே அது அமைந்

திருக்க வேண்டும். கடவுளுக்கு ஆன்றோர்கள் கொடுத்திருக்கின்ற வடிவங்கள் யாவும் பிரதிமைகள் ஆகின்றன. அவைகள் வெறும் கற்பனைகளாக வந்தவைகளல்ல. கடவுளைப் பற்றிய சுவானுபவங்களின் விளக்கங்களாக அவைகள் அமைந்திருக்கின்றன. ஈசுவர ஆராதனையில் பிரவேசிக்கின்றவர்கள் பிரதீக, பிரதிமை என்கின்ற சின்னங்களின் வாயிலாகவே அவ்வாராதனையைச் செய்தாக வேண்டும். அதைத் தவிர வேறு உபாயம் இல்லை. ஒரு சின்னத்தின் மூலமாகச் செய்யப்படுகின்ற கடவுள் வழிபாடுதான் யாது?

अब्रह्मणि ब्रह्मदृष्ट्याऽनुसन्धानम्

அப்ரஹ்மணி ப்ரஹ்மத்ருஷ்ட்யா அனுஸந்தானம்

"பிரம்மம் அல்லாத ஒன்றைப் பிரம்மமாகக் கருதி அதன் மீது உள்ளன்போடு மனதை நாட்டுதல்"—இதுவே சின்னத்தின் மூலமாகச் செய்யப்படும் பரம்பொருள் உபாசனை என்று ராமானுஜாசாரியர் பகர்ந்துள்ளார். "மனதை பிரம்ம சொரூபமாகக் கருதி அதை வழுத்து—இது மானஸ பூஜை; ஆகாசம் அல்லது வெட்ட வெளியை பிரம்மமாகக் கருது—இது தேவதைகள் மூலமாகச் செய்யப்படும் உபாசனை ஆகிறது" என்று சங்கராசாரியர் சாட்டுகின்றார். மனது உள்ளுக்குள்ளே இருக்கும் 'பிரதீக' ஆகிறது. ஆகாசம் வெளியிலுள்ள ஒரு 'பிரதீக' ஆகிறது. கடவுளின் சின்னங்களாக இவ்விரண்டு பிரதீகங்களையும் ஆராதிக்கலாம். ஜகத் குரு சங்கரர் மேலும் பகர்கிறார்: "அதே முறையில் 'சூரியன் பிரம்மம் ஆகின்றார் — இதுவே நமக்கு ஏற்பட்டுள்ள ஆதேசம்'— 'நாமத்தை பிரம்மமாக வழுத்துபவன்'—இது போன்ற வாக்கியங்களில் பிரதீகங்களை என்ன கருத்துடன் வழுத்துவது என்னும் சந்தேகம் உண்டாகிறது..." 'பிரதீக' என்னும் சொல்லுக்கு அருகில் போதல் என்பது பொருளா

கிறது. 'பிரதீக' ஒன்றை வழுத்துதல் மூலம் ஏதோ ஒரு போக்கில் பிரம்மம் ஒருவாறு வழுத்தப்படுபொருள் ஆகிறது. 'பிரதீக' ஒன்று தன்னளவில் பிரம்மம் ஆகாது. 'பிரதீக' வழிபாடு முற்றிலும் பிரம்ம உபாசனை ஆகாது. ஓரளவுக்கு அது பிரம்ம உபாசனை என்று அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. நெடுந்தூரத்திலிருக்கும் பெருமகன் ஒருவனுக்கு அவனுடைய படத்தின் மூலம் செய்யப்படும் உபசாரத்துக்கு ஒப்பானது அது. வழிபாட்டுக்குரிய 'பிரதீகங்கள்' யாவை என்பதைப் பற்றி வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்குமேல் புராணங்களிலும் தந்திர சாஸ்திரங்களிலும் இன்னும் சில பிரதீகங்களைப் பற்றிய விளக்கங்கள் வந்துள்ளன. பிதுர்க்களைப் போற்றுவதும் தேவதைகளைப் போற்றுவதும் 'பிரதீக' வழிபாட்டில் அடங்கிவிடுகின்றன.

ஈசுவரனை அல்லது சகுணப் பிரம்மத்தை உபாசிப்பது ஒன்றே பக்தியோகம் ஆகும். அதற்கன்னியமாக சிறு தேவதைகளையும், பிதுர்க்களையும், ஏனைய பூதங்களையும் வணங்குவது பக்தியெனக் கருதப்படமாட்டாது. விதவிதமான தேவதைகளை வழுத்துவதைப் பற்றி வேதத்தில் கர்ம காண்டத்தில் பகரப்பட்டிருக்கிறது. அப்படி தேவதைகளை வணங்குவதால் சுவர்க்கபோகத்தை அனுபவிப்பது போன்ற குறிப்பிட்ட வினைப்பயன்கள் வாய்க்கின்றன. ஆனால் அத்தகைய வழிபாடு பக்தியைப் பெருக்குவதற்கு உதவாது. முக்தி பெறுவதற்கும் அது துணை புரியாது. ஈண்டு ஒரு விஷயத்தை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல் அவசியமாகிறது. பிரம்மம் அல்லது மெய்ப்பொருள் ஒருவரை வணங்குவதே வேதாந்த சாஸ்திரத்தின் குறிக்கோள் ஆகிறது. அப்பரம்பொருளை ஞாபக மூட்டக்கூடிய 'பிரதீக' ஒன்றின் மூலம் வழிபாடு செய்யலாம். ஆனால் அதற்கு

மாருக பிரம்ம சொருபத்தைப் புறக்கணித்து விட்டு 'பிரதீக' ஒன்றையே பரமாத்மனுகக் கருதி அதன் வழிபாட்டில் மூழ்கி விடலாகாது. ஊனக்கண் கொண்டு 'பிரதீக' ஒன்றைத் தரிசிப்பது ஞானக்கண்கொண்டு பரமாத்மனை உணர்வதற்கு ஒப்பாகாது. ஒரு உதாரணத்தின் மூலம் இதை விளக்குவது அவசியமாகிறது. நாடு ஒன்றில் நகரங்கள் எங்கெங்கு என்னென்ன முறைகளில் அமைந்திருக்கின்றன என்பதை விளக்குதற்கு தேசபடம் உதவுகிறது. அந்தப் படத்தின் துணைகொண்டு நாடு நகரங்களை நேரில் அறிந்து கொள்ளு தற்குப் புறம்பாக தேசபடம் ஒன்றை ஏராளமாகப் பொருள் செலவு செய்து அருமையான இடத்தில் அமைத்து வைத்துக் கொண்டு அதைப் பாராட்டுவதன் மூலம் நாடு நகரங்களின் உண்மையை யாரும் அறிந்துகொள்ள முடியாது. தெய் வத்தை நமக்கு ஞாபகமூட்டுதற்காக விக்ரகங்களை வைத்துக் கொள்கின்ருேம். அத்தகைய விக்கிரகங்களுக்கு விலை யுயர்ந்த ஆடையாபரணங்களைத் தேடுதல், பொருள்களை வீண் விரயம் செய்து அபிஷேகம் அலங்காரம் முதலியன செய்தல் முறையான உபாசனையாகாது. தன் உள்ளத்தி னுள் பரம்பொருள் அந்தர்யாமியாக வீற்றிருக்கிருரென்பதை மறந்துவிட்டு விக்கிரகத்துக்கு ஆடம்பரமான கிரியா விசேஷங்களைச் செய்து கொண்டிருப்பவன் சரியான உபா சனை முறையினின்று பிறழ்பவன் ஆகிருன். உபாசகன் ஒரு வனுடைய உள்ளத்தினுள்ளே எழுந்தருளியிருக்கும் பரமாத் மனுக்கு நிகராக 'பிரதீக' ஒன்று ஒருநாளும் அமைவது ஆகாது. உள்ளும் புறமும் உள்ள ஈசுவரன் ஒருவரே உபாச னைக்குரியவர் ஆகிருர். அந்த ஈசுவரனைப் பற்றிய எண் ணத்தை உபாசகனுடைய மனதில் உண்டுபண்ணுகிற அள வில் 'பிரதீக' ஒன்று உதவி புரிகிறது. களிமண்ணால் செய்து

வருணம் தீட்டியவாழைப்பழம் ஒன்று உண்மையானவாழைப் பழத்தை ஞாபகத்துக்குக் கொண்டு வருவதற்கு மட்டும் உதவிபுரிகிறது. உண்மையான வாழைப்பழத்தை உண்பதுபோல் மண்ணில் செய்த போலிப்பழத்தை உண்ண முடியாது. அப்போலிப் பழத்துக்கு நிகரானது 'பிரதீக' என்னும் சின்னம். பரம்பொருளை ஆத்ம சாதகனிடத்து ஞாபக மூட்டுதற்கு அது தேவை. பரம்பொருளை நினைவுக்குக் கொண்டு வருதற்பொருட்டு 'பிரதீகயை' பயன்படுத்திக் கொள்ளலாம். கடவுள் சிந்தனையை உண்டுபண்ணுதற்கென்று 'பிரதீகயை' வைத்துக் கொள்ளுதலில் பயன் மிக உண்டு. அதுமட்டுமல்ல. மக்களுள் பெரும்பான்மையோருக்குக் கடவுள் எண்ணத்தை ஊட்டுதற்கு 'பிரதீக' ஒன்று முற்றிலும் அவசியமானதாக இருக்கின்றது. அதன் துணையில்லாமலேயே சர்வகாலமும் சர்வேசுவரனைப் பற்றிய உணர்வில் ஆழ்ந்து மூழ்கியிருக்கும் நிலையை எட்டும் வரையில் 'பிரதீக' ஒன்றினுல் பயன் இருக்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். சுருங்கச் சொல்லின் கடவுள் சிந்தனையை ஊட்டுதற்கு விக்கிரகம் வேண்டும். கடவுளை மறந்துவிட்டு அந்த விக்கிரகத்தைச் சிறப்பித்துக் கொண்டு போவது சரியன்று.

சிறு தேவதைகளையும், மற்ற பூதங்களையும் சிறப்பித்து வழிபடுகிறவர்களிருக்கிறார்கள். அப்படிச் சிறு தெய்வங்களை உபாசிப்பது வேதத்திலுள்ள கர்ம காண்டத்தின் போக்கு ஆகும். சிறு தெய்வங்களின் வழிபாடே கிரியைமயமான ஒருவித வித்தை ஆகிறது. அப்படிச் சிறு தெய்வங்களை வணங்குவதால் அதற்கேற்ற பலனும் கிட்டுகிறது. பலனை நாடி சிறு தெய்வங்களைக் கும்பிடுவது பக்தி சாதனமாகாது. தனக்குற்ற நோயை நீக்கவேண்டுமென்று சிறு

தெய்வம் ஒன்றனிடத்து நோயாளி ஒருவன் கோரிக்கை செய்துகொள்ளுகிருன். அதற்கேற்ற பூஜைகளையும் அவன் செய்து வருகின்ருன். அதன் மூலம் அவனுடைய நோய் நீங்கப்பெறுவதுண்டு. பொருள் அல்லது பதவி தனக்குக் கிட்ட வேண்டுமென்று சிறு தெய்வம் ஒன்றை மற்ருெரு மனிதன் வழுத்துகிருன். அவன் நாடுகிற பொருள் அவ்வழிபாட்டின் மூலம் அவனுக்குக் கிட்டுவதுமுண்டு. இத்தகைய வழிபாடுகள் எல்லாம் கர்ம காண்டத்துக்குரியவைகளாம். பக்தியை வளர்ப்பதற்கு இத்தகைய காமிய உபாசனைகள் ஒரு பொழுதும் உதவமாட்டா. இனி, இதற்கு மாருக, ஆங்காங்கு கோயில் கொண்டுள்ள சிறு தெய்வங்களையே சர்வேசுவரனுடைய சொரூபங்களாகக் கருதி அவ்வடிவங்களின் மூலம் ஒருவன் சர்வேசுவரனை வழுத்துவானுகில் அது சரியான வழிபாடு ஆகிறது. பக்தியைப் பெருக்குதற்கு அந்த வழிபாடு நன்கு பயன்படுகிறது. சிறு தெய்வங்களையும், பரமேசுவரன் சொரூபமாகக் கருதி வழுத்துகிறவர்கள் உண்மையில் பரமேசுவரனையே வழுத்துகிருர்கள்.

சிறு தெய்வ வழிபாடு படிப்படியாகப் பண்பாடு அடைந்து பரம்பொருள் வழிபாடாக மேன்மையடைந்திருப்பதற்குச் சான்றுகள் பல எடுத்துக் கொள்ளலாம். காளி, துர்க்கை முதலியன கிராமப் பாதுகாப்புக்குரிய சிறு தெய்வங்களாக ஆதியில் இருந்தன. படிப்படியாக அவைகளைப் பற்றிய கோட்பாடு விரிவடைந்து அன்னை பராசக்தியின் வழிபாடாக அவைகள் திருந்தி யமைந்தன. பராசக்தியும் பரம்பொருளும் ஒன்றேயென்னும் கோட்பாடு இறுதியில் வந்தமைந்தது. முன்னுளைய மாந்தர் வேட்டைக்காரன் என்னும் ஒரு சிறு தெய்வத்தை வணங்கிஞர்கள். நாளடைவில் அந்தச் சிறு தெய்வத்துக்கு உயர்ந்த பதவி

யைக் கொடுத்து அதை முருகக் கடவுளில் ஒன்றித்து விடும் படி செய்தார்கள். முருகக் கடவுளையே ஒரு பாங்கில் வேட்டையாடுபவனாக வைத்தார்கள். இன்னும் உயர்ந்த நிலைக்கு அவரைக் கொண்டு வருகின்றபொழுது அவரைச் சிவகுமாரன் ஆக்கினார்கள். பிறகு சிவனுக்கே தத்துவ உபதேசம் செய்கின்ற சுவாமிநாதனாக அவரை ஆக்கினார் கள். வேத காலத்தில் வருணன், மித்திரன், இந்திரன் முதலியவர்கள் துவக்கத்தில் சிறு தெய்வங்களாக இருந்தார் கள். படிப்படியாகப் பரம்பொருளின் ஸ்தானத்துக்கு அவர் கள் எடுத்துச் செல்லப்பட்டனர். இனி, முக்த புருஷன் ஒருவர் மற்ற ஆத்ம சாதகர்களால் ஆராதிக்கப்படுகிறார். அவர் சரீரம் ஒடுங்கிய பிறகு ஆத்ம சாதகர்களுக்கு அவர் பரமகுரு ஆகிறார். நாளடைவில் அப்பரமகுருவும் தக்ஷிணா மூர்த்தியும் ஒன்றாகக் கருதப்படுகின்றனர். இப்போக்கில் தான் சிறு தெய்வங்கள் படிப்படியாக உயர்ந்த அந்தஸ்தைப் பெற்று சர்வேசுவர சொரூபமாக உயர்நிலை அடைகின்றனர். வேதத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ள ஆறு சமயங்கள் இருக் கின்றன. அவைகளுக்குத் தனித் தனி தெய்வங்களும் இருக் கின்றன. அந்தந்த தெய்வத்தைச் சிறப்பிக்கும் புராணங் களும் இருக்கின்றன. அப்புராணங்களை ஆராய்ந்து பார்த் தால் ஓர் உண்மை வெளியாகும். ஒவ்வொரு தெய்வமும் படிப்படியாக உயர்ந்தநிலை யெய்தி அகண்ட சச்சிதானந்தப் பொருள் ஆகிறது. இனி, அகண்ட சச்சிதானந்தப் பொருள் இரண்டு ஆகாது. எனவே எல்லாத் தெய்வங் களும் முடிவில் பிரம்மம் என்னும் மெய்ப்பொருள் நிலையை யெட்டிவிடுகின்றன. எந்த வடிவத்தின் மூலமாக உபாசனை செய்தாலும் அது ஈசுவரனுடைய உபாசனையாக இருக்கு மாகில் பக்தி சாதனத்துக்கு அது முற்றிலும் பொருந்தியது.

ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு வடிவம் இருக்கிறது. அந்த வடிவத்துக்கு ஒப்ப அதற்கு ஒரு பெயர் இருக்கிறது. இப்படி ரூபமும், நாமமும் இருந்துகொண்டு ஒரு பொருள் மற்றொரு பொருளினின்று வேறுபட்டதாகத் தென்படுகிறது. மோதிரம், காப்பு, கடுக்கன் ஆகிய பல ரூபங்கள் இருக்கின்றன. ரூபத்துக்கேற்ப பெயரும் இருக்கிறது. ரூபத்தையெல்லாம் அழித்து விட்டால் பெயர்களும் இல்லாது போய் விடுகின்றன. பழைய தங்கமே எஞ்சியிருக்கிறது. அதே விதத்தில் 'எல்லாப் பொருள்களிடத்திருந்தும் நாமரூபத்தை நீக்கி விட்டால் எஞ்சியிருப்பது பிரம்மம் அல்லவா?' என்று அத்வைத மதவாதி இயம்புகிறான். இனி, விசிஷ்டாத்வைத மதவாதி 'ஒவ்வொரு ஜீவனுடைய உள்ளத்தினுள் அந்தர்யாமியாக வீற்றிருப்பவர் சர்வேசுவரன் அல்லவா?' என்று கேட்கிறான்.

फलम् आदित्याद्युपासनेषु ब्रह्मैव
दास्यति सर्वाध्यक्षत्वात्—

பலம் ஆதித்யாத்யுபாஸனேஷு ப்ரஹ்மைவ
தாஸ்யதி ஸர்வாத்யக்ஷத்வாத்—

'அனைத்துக்கும் அத்தியக்ஷன் அல்லது கண்காணிப்பாளனாக பிரம்மமே இருப்பதால் ஆதித்தியர் முதலாயினோர்களை உபாசிப்பதன் பலனை பிரம்மமே தந்தருளுகின்றார்.' பிரம்ம சூத்திர பாஷ்யத்தில் சங்கராசாரியர் பகர்வதாவது:

ईदृशं चात्र ब्रह्मणः उपास्यत्वं यतः
प्रतीकेषु तद्दृष्ट्याध्यारोपणं
प्रतिमादिषु इव विष्ण्वादीनां

ஈத்ருசம் சாத்ர ப்ரஹ்மண: உபாஸ்யத்வம் யத:
ப்ரதீகேஷு தத்ருஷ்ட்யாத்யாரோபணம்
ப்ரதிமாதிஷு இவ விஷ்ண்வாதீனாம்

'விஷ்ணு முதலிய வழிபாட்டுக்குரிய தெய்வங்கள் தத்தமக்குரிய விக்கிரகங்களில் ஆரோபம் செய்யப்பட்டிருப்பது போன்று 'பிரதீகங்களில்' ஆரோபம் செய்யப்பட்டிருக்கின்ற பிரம்மம் ஈண்டு இவ்விதம் உபாசனைக்கு உரியவர் ஆகிறார்.'

உபாசனா விஷயத்தில் பிரதீகங்களைப் பற்றிப் பகர்ந்துள்ள அதே கோட்பாடுகள் பிரதிமைகளுக்கும் பொருந்துகின்றன. பிரதிமைகள் பல இருக்கின்றன. அவைகளுள் நடராஜ வடிவம், அனந்தசயனம், ஸ்மசானகாளி, மஹிஷாசுரமர்த்தனி, துர்க்கை—ஆகிய பிரதிமைகளை மிக முக்கியமானவைகளாக எடுத்துக் கொள்ளலாம். இந்த வடிவங்கள் மனிதன் தனக்குத் தோன்றியபடி கற்பிக்கப்பட்டவைகளல்ல. பரம்பொருளைப் பற்றிய தத்துவத்துக்கு விளக்கங்களாக இவை அமைந்திருக்கின்றன. இவைகளை மாற்றியோ, திருத்தியோ அமைக்கவும் முடியாது. அப்படி மாற்றியமைத்தால் மூல தத்துவத்துக்கு அவை முரண்பட்டவைகள் ஆய்விடும். சாஸ்திரங்கள் விளக்கியுள்ளபடி அந்தப் பிரதிமைகளை அமைத்து அவைகள் மூலம் பரம்பொருளை வணங்குவதே முறை. ஆனால் பிரதிமைகள் மூலமாக மனிதன் செய்கின்ற வணக்கத்திலும் தவறுதல் உண்டாவதுண்டு. சான்று ஒன்றை எடுத்துக்கொள்வோம். மனிதன் எடுத்திருக்கின்ற தேகம் அதனுள் இலங்கும் ஆத்மனுக்கு 'பிரதிமை' ஆகிறது. உள்ளிருக்கும் ஆத்மனைப் போற்றுதல் பொருட்டு உடல் வாழ்வு உறுதிப்படுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. 'உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே'—இக்கோட்பாட்டுக்கு மாறாக மக்களில் பலபேர் உடம்பினைப் பேணுதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றனர். அந்த

உடம்பின் மூலம் சுகபோகங்கள் பலவற்றைப் பெறுவதையும் குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றனர். அத்தகையவர்கள் ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் அடைவதில்லை. விலங்குகள் போன்று உடல் வாழ்க்கையிலேயே கட்டுண்டவர்களாக நின்றுவிடுகின்றனர். பிரதிமைகளின் மூலம் பரம்பொருளை வணங்க வேண்டியவர்கள் பலர் தவறுதல் ஒன்று செய்கின்றனர். பிரதிமைகளனைத்தும் ஒரே பரம்பொருளுக்குரியவைகள் என்பதை அவர்கள் மறந்துவிடுகின்றனர். வடிவத்துக்கு முதன்மை கொடுத்து நடராஜா வேறு, கோவிந்தராஜா வேறு என்று அவர்கள் பாகுபடுத்துகின்றனர். அதே விதத்தில் சிவம் வேறு, சக்தி வேறு என்றும் அவர்கள் நினைக்கின்றனர். முக்தியடைந்துள்ள ஒரு மகா புருஷருடைய மேனியை பிரதிமையாக வைத்துக்கொண்டு அதன் மூலமாகவும் பரப்பிரம்மனைப் போற்றலாம். போற்றுதலுக்குரியவர் பரப்பிரம்மம் என்பதை மறந்துவிட்டு முக்தியடைந்த மஹா புருஷரை ஒருதனி தெய்வமாகக் கருதி வழுத்துவார்களாகில் அவர்களும் நெறி பிறண்டவர்கள் ஆகிறார்கள். அப்படி நெறி பிறண்டு போகின்றவர்களுக்குப் பக்தி உண்டாகாது. முக்தியைப் பெறுவதும் அவர்களுக்குச் சாத்தியப்படாது. இத்தனை விதமான மூர்த்திகள் மூலமாக ஒரே பரம்பொருள் தான் போற்றப்படுகிறார் என்னும் எண்ணத்தில் நிலைபெற்றவர்களாக இருந்துகொண்டு அவர்கள் மூர்த்தி உபாசனை செய்து வருவார்களாகில் அவர்களுக்குப் பக்தியும் முக்தியும் கைகூடும்.

உலகிலே முக்கியமான மதங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் வேதாந்தத்தில் அடங்கியிருக்கின்ற ஆறு சமயங்களும், புத்த மதமும், கிறிஸ்துவ மதத்தில் கத்தோலிக்கர் போன்றவர்களும் தங்குதடையின்றி விக்கிரகங்களை ஆரா

தனைக்குப் பயன்படுத்தி வருகின்றார்கள். விக்கிரகங்களை ஆராதனைக்குப் பயன்படுத்தலாகாது என்று கண்டிப்பாக ஆக்ஷேபனை பண்ணுகின்ற சமயங்கள் இரண்டு உலகில் இருக்கின்றன. அவைகள் மகம்மதிய மதமும், கிறிஸ்துவ மதத்தில் பிராடஸ்டண்ட் பிரிவும் ஆகும். விக்கிரகத்தின் உதவியை எடுத்துக் கொள்ளலாகாது என்று அவைகள் இயம்புகின்றன. மகம்மதிய மதத்தில் விக்கிரக ஆராதனைக்கு இடமில்லையெனினும் கிட்டத்தட்ட விக்கிரகத்துக்கு ஒத்த முறையில் கல்லறைகள் சிலவற்றை அவர்கள் போற்றுகின்றனர். அந்த மதத்துக்குரிய மகான்களும், தியாகிகளும் பலர் இருக்கின்றனர். அப்பெருமக்களுடைய திருமேனிகள் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் கல்லறைகளை நன்கு அலங்கரித்து அவைகளின் மூலம் தங்கள் வணக்கத்தையும், வழிபாட்டையும் மகம்மதியர்கள் தெரிவித்துக் கொள்ளுகின்றனர். துருவி ஆராய்ந்து பார்க்குமிடத்து, அது ஒருவிதமான விக்கிரக ஆராதனை ஆகிறது. இங்ஙனம் ஸ்தூலப் பொருள்களின் உதவியை இக்கூட்டத்தாரும் நாடி வருவது கண்கூடாகத் தென்படுகிறது. இனி, ஸ்தூலப் பொருள்களின் உதவியை ஒரு சிறிதளவாவது நாடாது இருக்கின்றவர்கள் கிறிஸ்துவர்களுள் பிராடஸ்டண்ட் பிரிவைச் சார்ந்தவர்களேயாம். வழிபாட்டுக்கு ஸ்தூலப் பொருள்களின் உதவியை அவர்கள் பயன்படுத்தாமையினால் படிப்படியாக அவர்கள் பாரமார்த்திகப் பெருவாழ்வினின்று புறத்தே போய்க்கொண்டிருக்கின்றனர். அகஸ்டே காம்டே (Auguste Comte) என்பவர் வெறும்யுக்திவாதி. கடவுள்வழிபாட்டுக்கு இதுதேவையில்லை, அது தேவையில்லை என்று வழிபாட்டு முறைகளையெல்லாம் நிராகரிப்பதே அவருடைய போக்கு. இனி அக்ஞேய வாதிகள் என்பார் ஒருகூட்டத்தாரிருக்கின்றனர். கடவுள் தத்துவத்

தைப் பற்றித் தங்களுக்கு ஒன்றும் தெரியாது என்றும் தெரியாத பொருளைக் குறித்து உபாசனை செய்வது பொருளற்றதென்றும் அவர்கள் வாதித்து வருகின்றனர். மனிதனிடத்து ஏதோ ஒரு சிறிதளவு நல்லொழுக்கம் இருந்தால் போதும் என்பதே அவர்களுடைய கொள்கை. பிராடஸ்டண்ட் பிரிவைச் சேர்ந்தவர்களும் கிட்டத்தட்ட இந்த இருதரத்தாருடைய நிலைக்கு வந்து விட்டனர். அவர்களுடைய நிலைமை அத்தகையதாக இருக்க, விக்கிரகங்களையோ, சின்னங்களையோ பயன்படுத்தி வருகின்ற கிறிஸ்துவ மதத்தைப் பற்றியும், மகம்மதிய மதத்தைப் பற்றியும் ஒரு வார்த்தை பகரவேண்டியது அவசியமாகிறது. பிரதீக அல்லது பிரதிமையைத் தன்னளவில் பெருமை வாய்ந்ததாகப் பாராட்டும் பாங்கு அச்சமயங்களுள் புகுந்துவிட்டது. பிரதீகங்களையும், பிரதிமைகளையும் பரம்பொருளை ஞாபகப்படுத்துவதற்காக வென்று வைத்துக் கொண்டால் அதில் குற்றமில்லை. கடவுள் எண்ணத்தை ஞாபகமூட்டும் பொருள் திருஷ்டிஸௌகரியம் (दृष्टिसौकर्यम्) எதுவாயினும் அது ஏற்புடையது. அதற்கு மாறாகக் கல்லறையோ சிலுவைபோன்ற சின்னமோ தன்னளவில் தெய்வீகம் நிறைந்ததென்று கருதுவது தத்துவத்துக்குப் பொருந்தாது. அப்படி இந்தச் சின்னங்களைப் போற்றுவது வேதத்திலிருக்கும் கர்ம காண்டத்துக்கு நிகராய்விடுகிறது. கர்மகாண்ட முறைகள் பக்தியையோ, முக்தியையோ உண்டுபண்ணமாட்டா.

விக்கிரக ஆராதனை முறைகளில் வேதாந்த சாஸ்திரத்துக்கு ஏற்புடையது எது, ஏற்றுக்கொள்ளத் தகுதியற்றது எது என்பதை நாம் பாகுபடுத்தவேண்டும். விக்கிரகம் ஒன்றை வெறும் சின்னமாக வைத்துக்கொண்டு அதன் மூலம் சர்வேசுவரனே ஆராதிக்கப்படவேண்டும். இந்துமதத்துக்குரிய கோயில்களையும், விக்கிரகங்களையும் புற மதஸ்தர்கள் பல தடவை தாக்கித் தகர்த்து எறிந்தனர். தங்களுக்கு

ஒவ்வாத தெய்வத்தையே தாங்கள் தகர்த்து விட்டதாக அவர்கள் இறுமாப்பு எய்தினர். ஆனால் அந்த விக்கிரகங்களை இழந்த இந்துக்கள் தங்கள் தெய்வத்தை இழந்துவிட்டதாகக் கருதவில்லை. தெய்வத்தை ஞாபக மூட்டுதற்கென்று இருக்கும் ஒரு சின்னம் அபகரிக்கப்படுமாகில் மற்றொரு சின்னத்தை வைத்துக்கொண்டு திரும்பவும் வழுத்தலாம். தேச படம் ஒன்று கிழிந்துபோய் விட்டால் அல்லது காணாமல் போய் விட்டால் அதன் விளைவாக தேசமே அழிந்துபோய் விட்டது என்பதல்ல. இந்தப் பிரகாரத்தில்தான் விக்கிரக ஆராதனைக்கு வேதாந்த தர்சனம் இடம் கொடுத்திருக்கிறது. ஏதேனும் ஒரு சின்னத்தை உதவிக்கு வைத்துக்கொண்டு முழு முதற் பொருளாகிய சர்வேசுவரனை வழுத்து என்பது வேதாந்த தர்சனத்தின் சாரமாகும். இதற்கு நேர்மாறாக விக்கிரகங்களையே தெய்வம் என்று கருதி வருகிறவர்கள் உண்டு. இனிக் கல்லறைகளிலும், கோயில்களிலும், சமாதி மந்த்ரங்களிலும் மட்டுமே தெய்வீகம் இலங்குகின்றதென்று வெறி பிடித்த போக்கில் அவைகளைப் பாராட்டுகின்றவர்கள் உண்டு. அவர்கள் எல்லாரும் நெறி பிறண்டவர்கள் ஆகிறார்கள். குருட்டு நம்பிக்கையுடன் விக்கிரக ஆராதனை செய்கின்றவர்கள் என்று அத்தகைய மாந்தரைத்தான் விலக்கி வைக்கவேண்டும். ஆயினும் அப்படிக் குருட்டு நம்பிக்கையோடு செய்கின்ற விக்கிரக ஆராதனையில் பாபம் ஒன்றுமில்லை. அது பழிபாபத்துக்குரிய கொடிய செயலும் அன்று. கடவுளே அதைக் கண்டிக்கிறார் என்பது உண்மையன்று. கர்மகாண்டத்திலிருக்கின்ற கிரியைகளோடு அதைச்சேர்த்து விடலாம். அத்தகைய கிரியைகளுக்கேற்ற கர்ம பலனையும் அவர்கள் பெறத்தான் செய்கின்றனர். அந்தக்கர்ம பலனை அவர்களுக்கு யாரும் மறுத்துவிட முடியாது. ஆனால் பக்தி யோகம் புகட்டுவது முழுமுதற் பொருளாய், ஏகனாயிருக்கும் சர்வேசுவரன் உபாசனை ஒன்றேயாம்.

---

# 9. இஷ்ட நிஷ்டை

அரிசிமாவைக் கொண்டு அநேக விதமான பக்ஷணங்கள் செய்யலாம். அவைகளுள் ஒருவனுக்குப் பிடிக்கிற பக்ஷணம் மற்றொருவனுக்குப் பிடிக்காது போய் விடலாம். அதனால் குறையொன்றும் இல்லை. யாருக்கு எத்தகைய உணவு பொருந்துகிறதோ, அதைப் பிரீதியுடன் அவன் அருந்தலாம். கடவுள் வழிபாடும் அத்தகையது. கடவுள் ஒருவரே மெய்ப் பொருள். அவர் எண்ணிறந்த வடிவங்களில் இலங்குகின்றார். அத்தனை விதமான வடிவங்களையும் பக்தன் ஒருவன் உபாசிக்க வேண்டுமென்பது அவசியமல்ல. தனக்கு ஏற்ற உபாசன மூர்த்தியாக ஏதேனும் ஒரு வடிவத்தை அவன் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். தனக்கேற்ற தெய்வ சொரூபத்தைப் பிரித்தெடுத்துக் கொள்ளுதற்கு இஷ்டநிஷ்டை என்று பெயர். தனக்கு விருப்பமான மூர்த்தியினிடத்து பக்தன் ஒருவன் அன்பை ஆழ்ந்து செலுத்தவேண்டுமென்பது அதன் கருத்து. கடவுளைப் பற்றிய கொள்கைகளும், கோட்பாடுகளும் எண்ணிக்கையில் அடங்காதவைகள். ஆயினும் உண்மையில் அவைகளுக்கிடையில் முரண்பாடு இல்லை. அத்தனை விதமான கோட்பாடுகளும் கடவுளையடைவதற்கான வழிகள் ஆகின்றன. பக்தி மார்க்கத்தில் செல்லுகின்றவன் ஓர் உண்மையை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். உலகிலே சமயங்கள் பல இருக்கின்றன. அச்சமயங்களுள் உட்பிரிவுகள் பல இருக்கின்றன. அவையாவும் சர்வேசுவரனுடைய மகிமையை விளக்குதற்கென்று அமைந்திருக்கின்றன.

'வேறுபடுஞ் சமயமெலாம் புகுந்துபார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால்

மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா."

என்று பெரியவர் ஒருவர் பகர்ந்துள்ளார். மற்றும் ஒருவர்,

नाम्नामकारि बहुधा निजसर्वशक्ति
स्तत्रार्पिता नियमितः स्मरणे न कालः ।
एतादृशी तव कृपा भगवन् ममापि
दुर्दैवमीदृशमिहाजनि नानुरागः ॥

நாம்னாமகாரி பஹுதா நிஜஸர்வசக்தி
ஸ்தத்ரார்பிதா, நியமிதஃ ஸ்மரணே ந காலஃ
ஏதாத்ருசீ தவ க்ருபா பகவன் மமாபி
துர்தைவமீத்ருசமிஹாஜனி நானுராகஃ

'இறைவா! பெயர்கள் பல இட்டு உம்மை அழைக்கின்றனர். நாமங்கள் பல சூட்டி உம்மை மாந்தர் பிளவுபடுத்துவது போன்றிருக்கிறது. எனினும் நாமங்கள் தோறும், ரூபங்கள் தோறும் இலங்குபவர் தாம் ஒருவரே. எல்லாம் வல்லவரும் முழுமுதற் பொருளுமாகிய தாமே எங்கும் நிறைந்திருக்கிறீர் — இத்தனை விதமான வடிவங்களின் மூலம் நீர் உம்மை பக்தர்களுக்கு உரியவர் ஆக்கியிருக்கின்றீர். உம்மை வழுத்துதற்கேற்ற வேளை எது என்னும் கேள்வி எழலாம். அதற்குக் குறிப்பிட்ட நேரம் கிடையாது. அன்பனிடத்து ஆழ்ந்த பக்தியிருக்குமாகில் அவன் உம்மை யாண்டும் வழுத்திக்கொண்டே யிருக்கலாம். ஒரு காலமன்று. இது சர்வ கால பூஜையாக ஒப்புவித்தேன். தாம் அடியவர்க்கு எளியவர். ஆயினும் நான் உம்மை நேசியாதிருப்பது என் தௌர்ப்பாக்கியம்.' இங்ஙனம் பக்தர் ஒருவர் பகர்ந்துள்ளார்.

மற்றொரு விஷயத்தைப்பற்றி பக்தன் ஒருவன் எச்சரிக்கை மிக எடுத்துக்கொள்ள வேண்டும். வெவ்வேறு

சமயங்களையும், மதங்களையும் ஸ்தாபித்துள்ள பெருமக்கள் பலர் இருக்கின்றனர். மதங்களுள் சிலவற்றைப் புறமதங்கள் என்று கருதுவதும் அப் புறமத ஸ்தாபகர்களை வெறுப்பதும் பக்தன் ஒருவனுக்கு ஒவ்வாது. அவர்களை வேற்றூர்கள் என்று கருதி பரிகாசம் பண்ணுகிற முறையில் அவர்களைப் பற்றிப் பேசுவதும் பொருந்தாது. உண்மையில் அப்பெருமக்களனைவரும் கடவுளின் அருட்புதல்வர்களேயாம். அருள் ஒளி அவர்கள் மூலம் உலகில் வீசியுள்ளது. அந்தச் சான்றோர்களைக் குறித்து, தான் புன்மொழி யொன்றும் பேசாதிருப்பது மட்டும் போதாது. மற்றவர்கள் அப்படிப் புன்மொழி பேசுகின்ற பொழுது பக்தன் அதற்குச் செவிமடுக்கலாகாது. இரண்டு விதமான பேரியல்புகள் பக்தன் ஒருவனிடத்து அமைந்திருக்கவேண்டும். தான் கடைப்பிடிக்கும் நெறியிலும் தான் வழுத்தும் உபாசனை மூர்த்தியிடத்தும் தனக்கு அன்பு ஆழ்ந்து அமைந்திருப்பது அவசியம். அதற்கிடையில் மற்றவர்கள் கடைபிடிக்கும் நெறிகளிலும், மற்றவர்கள் போற்றும் மூர்த்திகளிடத்தும் பரந்த அனுதாபத்தைக் காட்டவேண்டும். அன்னவர்களும் செந்நெறியிலே செல்லுகின்றூர்கள் என்று உணர்ந்து அவர்களைப் பாராட்ட வேண்டும். இங்ஙனம் இவ் இரண்டுவிதமான பண்புகளும் அமையப் பெற்றிருப்பவர்களை உலகில் காண்பது அரிதிலும் அரிது.

உலகத்தவர் இயல்பு ஒன்றை ஈண்டு ஆராய்வது அவசியமாகிறது. சமய அனுஷ்டானங்களில் பரந்த மனப்பான்மை தாங்கள் படைத்திருப்பதாகச் சொல்லிக்கொள்ளும் கூட்டத்தார் உண்டு. புறசமயத்தார்களிடத்து அனுதாபம் மிகத் தாங்கள் காட்டிவருவதாகவும் அன்னவர்கள் இயம்புவதுண்டு. தாங்கள் சமய விஷயங்களில் சமரசம் படைத்திருப்

பதாகவும் அவர்கள் சொல்லிக்கொள்வார்கள். அது பாராட்டத் தக்க பேரியல்பாகத் தென்படுகிறது. ஆயினும் அத்தகைய மாந்தரிடத்துக் குறைபாடு ஒன்று கண்கூடாக அமைந்திருக்கிறது. தாங்கள் அனுஷ்டித்து வரும் சமயத்தில் அவர்களுக்கு ஆழ்ந்த உணர்வு அமைவதில்லை. மக்கள் ஒருவரோடு ஒருவர் இணக்கம் கொண்டாட சங்கங்கள் கூட்டுவதுண்டு. தங்களுக்கு ஒத்த மனமுடையவர்களை யெல்லாம் அத்தகைய சங்கங்களில் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்வார்கள். அரசியல் விஷயங்களிலோ, சமூக விஷயங்களிலோ மாறுபடும் கருத்துக்களை அத்தகைய சங்கங்களில் வெளிப்படுத்துவது அந்த அங்கத்தினர்களுடைய வழக்கமன்று. அனைவர்க்கும் ஒத்ததாகவிருக்கும் கருத்துக்களையே பேசியும், விவாதித்தும் அவர்கள் இனிது பொழுது போக்குவார்கள். சமரசம் என்கின்ற பெயரை வைத்துக்கொண்டு மத அனுஷ்டானம் ஒன்றிலும் தட்டுப்படாது போகின்றவர்கள் பலர் இருக்கின்றனர். தாங்கள் படைத்துள்ள சீர்மைக்கு அது அறிகுறியென்று அவர்கள் எண்ணுகின்றனர். உண்மையில் அது சீர்மையும் அன்று; சமய அனுஷ்டானத்துக்குரிய ஊக்கமும் அன்று. உறுதிப்பாட்டுக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். வழவழத்தவர்களென்றே அவர்களைப்பற்றிப் பகரலாம். அத்தகையவர்கள் பண்பாட்டில் நாகரிகமானவர்களாகத் தென்படலாம். ஆனால் எந்த விதமான முன்னேற்றத்தையும் அவர்கள் அடைய முடியாது. அவர்களுக்கு நேர்மாருக மற்றொரு கூட்டத்தாரிருக்கின்றனர். அவர்களிடமிருப்பது குறுகிய மனப்பான்மையும் மதவெறியுமாம். தங்கள் சொந்த சமயத்தினிடத்தும் கொள்கைகளிடத்தும் அவர்கள் அத்தியந்த ஆர்வம் காட்டுகின்றனர். தங்கள் சொந்த சமயத்தை அவர்கள் எவ்வளவுக்

கெவ்வளவு நேசிக்கின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு புறச் சமயங்களை அவர்கள் அறவே வெறுக்கின்றனர். புறச் சமய வெறுப்பே சொந்தச் சமய அன்பாக அவர்களிடத்து மாறியமைகிறது. தங்களுக்குச் சொந்தமாயுள்ள சமயத்தை அவர்கள் தீவிரமாக அனுஷ்டிக்கவும் செய்கின்றனர். குறுகிய மனப்பான்மைக்கிடையில் ஆழ்ந்த சமயப்பற்றே அவர்கள் படைத்திருக்கும் சிறப்பாகும். இந்த இருதரத்தாருக்கிடையில் யாருடைய போக்கை நாம் வேண்டுவது என்னும் கேள்வி எழலாம். வழவழத்த சமரசமும் உதவாது, வெறிபிடித்த குறுகிய மதப்பற்றும் உதவாது. சமுதாயத்துக்கு எது தேவை என்பதை ஈண்டு ஒரு உபமானத்தைக் கொண்டு விளக்கவேண்டியது அவசியமாகிறது. நதி ஒன்று பரந்து விரிந்துகொண்டே போனால் அதன் வேகம் தணிந்து போகிறது. நீரோட்டத்துக்கு மாறாக நீர்த்தேக்கமே அதில் வந்தமைகிறது. அப்பொழுது அது மாசுபடிய ஆரம்பிக்கிறது. அதே நதி மற்றோரிடத்தில் ஒடுங்கிய இரண்டு மலைகளுக்கிடையில் கனவேகத்துடன் அறுத்துக்கொண்டு போகிறதென்று வைத்துக்கொள்வோம். அந்த இடத்தில் அந்த நதி யாருக்கும் எக்காரியத்துக்கும் உதவாது. வழவழத்த சமரசக்காரர்கள் பாசிபிடித்த நீர்த்தேக்கம் போன்றவர்கள். மதவெறி பிடித்தவர்கள் மலையிடுக்கில் அறுத்துக்கொண்டு விரைந்தோடும் நீர்ப்பெருக்குப் போன்றவர்கள். சமய அனுஷ்டானத்தில் பொருத்தமான மனநிலை படைத்திருப்பவர்கள் இந்த இரண்டுவிதக் குறைபாடுகளிலும் கட்டுப்படலாகாது. கடல்போன்ற தன்மை நல்ல சமய அனுஷ்டானக்காரர்களிடம் இருக்கவேண்டும். கடல் ஆழ்ந்தும் இருக்கின்றது, அகன்றும் இருக்கின்றது. அவரவர் சொந்த சமய அனுஷ்டானத்தில் ஆழ்ந்து செல்லவேண்டும்.

புறச்சமயங்களை அறிந்து ஆமோதிப்பதில் பரந்த நோக்குப் படைத்திருக்கவேண்டும். இந்த இரண்டுவிதப் பேரியல்புகள் படைத்திருப்பவர்களே உண்மையில் பெருமக்கள் ஆகின்றனர். அவர்களின் எண்ணிக்கை அதிகரிக்குமளவு உலகம் நலன் மிகப் பெறும். அப்பெருமக்கள் குழாம் உலகெங்கும் ஓங்குமாறு இறைவனை நாம் வழுத்துவோமாக. நாம் உலகைத் துருவி ஆராய்ந்து பார்த்தால் இத்தகைய பெருமக்கள் யாரோ சிலர் ஏதோ சில காலங்களில்தான் தோன்றுகிறார்களென்பது வெளியாகும். இச்சீரிய லக்ஷியத்தை அறிந்துகொள்ளும் சிறுபான்மையோர் செய்யக் கிடக்கும் கடமை ஒன்று உண்டு. ஜனசமூகங்களுக்கிடையில் இந்த உயர்ந்த லக்ஷியத்தை எடுத்துப் புகட்டவேண்டும். அப்படிப் புகட்டப் பெறுபவர்களுக்கிடையில் பலபேர் பரந்த எண்ணமுடையவர்கள் ஆவது சாத்தியம். தங்கள் சொந்த சமய அனுஷ்டானத்தை அவர்கள் தீவிரமாகக் கையாளுதல் அவசியம். அதற்கிடையில் மற்ற மதங்களுக்கும் எல்லாவிதமான ஆதரவும் தந்து வரவேண்டும். இஷ்டநிஷ்டை என்னும் நெறியை ஆர்வத்துடன் பின்பற்றுவதே அதற்குற்ற உபாயம் ஆகும்.

உலகில் மதங்கள் பல இருக்கின்றன. அவைகளுள் உட்பிரிவுகளும் பல இருக்கின்றன. அவையாவையும் துருவி ஆராய்ந்து பார்த்தால் ஓர் உண்மை வெளியாகும். ஒவ்வொரு சமயமும் ஏதேனும் ஒரு மார்க்கத்தை அல்லது லக்ஷியத்தை மானுடவர்க்கத்துக்கு எடுத்து வழங்குகிறது. பரம்பொருளையடைதற்கு அந்தச் சமயம் நல்குகின்ற ஒரு நெறியைத் தவிர வேறு வழியில்லை என்று அது வற்புறுத்துகிறது. அது புகட்டுகிற நெறியை ஏற்றுக்கொள்ளாதவனுக்கு விமோசனம் இல்லை என்றும் அச்சமயம் சாட்டுகிறது.

ஆனால் சாசுவதமாயுள்ள வேதாந்த தர்சனம் புகட்டுவது வேறு ஒரு போக்கானது. பரமாத்மன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தின் கர்ப்பக்கிரஹத்துக்குள் பிரவேசிப்பதற்கு எண்ணிறந்த வாயில்களிருக்கின்றன. அவைகளுள் எந்த வாயில் வழியாக வேண்டுமானாலும் ஆத்மசாதகர்கள் பரமாத்மனைப் போய் அணுகலாம் என்று புகட்டுவது வேதாந்த தர்சனம் ஒன்றேயாம். அது மட்டுமல்ல, அப் பரமாத்மனை விளக்கிக்காட்டுதற்கு முன்வந்துள்ள வேதாந்த தர்சனம் அவ் இறைவனை எண்ணிறந்த முறைகளில் எடுத்து ஓதுகிறது. சூர்யோதயத்தை இயற்கைத் தாய் நாள்தோறும் புதிய புதிய பாங்குகளில் விளக்கியருள்கின்றாள். வேதாந்த தர்சனம் செய்கின்ற செயலும் அத்தகையதே. ஏகமாய், நித்தியமாய் உள்ள மெய்ப்பொருளை அது என்னென்ன விதங்களிலெல்லாம் எடுத்துப் புகட்டி வருகிறது! பரம்பொருளின் மகிமைகளோ, எண்ணிக்கையில் அடங்காதவைகள். வெவ்வேறு விதங்களாக அப்பரம புருஷனுடைய பெருமைகளை எடுத்துக்காட்டுவதன் மூலம் அப்பெரியபொருளை அறிந்து கொள்ள இயலாதவர்களுக்கும் ஏதேனும் ஒரு விதத்தில் ஒரு சிறிதளவாவது அறிந்துகொள்ளும் வாய்ப்புக் கிட்டுகிறது. பரமனை அடைதற்கு ஆவல்கொண்டிருக்கும் ஆடவர்களையும், மகளிர்களையும் அன்பு கூர்ந்து வேதாந்த சாஸ்திரம் வரவேற்கிறது. ஆத்மசாதகர்களாகிய அவர்கள் மேல் நோக்கிச் செல்லுதற்கான பாதைகள் பலப்பல இருக்கின்றனவென்று வேதாந்தம் முரசறைகிறது. அத்தகைய பாதைகள் அமைக்கப் பெற்றிருக்குமிடம் எது என்னும் கேள்வி எழலாம். மானுட வாழ்க்கைக்குரிய உண்மைகள் பல இருக்கின்றன. அவ்வுண்மைகளைத் தவிர்க்க யாருக்குமே இயலாது. அத்தகைய வாழ்க்கைத் தத்துவங்களின்

யீதே இந்தப் பாதைகள் யாவும் அமைக்கப்பெற்றிருக்கின் றன. ஆதலால்தான் அவைகள் அறத்தாறு என்று இயம் பப் பெற்றிருக்கின்றன. அவ் ஆறுகளின் வழியே ஏகுதல் மூலம் பெரியபேறு அதனை உறுதியாகப் பெறலாம். இங்ங னம் வேதாந்த சாஸ்திரம் முரசு அறைகிறது. இத்தகைய அரிய பாதைகளை அமைத்துக் கொடுத்தவர்கள் யார் என் னும் கேள்வி அடுத்தபடியாக எழலாம். செந்நெறி சார்ந் திருந்து பரமாத்மனை அடையப்பெற்ற பெருமக்கள் பலர் இம்மண்ணுலகில் வாழ்ந்திருந்தனர். சர்வேசுவரனுடைய மகிமைகளோடுகூடி மண்ணுலகில் பிறந்து வந்த அவதார மூர்த்திகள் பலர் இருந்திருக்கின்றனர். இத்தகைய அதி கார புருஷர்களே கடவுளை யடைவதற்கான இப்பெருநெறி களையெல்லாம் காட்டியருளியிருக்கின்றனர். பண்டைக் காலத்தில் அத்தகைய பெருமக்கள் இப்பாரினுள் தோன்ற லாயினர். இக்காலத்திலும் அன்னவர்களில் யாரோ சில ரைக் காணலாம். எதிர்காலத்திலும் அத்தகைய சான் றோர்கள் தோன்றிவருவார்கள். காலத்தையும் இடத்தை யும் பொருள்படுத்தாது இறைவனுடைய பெருமைகளை விளக்கிக்காட்டுதற்கென்றே வையகத்தில் வந்துள்ள மேன் மக்களைப் பின்பற்றுவதே நல்லோர் செய்யக்கிடக்கும் கடமை யாகும். அகண்ட சச்சிதானந்தமாகிய மெய்ப் பொருளைப் போய் எட்டுவதே வீடுபேறு என்று அவர்களனைவரும் மொழிந்திருக்கின்றனர். அவர்கள் சித்தாந்தப்படுத்திய நெறிகளின் தொகைக்கு வேதாந்த தர்சனம் என்று பெயர். பிரபஞ்ச வாழ்வு என்னும் மாயையினின்று விடுபட்டு, முக்தி யாம்பேறு அடைவது ஜீவாத்மாக்களின் குறிக்கோள் ஆகும். நித்தியானந்த சொரூபியாகிய பரமாத்மனைப்போய் அவர்கள் முக்திநிலையில் அடைகின்றனர். அங்ஙனம் கட

வுவை அடைதற்கு மார்க்கங்கள் பல இருக்கின்றன. அம் மார்க்கங்களனைத்துக்கும் பொதுப் பெயர் வேதாந்த தர்சனம்.

மெய்ப்பொருளாய் இலங்கும் கடவுள் ஒருவரே என்பது வேதாந்தத்தின் கோட்பாடு. அந்த மெய்ப்பொருளுக்குப் பெரியோர்கள் பெயர்கள் பல கொடுத்திருக்கின்றனர். அம் மெய்ப்பொருளின் மகிமைகளோ எண்ணிக்கையில் அடங்கா தவைகள். மகிமைகளை முகாமைகளாக வைத்துக்கொண்டு ஒரு பொருளே பல தெய்வங்களாக அழைக்கப்படுகிறார். அவைகளுள் எந்தத் தெய்வத்தை உபாசித்தாலும் அது மெய்ப்பொருள் உபாசனையாகிறது. அம் மூர்த்திகளுள் முக்கியமானவைகள் ஆறு என்று அங்கீகரிக்கப்பட்டிருக் கின்றன. சிவம், சக்தி, விஷ்ணு, கணபதி, கார்த்திகேயன், சூரிய நாராயணன் என்பவர்கள் இந்த ஆறு மூர்த்திகளாம். இனி, இந்த ஆறு தெய்வங்களுக்கும் கூறுகள் பல இருக் கின்றன. உதாரணமாக மகாவிஷ்ணுவை தசாவதாரங் களாகவோ, வேறு எண்ணிக்கையிலடங்காத மற்ற அவ தார மூர்த்திகளாகவோ, புருஷோத்தமனாகவோ, ஆதி நாரா யணனாகவோ, எப்படிவேண்டுமானாலும் சாதகர்கள் உபாசிக் கலாம். அங்ஙனமே அம்பிகையின் சொரூபங்களும் பலப் பல. ஆத்ம சாதகன் ஒவ்வொருவனும் தனக்கு இஷ்டமான தெய்வத்தை உபாசனா மூர்த்தியாக எடுத்துக்கொள்ளலாம். அந்த உரிமை ஒவ்வொரு சாதகனுக்குமுண்டு. ஒருவன் தனக்கு உகந்த இஷ்டமூர்த்தியாகத் தெரிந்தெடுத்திருக் கும் தெய்வத்தை மற்றொரு மனிதன் எடுத்துக்கொள்ள வேண்டும் என்னும் அவசியமில்லை. இதுவே வேதாந்த தர்சனம் மக்களுக்குக் கொடுத்துள்ள இச்சா சுதந்தரமாகும். பின்பு, சாதனவகைகளும் எண்ணிக்கையிலடங்காதவை

களாக இருக்கின்றன. பொதுவாக அவைகளை கர்மயோகம், ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என வகைப் படுத்தலாம். தத்தம் இயல்புக்கேற்ப சாதகர்கள் இவைகளுள் தமக்குப் பொருந்திய முறைகளைப் பொறுக்கி யெடுத்து அனுஷ்டிக்கலாம். மானுட இயல்புகளும் எண்ணிக்கையில் அடங்காதவைகள். அத்தனைவித இயல்புகளுக்கேற்ற சாதனவகைகளை வேதாந்த சாஸ்திரம் நல்குகிறது. எம் முறையை மனிதன் அனுஷ்டித்தாலும் அதன் மூலம் அவன் மேன்மையடைய வேண்டுமென்பதே கோட்பாடு.

வீடு பேறு அடைதற்கு மார்க்கங்கள் பல இருப்பதால் அவைகளுள் ஏதேனும் ஒன்றை வெறுக்கவோ, புறக்கணிக் கவோ செய்யலாகாது என்று பக்தியோகம் நமக்கு ஆணை யிட்டுக் கூறுகிறது. இனி, ஆத்ம சாதனத்தில் பிரவேசிக் கின்ற ஒவ்வொருவனுக்கும் தகுந்த பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்றும் பகரப்பட்டிருக்கிறது. சிறு செடி ஒன்று வளர ஆரம்பிக்கிறது. அதற்குச் சுற்றிலும் வேலி கட்டி அதைப் பாதுகாக்க வேண்டும். பெரிய மரமான பிறகு அத்தகைய பாதுகாப்பு அதற்குத்தேவையில்லை. பாரமார்த்தி கப் பெருநிலையென்பதும் மக்களிற் பெரும்பான்மையோர்க்கு உள்ளத்திலிருக்கும் சிறு செடிக்கு ஒப்பானது. சாதன வகை களையும், கொள்கைகளையும் அடிக்கடி மாற்றுதல் என்னும் குலைவுக்கு உட்படுத்தினால் பாரமார்த்திகம் என்னும் அச் செடிக்குப் பங்கம் ஏற்படும். அது அழிந்து பட்டுப்போவ தற்கும் இடமுண்டு. மக்களிற் பெரும்பாலர் செய்து வரும் தவறுதல் ஒன்று உளது. பரந்த சமரச மனப்பான்மை தங்களிடத்து இருப்பதாக அவர்கள் சொல்லிக் கொள்ளு கின்றனர். அவர்கள் அடிக்கடி தங்கள் சாதனவகைகளை மாற்றிக் கொள்ளுகின்றனர். உபாசனா மூர்த்திகளையும்

அடிக்கடி மாற்றி எடுத்துக் கொள்ளுகின்றனர். உதாரணமாக முருகனைக் கொஞ்ச காலம் வழுத்துதல், பிறகு திருமாலைப் போற்றுதல், அதன் பிறகு அம்பிகையை உபாசித்தல்—இப்படியெல்லாம் மாற்றிக்கொண்டேபோகின்றனர். இப்படியெல்லாம் செய்வது இஷ்ட நிஷ்டையின் அறிகுறியல்ல. மந்த்ரஜபம் செய்கின்றவர்கள் அதை அடிக்கடி மாற்ற வேண்டுமென்று நினைப்பதுண்டு. ஒரு சாதகன் கொஞ்ச நாளைக்கு பஞ்சாக்ஷர ஜபம், அல்லது அஷ்டாக்ஷர ஜபம் செய்கிறான். அதன் பிறகு அந்த மந்திரங்களின் சூக்ஷ்மப் பகுதிகளையோ, காரணப் பகுதிகளையோ ஜபிக்கவேண்டுமென்று எண்ணுகிறான். அப்படிச் செய்வது பக்தியின் போக்கு அன்று. 'நம: சிவாய' என்றோ, 'நமோ நாராயணாய' என்றோ ஏதேனும் ஒரு நாமத்தைப் பிடித்துக்கொண்டால் ஜன்ம சாபல்யம் ஆகும் பரியந்தம் அதையே பயன்படுத்திவர வேண்டும். ஒரு கோட்பாட்டை ஆழ்ந்து பற்றிப் பிடிக்காதவர்கள் இதைக் கொஞ்சம் பார்க்கலாம், அதைக் கொஞ்சம் பார்க்கலாம் என்று மேற்போக்கான முயற்சி செய்கின்றனர். குடிகாரன் பலவிதமான மதுபானங்களை ருசி பார்க்க எத்தனிக்கின்றான். போஜனப்பிரியன் பலதரப்பட்ட பலகாரக் கடைகளில் பண்டங்களை வாங்கியுண்ண எத்தனிக்கின்றான். அதே போக்கில் ஆத்மசாதகன் ஒருவன் புதிய புதிய சாதனைவகைகளைச் செய்து பார்க்க நினைக்கிறான். அத்தகைய மனப்பான்மையை ஒருவிதமான நோய் என்று நவிலவேண்டும். அது இஷ்ட நிஷ்டையாகாது. நோய்வாய்ப்பட்டிருப்பவனுக்கு ஒருவித மருந்தைக் கொடுத்தால் அது அவனுடைய நாடி நரம்புகளில் புதிய கிளர்ச்சிகளை உண்டுபண்ணி நோயை ஒருவாறு தணிக்கிறது. கொஞ்ச நாளைக்குப் பிறகு அந்நோய் திரும்பவும் தலையெடுக்கிறது. புதிய மருந்துக்கு

நாடி நரம்புகள் ஒத்துப் போனதே அதற்குக் காரணமாகும். அதன் பிறகு மருந்தை மாற்றியாகவேண்டும். அதே விதத்தில் நல்ல பக்தர்களல்லாத ஆத்ம சாதகர்களைப் பிடித்திருக்கும் நோய் ஒன்று உண்டு. புதிய உபாசனை முறையை எடுத்துக்கொண்டு தாங்கள் முன்னேற்றம் அடைந்து வருவதாக அவர்கள் நினைக்கின்றனர். சிறிது காலத்தில் அதன் வேகம் தணிந்து விடுகிறது. பிறகு மற்றொரு வித சாதனத்துக்கு அவர்கள் தங்களை ஆயத்தப்படுத்துகின்றனர். இப்படியெல்லாம் அவர்கள் செய்து வருவது மனதுக்கு ஊட்டும் கஞ்சா அபினிக்கு ஒப்பானதாகும். தாற்காலிகமாகப் புதிய புதிய உணர்ச்சிகளை உண்டுபண்ணுவதற்கு மேல் அவர்களுக்கு ஒன்றும் வாய்க்காது. சாதகர்களுள் மற்றொரு வகையினன் இருக்கின்றானென்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். அத்தகையவன் முத்துச்சிப்பிக்கு ஒப்பானவன். சுவாதி நக்ஷத்திரம் உச்சத்திலிருக்கின்றபொழுது கடலில் பெய்கின்ற மழை பெருநலனை உண்டுபண்ணவல்லது. அவ்வேளையில் கடலின் அடி மட்டத்திலிருக்கும் முத்துச்சிப்பி மேற்பரப்புக்கு வருகிறது. தன் ஓட்டைப் பிளந்துகொண்டு அது மிதக்கிறது. சுவாதி நக்ஷத்திரத்தில் பெய்யும் மழையின் ஒரு துளி தன் ஓட்டுக்குள்ளே வீழ்ந்தால் அதை மூடியெடுத்துக் கொண்டு சமுத்திரத்தின் கீழுள்ள தரைக்கு அது போகிறது. ஆங்கு அந்த நீர்த்துளியை முத்து ஆக மாற்றியமைக்கும் வரையில் அமைதியாக கடலுக்குள்ளிருக்கும் தரையிலேயே அது தங்கியிருக்கிறது. அதே விதத்தில் நல்ல ஆத்ம சாதகன் ஒருவன் சத்குரு ஒருவரிடமிருந்து சீரிய உபதேசம் ஒன்றை ஏற்றுக் கொள்கிறான். தன் உள்ளம் என்னும் கடலுக்குள் அவன் ஆழ்ந்து மூழ்குகின்றான். உள்ளத்தினுள்ளே ஆத்ம சாதனத்தில்

ஆழ்ந்து மூழ்குகின்றவர்களே ஆழ்வார்களாகின்றனர். தான் உபாசனைக்காக எடுத்துக் கொண்டுள்ள உபாசனு மூர்த்தி ஒருவரிடத்திலேயே மாருத பக்தி எவனொருவன் வைக்கின்ருனே அவன் இஷ்ட நிஷ்டையில் நிலை நிற்பவனுகின்ருன். முத்துச்சிப்பி கடலின் அடிப்பகுதியில் முத்தை உண்டுபண்ணுவது போன்று இந்தப் பக்தன் பரம்பொருளைத் தன்னுடைய உள்ளத்தில் உறுதியாகப் பிரதிஷ்டை பண்ணியவன் ஆகின்ருன்.

இஷ்ட நிஷ்டையின் சிறப்பை இங்ஙனம் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதில் ஒருவிதக் கவிதை ரசம் சொட்டிக் கொண்டிருக்கிறது. அது உறுதியாக உள்ளத்தைப் பற்றிப் பிடிக்கும் தன்மையுடையதாகவுமிருக்கிறது. பக்தி பயிலுகின்ற ஆத்ம சாதகன் ஒருவனுக்கு பக்தியிலே அவன் முதிர்ச்சியடைவதற்காக அவன் ஏக நிஷ்டையிலேயே ஈடுபட்டிருக்கவேண்டும். மாது ஒருத்தி தன் புக்ககத்திலிருக்கும் ஆடவர் மகளிர் ஆகிய அனைவரிடத்தும் அன்பு செலுத்துகிருள் எனினும் தனது கணவனிடத்து அவள் தனிப் பற்றுதல் வைத்திருக்கின்ருள். அதைத் தன் ஆயுட்காலம் முழுதிலும் வேறு யாரிடத்திலும் மாற்றுவது கிடையாது. ஏக நிஷ்டை என்பது அத்தகையது. தனக்குரிய உபாசனு மூர்த்தியாக பக்தன் தெய்வத்தின் ஏதேனும் ஒரு வடிவத்தை ஏற்றுக்கொள்கிருன். பிறகு அவன் அதை மாற்றியமைப்பதில்லை. அவனுடைய இஷ்ட நிஷ்டை எத்தகைய உறுதிப்பாடுடையதாக இருக்கவேண்டுமென்பதற்கு துளசிதாஸர் ராமாயணத்தில் சான்று ஒன்று உண்டு. ஆஞ்சனேயர் பகர்வதாவது :

श्रीनाथे जानकीनाथे अभेदः परमात्मनि ।
तथापि मम सर्वस्वं रामः कमललोचनः ।।

ஸ்ரீ நாதே ஜானகீநாதே அபேத: பரமாத்மனி
ததாபி மம ஸர்வஸ்வம் ராம: கமலலோசன:

'பரமாத்மா என்று அழைக்கப்பெறுமிடத்து ஸ்ரீ நாதன் ஆகிய லக்ஷ்மீபதியும் ஜானகி நாதனுகிய சீதாபதியும் ஒன்றே யென்பதை நான் அறிகிறேன். ஆயினும் என் ஆருயிர்க் குயிராய் இருப்பவன் கமலக் கண்ணனுகிய இராமன் என் பதை நான் அறிகிறேன்.' ஆஞ்சநேயர் இங்ஙனம் இராம பிரானிடத்தே தனிபக்தி பூண்டிருந்தது போன்று ஒவ்வொரு பக்தனும் தனது வழிபடுதெய்வத்திடத்து மாருத பக்தி பூண்டு ஒழுகவேண்டும். பக்தன் ஒருவன் எங்ஙனம் ஒழுக வேண்டுமென்பதற்கு மற்றொரு கோட்பாட்டையும் துளசி தாஸர் பகர்ந்துள்ளார். அதாவது:

सब से बसिये सब से रसिये सब का लिजियेनाम ।
हांजी हांजी करते रहिये बैठिये अपने ठाम ॥

ஸப் ஸே பஸியே ஸப் ஸே ரஸியே
ஸப் கா லிஜியே நாம்
ஹாம்ஜீ ஹாம்ஜீ கர்தே ரஹியே
பைடியே அப்னே டாம்

'இனிமை இருக்குமிடத்திலிருந்தெல்லாம் அதை எடுத் துக்கொள். எல்லாருடன் சேர்ந்து அமர்ந்திருக்கக் கற்றுக் கொள். இறைவனுக்கு அமைந்திருக்கும் நாமங்களை யெல் லாம் சரி சரி யென்று ஒத்துக்கொள். ஆனால் உன் பிடிப்பில் நீ உறுதியாயிரு.' தனது லக்ஷியத்தில் கண்ணுங் கருத்து மாயிருக்கின்ற பக்தன் நாளடைவில் ஒரு பெரிய ஆலமரம் போன்று ஆவான். நுண்ணிய விதையினின்று அது துளிர்த்து வருகிறது. தொடர்ந்து வளர்கிறது. நாலாபக்கமும் கிளை களை அது நீட்டுகிறது. விழுதுகளைத் தரையில் செலுத்து

கிறது. பலபேர் தங்கியிருக்கத் தகுந்த விரிந்த மரமாக அது மாறியமைகிறது. தனது இஷ்டநிஷ்டையில் ஆழ்ந்து பயிலு கிற பக்தன் அந்த ஆலமரத்துக்கு ஒப்பாகிறுன். தான் வழி படும் தெய்வமே எண்ணிறந்த பெயர்களைப் பெற்றிருக்கிறு ரென்பதையும் விதவிதமான முறைகளிலே வெவ்வேறு சமயங் களில் அவர் போற்றப்படுகிறுரென்பதையும் சுவானுபூதியில் அவன் அறிந்து கொள்வான். நாலாபக்கமும் விரிந்து பெரிய தாயிருக்கும் ஆலமரத்தைக் காற்றும் மழையும் அசைக்க முடி யாது. இஷ்டநிஷ்டையில் முன்னேற்றம் அடைந்து தனது வழிபடு தெய்வமே வெவ்வேறு விதங்களில் வெவ்வேறு சமயங்களால் ஆராதிக்கப்படுகிறுரென்பதை அறிந்து கொள்ளுகிற பக்தனுடைய பக்தியும் உறுதி வாய்ந்ததா கிறது. இத்தகைய உறுதியைப் பெறுதற்கு இஷ்ட நிஷ்டை ஒன்றே உற்ற உபாயமாகிறது.

இஷ்ட நிஷ்டையை உறுதிப் படுத்துதற்கென்றே புரா ணங்களும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. சிவபுராணத்தில் சிவனே முழுமுதற்பொருள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணு புராணமோ விஷ்ணுவுக்கு முதன்மை கொடுக் கிறது. அம்பிகை அனைத்துக்கும் ஆதி பொருள் என்று தேவி பாகவதம் பகர்கிறது. அவரவர் உபாசிக்கும் தெய் வத்தினிடத்து அலாதியான பக்தியை வளர்ப்பதற்கே புராணங்கள் இப்படியெல்லாம் தெய்வ சொரூபங்களுக்கு முதன்மை நல்கி வருகின்றன. ஒவ்வொரு சாதகனும் தான் போற்றும் தெய்வத்திடத்து மாருத பக்தி வைக்கவேண்டும்.

---

# 10. பக்தி சாதனங்கள்

பக்திக்குரிய சாதனங்கள் பல இருக்கின்றன. ஸ்ரீ ராமானுஜாச்சாரியர் வேதாந்த சூத்திரங்களுக்கு இயற்றியிருக்கிற பாஷ்யத்தில் அச்சாதனவகைகளுள் சிலவற்றை இயம்பியிருக்கிறார். பக்தியுண்டாவதற்கு விவேகம், விமோகம், அப்பியாசம், யாகக்கிரியைகள், தூய்மை, பலம், மிகைப்பட்ட களிபேறு கொள்ளாமை ஆகியவைகளை அனுஷ்டிக்க வேண்டும் என்கிறார் அவர். விவேகம் என்னும் சொல்லுக்கு அவர் அலாதியான அர்த்தம் கொடுத்திருக்கிறார். உணவுவகைகளுள் மலினப்பட்ட உணவினின்று தூய உணவைப் பிரித்தெடுப்பது விவேகம் என்று அவர் இயம்புகிறார். ஆகாரம் தூய்மையை இழந்துவிடுவதற்கு மூன்று காரணங்கள் இருக்கின்றனவென்று அவர் விளக்குகிறார். ஜாதி தோஷம் என்பது உணவில் ஏற்படுகின்ற முதல் குற்றமாகிறது. உற்பத்தியாகின்ற பொழுதே அல்லது தோன்றுகிற பொழுதே எந்த உணவுப் பொருள் குறைபாட்டுடன் கூடித் தோற்றத்துக்கு வருகிறதோ அந்தக் குறைபாட்டுக்கு ஜாதி தோஷம் என்று பெயர். இயற்கையாகவே அமைந்துள்ள குறை என்பது அதன் பொருள். வெள்ளைப்பூண்டு, வெங்காயம், மது, மாமிசம் முதலியன இயல்பாகவே குற்றமுடைய உணவுகள் ஆகின்றன. அவைகளில் சில தமோகுணத்தையும் வேறு சில ரஜோ குணத்தையும் வளர்க்கின்றன. மது அல்லது கள்ளைச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். அது உடலுக்கு ஊக்கம் தருகிறது என்றாலும் மனிதனிடத்து இருக்கிற விவேகம் அல்லது நல்லறிவைப் பாழ்படுத்துகிறது. கள்வெறி பிடித்திருக்கிறவன் பயித்தியக்காரன் போன்று நடந்து கொள்கிறான். உணவானது அவனுடைய உள்ளத்தில் எவ்வளவு பெரிய மாறுதலை உண்டு பண்ணு

கிறது என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். மாமிச உணவைப் பற்றியும் ஆராய்வது அவசியம். இறைச்சியையே தின்று சிறுத்தை, புலி முதலியன உயிர் வாழ்கின்றன. அவைகளிடத்துப் பதைபதைப்பு மிக இருக்கிறது. சாந்தமும் தொடர்ந்து அமைதியாக வினையாற்றும் பொறுமையும் அவைகளிடத்துக் காணப்படுவதில்லை. பின்பு யானையோ மரக்கறி உணவை மட்டும் உண்டு உயிர்வாழ்கிறது. அதைப் பிடித்துப் பழக்கினால் மனிதனுக்குப் பயன்படும் வேலைகள் பலவற்றை அது பொறுமையாகவும், நெடுநேரம் தொடர்ச்சியாகவும் செய்யவல்லது. இரண்டுவித விலங்குகளுக்கிடையில் இத்தகைய குணபேதம் இருப்பதற்கு உணவு வேற்றுமை ஒரு முக்கியமான காரணமாகிறது. மனிதன் உண்ணும் உணவு வகைகளுள் வெள்ளைப்பூண்டு, வெங்காயம் முதலியன காமவிருத்தியை உண்டுபண்ணக் கூடியவைகள். பூமிக்குள்ளே வரும் கிழங்கு வகைகளுக்குப் பொதுவாகத் தமோகுண விருத்தியுண்டு. அத்தகைய உணவு வகைகளை விலக்கி வைத்துப் பழகுதல் பக்திசாதனத்துக்கு அனுகூலமாகிறது. உணவில் உண்டாகிற இரண்டாவது குறைபாட்டுக்கு ஆச்ரயதோஷம் என்று பெயர். இந்த ஆச்ரய தோஷத்தைக் கண்டுபிடிப்பது ஒரு விதத்தில் கடினமானது. மனிதன் ஒருவன் சமைத்த உணவைக் கையாளுகின்ற பொழுது அவனுடைய சுபாவம் சூக்ஷ்ம நிலையில் அந்த உணவில் படிகிறது. குணக்கேடன் ஒருவன் கைப்பட்ட உணவினிடத்து கேடு மிகப்படிந்து விடுகிறது. நல்லான் ஒருவன் கைப்பட்ட உணவில் நல்லியல்பு பொதிந்துவிடுகிறது. இக்காரணத்தை அடிப்படையாகக் கொண்டே சமைத்த உணவைக் கீழோரிடமிருந்து ஏற்றுக்கொள்ளலாகாது என்னும் கோட்பாடு பிறந்துள்ளது. ஆனால் இன்றைக்குச் சமுதாயம்

இக் கோட்பாட்டைச் சரியாக அனுஷ்டிக்கும் நிலையிலில்லை. சமுதாயப் பழக்க வழக்கத்தின்படி கீழ்மகன் என்று கருதப் படுபவன் உண்மையில் இயல்பிலே கீழோன் அல்லன். மேலான குடியில் பிறந்தவனென்றும், மேலான இனத்தைச் சேர்ந்தவனென்றும் சமுதாயம் கருதி வருகிறவர்களெல்லோ ரும் உண்மையில் இயல்பிலே மேன்மக்கள் அல்லர். ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸருடைய ஜீவிதத்திலிருந்து இரண்டு நிகழ்ச்சிகளை உதாரணமாக எடுத்துக்கொண்டால் ஆச்ரய தோஷத்துக்கு நமக்கு நல்ல விளக்கம் கிடைக்கும். அவர் பக்தருடைய வீடுகளுக்கு இடையிடையே எழுந்தருளுவ துண்டு. மற்ற பக்தர்களையும் ஆங்கு வந்து குழுமும்படி அவர் உற்சாக மூட்டுவார். ஒரு பக்தர் வீட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சி யொன்று பலர் கண்ணுக்குத் தென்படாததாயிருந்தது. ஆனால் விவேகானந்த சுவாமிகள் தமது நுண்ணறிவால் அதை ஆராய்ந்து கண்டு பிடித்து விட்டார். ராமகிருஷ்ணர் சென்றிருந்தது ஒரு பிராம்மணருடைய வீட்டுக்கு. தமக்கு அருந்துதற்கு நன்னீர் கொண்டு வரும்படி அந்தப் பிராம்ம ணனை அவர் ஏவினர். ஆனால் நீர் கொண்டுவரத் தாமே செல்லாது தமது தம்பியை அவர் அனுப்பி வைத்தார். தம்பி கொண்டு வந்த ஜலத்தைப் பரமஹம்ஸர் கையில் வாங்கினர். சிறிது நேரத்திற்குப் பிறகு அந்த ஜல பாத்திரத்தைக் கீழே வைத்தார். அதனுள் இருந்த நீரை அவர் அருந்த வில்லை. வேறு ஜலம் கொண்டு தமது கையை அலம்பினர். இன்னும் சிறிது நேரத்திற்குப் பிறகு மூத்தவருக்கு உத்தரவு பிறப்பித்தார். "இந்த ஜலத்தைக் கீழே கொட்டி விட்டு ஜல பாத்திரத்தை நன்ருக அலம்பி நீயே உன் கைப்பட வேறு நீர் கொண்டுவா" என்று சொல்லியனுப்பினர். மூத்தவரும் அங்ஙனமே செய்தார். அந்த நீரை வாங்கிப்

பரமஹம்ஸர் பருகினர். ஆனால் வெளிக்கு எந்த விதமான வேற்றுமையையும் காட்டிக்கொள்ளாது பரமஹம்ஸர் நடந்து கொண்டார். இதையெல்லாம் விவேகானந்தர் கூர்ந்து கவனித்தார். இளையவன் கொண்டு வந்த நீரை அவர் அருந் தாததற்குக் காரணம் யாதோ இருக்கிறதென்று சிஷ்யர் யூகித்தார். அந்த இளையவனோடு அவர் அன்று முதல் நட்புக் கொண்டாடிப் பார்த்தார். சில நாட்களில் உண்மை விளங் கிற்று. இளையவன் ஒழுக்கம் தவறிய மனிதன். ஸதாசாரத் துக்கும் அந்த மனிதனுக்கும் வெகுதூரம். ஆகையால்தான் அம்மனிதன் கைப்பட்ட நீரைப் பரமஹம்ஸர் அருந்த முடிய வில்லை யென்று விவேகானந்தர் முடிவு கட்டினர். மற்றொரு நிகழ்ச்சி. கீழ்க்குலத்துக் கிழவி ஒருத்தி இடையிடையே பரமஹம்ஸரைத் தரிசிக்க வருவதுண்டு. அவள் வரும்பொழு தெல்லாம், தமக்கு ஏதாவது பக்ஷணம் சமைத்துக்கொண்டு வரவேண்டுமென்று பரமஹம்ஸர் வற்புறுத்தினர். ஒருநாள் பெருமக்கள் பலர் குழுமியிருந்த வேளையில் கீழ்க்குலத்த வளாகிய தான் கொண்டு வந்த உணவைப் பரமஹம்ஸர் முன்னிலையில் வைக்க அவள் தயங்கினள். ஆனால் பரம ஹம்ஸர் என்ன செய்தார்? அவள் கொண்டு வந்தபக்ஷணத் தைத் தாமே வலியக்கேட்டு வாங்கிக் கூடியிருந்தவர்களின் முன்னிலையிலே அவர் அதை அருந்தினர். மிகத்தூய உணவு என்றும் பாராட்டினர். இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் ஒப்பிட்டுப் பார்க்குங்கால் ஆச்ரய தோஷத்துக்கு நமக்கு நல்ல விளக்கம் கிடைக்கிறது. ஒரு மனிதன் எக்குலத்தில் அல்லது குடியில் பிறந்திருக்கிறன் என்பது முக்கியமான தல்ல. கீழ்க்குடியில் பிறந்திருக்கிற ஒருவனிடத்து நல்லி யல்பு நிறைந்திருக்குமானல் அவன் கைப்பட்ட உணவைப் பக்தி சாதனம் செய்கின்ற ஒருவன் தாராளமாக ஏற்றுக்

கொள்ளலாம். ஆனால் ஒழுக்கத்தினின்று வழுவிய ஒருவன் உயர்குடியில் பிறந்தவனாயிருப்பினும் அவன் கைப்பட்ட உணவை பக்தன் ஒருவன் ஏற்று அருந்தலாகாது. இனி, ஆகாரத்தில் ஏற்படுகின்ற மூன்றாவது தோஷம் ஒன்று இருக்கிறது. அதற்கு நிமித்த தோஷம் என்று பெயர். புறக்காரணத்தை முன்னிட்டு உணவு கெட்டுப் போவதுண்டு. அதாவது குப்பை, தூசி, அழுக்கு, உரோமம் முதலியன சமைத்த உணவில் படிய நேர்ந்தால் அந்த உணவு அருந்தத் தகுதியற்றதாகிறது. ஈ, எறும்பு மொய்த்த உணவும் தோஷமுடையதாகிறது. பிறர் எச்சில்பட்ட உணவும் அத்தகையதே. அப்படியெல்லாம் நிமித்ததோஷம் உணவில் வாராது இருக்கும்படி பார்த்துக்கொள்வது நல்ல விவேகமாகிறது. உணவைப்பற்றிய கோட்பாடு ஒன்று சாந்தோக்கிய உபநிஷதத்திலிருக்கிறது.

आहारशुद्धौ सत्त्वशुद्धिः सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः ।

ஆஹாரசுத்தௌ ஸத்வசுத்திः
ஸத்வசுத்தௌ த்ருவா ஸ்ம்ருதிः

'ஆகாரம் சுத்தமானதாயிருந்தால் மனது சுத்தியடைகிறது. மனது சுத்தியடைந்தால் இறைவனைப்பற்றிய ஞாபகம் உறுதிப்பாடுடையதாகிறது. சத்துவகுணத்தினின்று மனத்தூய்மை வருவதால் சத்துவகுணத்தையே ஈண்டு மனதாக வைத்து இயம்பப்பட்டிருக்கிறது.' இந்த உபநிஷத்து வாக்கியத்தைத் தாம் எடுத்துக்கொண்டுள்ள ஆகார விவேகத்துக்கு மேற்கோளாக ஸ்ரீ ராமானுஜாச்சாரியர் இயம்பியிருக்கிறார்.

பக்தி சாதனம் பயிலுகிற ஒருவன் எத்தகைய உணவை அருந்தவேண்டும், எத்தகைய உணவை அருந்தலாகாது

என்னும் நியமனம் ஏற்பட்டிருக்கிறது. இது விஷயத்தில் ஆத்ம சாதகர்கள் மிகக் கண்டிப்பாக இருக்கவேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கிறது. பக்தர்களில் பலபேர் ஏனைய அடிப்படைக் கோட்பாடுகளைப் பெரிதும் புறக்கணித்துவிட்டு உணவு உண்கின்ற விஷயத்தில் மட்டும் தங்களுடைய முழுக் கவனத்தைச் செலுத்தியிருக்கிறார்கள். எந்த உணவை உண்பது, எந்த உணவை உண்ணலாகாது என்னும் விசாரத்தில் அவர்கள் வரம்பு கடந்தவர்களாகவே போயிருக்கிறார்கள். ஆகார நியமனத்தில் ஏதோ சில நெருக்கடியான வேளைகளில் சிறிய விதி விலக்குகள் ஏற்பட்டால் அதனால் பெருங்கேடு ஒன்றும் வந்துவிடாது. ஆகார நியமனத்தைத் தீவிரமாக அனுஷ்டிக்கின்றவர்கள் அதினின்று சிறிது வழுவுங்கால் தாங்கள் பிரஷ்டர்கள் ஆகிவிட்டதாகவே எண்ணி மனங்கலங்குபவர்கள் இருக்கிறார்கள். ஆனால் திடீரென்று எந்தவிதமான கேடும் அத்தகைய வழுவுதலினின்று ஒருபொழுதும் வாராது. பொதுப்பட தன்னுடைய நித்திய வாழ்க்கையில் பக்தி சாதகன் ஒருவன் தூய உணவையே அருந்திக்கொண்டிருக்க வேண்டுமென்ற கோட்பாட்டைப் புறக்கணிக்கலாகாது. அக்கோட்பாடு வாழ்க்கைக்குரிய உண்மைகளில் ஒன்று ஆகும். ஆனால் தற்செயலாய் ஏதாவது வழுவு வாய்க்குமாகில் அதனால் கேடு ஏதும் விளையாது. அருந்தும் ஆகாரத்துக்கும் உள்ளே வடிவெடுக்கும் மன இயல்புக்கும் உள்ள தொடர்பை நாம் அறிந்திருக்கவேண்டும். ஆறு தர்சனங்களில் ஒன்றாகிய சாங்க்யதர்சனம் இக்கோட்பாட்டைத் தெளிவுபட விளக்குகிறது. சத்வம், ரஜஸ், தமஸ் என்கின்ற முக்குணங்களாலேயே பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் உண்டாகியிருக்கின்றன. இந்த மூன்று குணங்களும் நடுநிலையை அடையுங்கால் அவை மூலப்

பிரகிருதியாகத் தோற்றமற்ற நிலைக்குப் போகின்றன. அவைகளுக்கிடையில் தாரதம்மியம் அல்லது ஏற்றத்தாழ்வு ஏற்பட்டால் அப்பொழுது இப்பிரபஞ்சம் தோற்றத்துக்கு வருகிறது. இம் முக்குணங்களைப் பற்றிய மற்றோர் உண்மை உண்டு. வஸ்துவும், வஸ்துவினிடத்துள்ள குணமும் இணைபிரியாதவைகளாம். அதாவது சத்வம், ரஜஸ், தமஸ் என்பவை மூன்றுவித குணங்களுடைய பொருள்கள் என்று பகர்ந்தால் அது பிழையாகாது. பொருளும், பொருளின் தன்மையும் இணைபிரியாதவைகள் என்பதே கோட்பாடு. வைரம் என்பது ஒரு பொருள். பிரகாசித்துக் கொண்டிருப்பது அதன் தன்மை. வைரத்திடத்திருந்து பிரகாசித்தல் என்னும் அதன் தன்மையைப் பிரிக்க முடியாது. பிரகாசித்தல் என்னும் தன்மை அதை விட்டுப் பிரிந்து போனால் பிறகு அது வைரம் என்கிற பெயரை இழந்துவிட்டு வேறு ஏதாவது பெயர் பெறும்.

குணம், குணீ ஆகிய இரண்டுக்கும் இடையில் வேற்றுமையில்லை யென்பது சாங்க்யதர்சனக் கொள்கையாகும். முக்குணங்கள் என்னும் மூலப் பொருள்களைக் கொண்டே மானுட சரீரம் அமைக்கப்பெற்றிருக்கிறது. மட்பாண்டத்துக்குக் களிமண் உபாதான காரணமாயிருப்பது போன்று முக்குணங்கள் மானுட சரீரத்துக்கு உபாதான காரணமாகின்றன. இந்த மூன்று குணங்களுள் சத்வகுணம் யார் ஒருவனுடைய சரீர அமைப்பில் ஓங்கியிருக்கிறதோ, அவனே பாரமார்த்திகப் பெருவாழ்வில் ஈடுபடத் தகுதியுடையவன் ஆகிறான். சத்வகுணம் ஓங்கப்பெறாத சரீரத்திலிருப்பவனுக்கு பக்தி அமைவதில்லை. உணவின் வாயிலாகவே உடலமைப்புக்குத் தேவையாயிருக்கின்ற பொருள்களை நாம் ஏற்று வருகிறோம். அப்பொருள்களிடத்திருந்தே நமது

மனதும் அமையப்பெறுகிறது. பருத்திருக்கும் உடலுக்கும், நுண்ணியதாயிருக்கும் உள்ளத்துக்கும் தொடர்வு உண்டு. ஸ்தூல சரீர அமைப்பை அனுசரித்தே சூக்ஷ்மமாயிருக்கும் மனதும் வடிவெடுக்கிறது. ஆதலால் எத்தகைய உணவை உண்ணவேண்டும், எத்தகைய உணவை உண்ணலாகாது என்கின்ற ஆகார விவேகம் பக்திமார்க்கத்தில் செல்லுகின்ற ஒருவனுக்கு முற்றிலும் தேவையாயிருக்கிறது. இந்த நிய மனத்தைப் பழக்கத்தில் கொண்டுவரும் சாதகர்கள் அடிப் படைக் கோட்பாட்டை மறந்துவிட்டு மேற்போக்கான செயல் களில் குருட்டுத்தனமாக ஆழ்ந்து ஈடுபட்டுக் கிடக்கின்றனர். அப்படி அவர்கள் செய்துவருகின்ற செயல்கள் வைதிகத் துக்கும் ஒவ்வாது, லௌகிகத்துக்கும் ஒவ்வாது. லௌகி கத்தில் மனிதனை மனிதன் கண்ணியப் படுத்துவதாக அமை கின்ற செயல்களே பாராட்டுதற்குரியவைகளாகின்றன. வழிபாட்டின் பெயரால் மனிதனைச் சிறுமைப் படுத்துகின்ற வன் தெய்வத்தை ஒருநாளும் அணுகமாட்டான்; பின்பு அடைவது எங்கே? வைதிகத்துக்கு ஒத்திருக்கிற சிறந்த சமய அனுஷ்டானங்கள் மனிதனை யாண்டும் உயர்நிலைக்குக் கொண்டுவருகின்றன; உயிர்களுக்கிடையில் அன்பைப் பெருக்குகின்றன. மதத்தின் பெயரால் மனிதன் செய்து வருகிற தவறுதல்களுக்குச் சில சான்றுகளை ஈண்டு எடுத் துக் கொள்வோம். பக்தர்கள் பலர் ஒன்றுகூடி தேவாரா தனை செய்தானபிறகு அந்தத் தெய்வத்தின் பிரசாதத்தை அருந்தப் போகின்றபொழுது அவர்கள் தங்களைச் சிறு சிறு கூட்டங்களாகப் பிரித்து வைத்துக் கொள்கின்றனர். ஒரு கூட்டத்தார் அமுது பண்ணுவதை இன்னொரு கூட்டத்தார் பார்க்கலாகாது என்னும் பொருளற்ற கொள்கை அவர்க ளுடைய உள்ளத்தில் பதிந்து கிடக்கிறது. ஒருவன் அமுது

பண்ணுவதை மற்ருெருவன் பார்த்துவிட்டால் அதனுல் தனது புனிதம் போய்விடுகிறது என்று எண்ணுபவன் வாழ்க்கைத் தத்துவத்தையோ, இறைவனது மகிமையையோ உள்ளபடி அறிந்தவனல்லன். திருஷ்டிதோஷம் என்னும் பொருளற்ற பழக்க வழக்கம் ஒன்று சமயத்தின் பெயரால் சிலர் உள்ளத்தில் புகுந்திருக்கிறது. அதற்கொரு சான்று எடுத்துக் கொள்வோம். பக்திநெறியில் முறையாக வாழ்ந்து வரும் குடும்பத்தார் தங்கள் வீட்டு முற்றத்தில் வற்றல் வகைகள், ஊறுகாய் வகைகள் ஆகியவைகளை வெய்யிலில் காயவைத்திருந்தனர். பக்கத்து வீட்டில் தென்னை மரத்தினின்று இளநீர் போடுவதற்கு ஒருவன் அம்மரத்தின் மீது ஏறினுன். அப்படி மேலே போனவனுடைய காட்சிக்கு இந்த உணவுப் பொருள்கள் இலக்கு ஆகியது. உடனே அவைகளிடத்து திருஷ்டி தோஷம் உண்டாகிற்று என்று அவைகளை எடுத்து வறியோர்க்கு வழங்கிவிட்டனர்! மன முவந்து வறியோர்க்கு உணவு வழங்கும் பழக்கம் அக்குடும்பத்தாரிடம் இல்லை. இத்தகைய செயல் தெய்வத்தின் பெருமைக்கோ, மனிதனுடைய கண்ணியத்துக்கோ பொருந்தாதது ஆகிறது. ரயில்வண்டிப் பிரயாணம் செய்யும் சிலர் தங்களை வைதிக ஆசாரத்தில் உயர்ந்தவர்கள் என்று எண்ணிக்கொள்கின்றனர். தாங்கள் உணவு அருந்துவதை மற்றப் பிரயாணிகள் பார்க்கலாகாதென்று அவர்கள் முகம் அலம்பும் அறைக்குள்ளே சென்று உணவை இரகசியமாக அருந்திவிட்டு வருகின்றனர். தங்களுடைய பக்தி சாதனத்துக்கு அத்தகைய செயல்கள் பெருந்துணை புரிகின்றன வென்று அவர்கள் எண்ணிவருகின்றனர். மனிதனை மனிதன் அலக்ஷ்யப்படுத்தும் செயல் பக்திசாதனமும் அன்று, உலக நடைமுறைக்கு ஒத்ததுமன்று. ஆகாரம் ஏற்கின்ற

பழக்க வழக்கங்களில் வெறி பிடித்தவர்களாய் சிலர் வரம்பு கடந்து போய்ச் செய்யத்தகாத செயல்களில் ஈடுபடு கின்றனர். ஆகார விவேகத்தைப் பற்றிய அடிப்படைக் கோட்பாட்டை அன்னவர்கள் அறிந்து கொண்டவர்கள் அல்லர். மூலக்கோட்பாடு இன்னதென்று விளக்கிக் காட்டி யிருக்கும் சமயாசாரியர்கள் பொதுமக்களிடம் தென்படும் இத்தகைய புல்லிய செயல்களுக்குப் பொறுப்பாளிகள் ஆக மாட்டார்கள்.

உணவு அருந்தும் விஷயத்தில் வைதிக ஆசாரமென்று சொல்லிக்கொண்டு மக்கள் கையாண்டு வருகின்ற சில பழக்க வழக்கங்கள் உண்மையில் அடிப்படைத் தத்துவத்துக்கு ஒத்தவைகள் ஆகா. அங்ஙனம் அதி ஜாக்கிரதையுடன் ஆகார நியமனங்களில் ஈடுபட்டு வருவதால் அவர்கள் ஒருவிதமான முன்னேற்றமும் அடையவில்லை. மற்றவர் களிடத்திருந்து ஒதுங்கியிருக்கும் பிரகிருதிகளாகத் தங்களை மாற்றியமைத்துக் கொண்டதுதான் கைகண்ட பல னாகும். எந்தப் பழக்க வழக்கத்துக்கு எத்தகைய மதிப்புத் தரவேண்டும் என்பதை மனிதன் எளிதில் அறிந்து கொள்வ தில்லை. வாழ்வை மேன்மைப்படுத்துவதற்கு இன்றியமை யாதவைகளாயிருக்கும் முக்கியமான கோட்பாடுகளில் பல வற்றை மதவெறி பிடித்துள்ள மனிதன் புறக்கணிக்கிறான்.

“ஆஹார சுத்தௌ ஸத்வ சுத்திঃ
ஸத்வ சுத்தௌ த்ருவா ஸ்ம்ருதிঃ”

என்று சாந்தோக்ய உபநிஷதத்தில் அமைந்திருக்கும் மந்த் ரத்துக்கு ஸ்ரீ சங்கராச்சாரியர் இயற்றியுள்ள பாஷ்யத்தில் சீரியபோக்கில் அவர் வியாக்கியானம் செய்திருக்கிறார். அந்த வியாக்கியானத்தையும் ஈண்டுச் சிறிது ஆராய்ச்சி பண்ணு வது அவசியமாகிறது. ஆகாரம் என்னும் பதத்துக்கு உணவு

என்பது பொதுவாக நாம் கொடுக்கும் பொருள் ஆகும். உடலுக்குக் கொடுக்கின்ற உணவு ஒன்றுமட்டும் ஆகாரமாவதில்லை என்று அவர் இயம்புகிறூர். எதெல்லாம் மனிதனுல் உட்கொள்ளப்படுகிறதோ அதெல்லாம் ஆகாரமாகிறது. அஷ்டாங்க யோகத்தில் பிரத்தியாகாரம் என்பது ஐந்தாவது அங்கமாக அமைந்திருக்கிறது. அக்கோட்பாட்டை அனுசரித்தே ஆகாரம் என்னும் சொல்லுக்கு ஸ்ரீ சங்கராச்சாரியர் விளக்கம் கொடுக்கிறூர். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தின் வாயிலாக மனது கருத்துக்களையும், எண்ணங்களையும் உள்ளே வாங்கிக் கொண்டிருக்கிறது. மனது ஏற்கின்ற ஆகாரம் உடல் ஏற்கின்ற ஆகாரத்தைவிட உயர்ந்தது. ஏனென்றால் உடலுக்குரிய ஆகாரம் மனிதனுக்கும் மற்ற உயிர்களுக்கும் பொதுவானது. உள்ளத்துக்குரிய ஆகாரமோ அலாதியாக மனிதனுக்கே உரியதாகிறது. ஞானேந்திரியங்கள் ஐந்தையும் பயன்படுத்தி மனது எத்தகைய உணவை உள்ளே வாங்கிக் கொள்கிறதோ அதுதான் சிறப்பாக மனிதனுக்குரிய உணவு என்று அவர் பொருள்படுத்துகிறூர். கண் பார்க்கிறது. தென்படுகிற வடிவங்களை எப்படிப் பொருள்படுத்தி எத்தகைய எண்ணத்தை மனது தனக்குத்தானே உண்டு பண்ணிக்கொள்கிறதோ அது கண்ணின் மூலமாக எடுத்துக் கொள்ளும் உணவு ஆகிறது. பெண்வடிவு ஒன்று புலனுகிறது. தூர்த்தன் ஒருவன் அவ்வடிவத்தைக் காமக்கிழத்தி என்று பொருள்படுத்துகிறுன். அவன் ஏற்கும் உணவு அத்தகையது. பக்தன் ஒருவன் அவளை அன்னை பராசக்தியின் வடிவெனப் பொருள்படுத்துகிறுன். கண்ணின் மூலம் பக்தன் பெறுகிற உணவு அத்தகையது. ஒரே வடிவம் இரண்டு மனிதர்களுக்கு இரண்டுவித உணவாக அமைவதா

கிறது. இசையும், மொழியும் காதால் கேட்கப்படுகின்றன. சிற்றின்பத்துக் கேதுவான சிருங்கார ரஸத்தையும், புல்லிய கருத்துக்களையும் காதால் வாங்குமிடத்து அது பொருந்தாத உணவு ஆகிறது. பக்தியைப் புகட்டும் இன்னிசையையும், பகவத் விபூதியை விளக்குகிற மேலாம் மொழிகளையும், உயர்ந்த கருத்துக்களை எடுத்து வழங்கும் சீரிய சொற்பொழிவையும் காதால் கேட்குமிடத்து அது ஆத்ம வளர்ச்சிக்கு ஏதுவான அருள்விருந்து ஆகிறது.

செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்

என்று உணவை இரண்டுவிதமாகப் பிரித்து இவ்விரண்டினுள் உயர்ந்த உணவு எது என்று இனிது புகட்டப்பட்டிருக்கிறது. உடல் பற்று வைத்து உடலின்பத்துக்காக வென்று அருந்தும் உணவு கீழ்த்தரமானதாகிறது. உடலை இறைவனுடைய ஆலயமாகக் கருதி அவனுடைய வழிபாட்டுக்கென்றே உடலைப் பாதுகாத்துவைக்கும் எண்ணம் கொண்டு உணவை ஈசுவரப் பிரசாதமாக அருந்துங்கால் அது உடலுக்கு மட்டுமன்று, மனதுக்கும் நல்ல உணவு ஆகிறது. மேனியின் மீது வாசனைத் திரவியத்தைப் பூசும்பொழுது கீழான இயல்புடைய ஒருவனுக்கு அது இந்திரிய சுகத்தை ஞாபக மூட்டுகிறது. பக்தன் ஒருவன் கடவுளுக்கு அபிஷேகமான வாசனைத் திரவியமென்று கருதி அதைப் பூசும்பொழுது கடவுள் சிந்தனையில் மூழ்கியிருப்பானாகில் ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சியின் மூலம் அவன் உள்ளத்துக்கு உயர்ந்த தெய்வீக உணவை ஊட்டுகிறான். நறுமணம் அல்லது சுகந்தம் சாதாரண மனிதனுக்கு உடல் இன்பத்தை நினைவுக்குக் கொண்டுவருகிறது. ஆனால் பக்தன் ஒருவனுக்கோ அதே நறுமணம் ஆலயத்தில் இறைவனுடைய வழிபாட்டை ஞாப

கத்துக்குக் கொண்டு வருகிறது. எதெல்லாம் உயர்ந்த எண்ணங்களை ஊட்டுகிறதோ, அது சுத்தமான ஆகாரம் ஆகிறது. பஞ்சேந்திரியங்கள் மூலமாக உட்கொள்ளும் ஆகாரத்தைப் பற்றிய மற்றொரு முக்கியமான நியமனம் உண்டு. ராகம், துவேஷம், மோஹம் ஆகிய மூன்றுவித தோஷங்கள் இல்லாது பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் புற வுலகத்தில் இருப்பவைகளை மனது பொருள்படுத்துமானால் அது மனதுக்குத் தூய உணவு ஆகிறது. மனதுக்குத் தூய உணவு வழங்கிக்கொண்டிருப்பவனே மேலோன் ஆகிறான். உடலுக்குத் தூய உணவை வழங்குவது மிக எளிது. கால மெல்லாம் காமநோயில் வருந்தும் ஒருவன் கனிகளையும், கொட்டைகளையும் அருந்திக்கொண்டேயிருக்கலாம். அத்த கைய உணவால் அவன் யோகி ஆக முடியாது. காலமெல் லாம் கிளி ஒன்று காய், கனி, கொட்டை ஆகியவைகளைத் தான் தொடர்ந்து உண்கிறது. ஆயினும் அதற்கு பக்தியோ ஞானமோ வருவதில்லை. அதற்கு நேர்மாறாக, 'ஆவுரித்துத் தின்று உழலும்புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே' என்று சான்றோர் ஒருவர் இயம்பியிருக்கிற பிரகாரம் உடலுக்குக் கொடுக்கும் உணவைவிட உள்ளத்துக்குக் கொடுக்கும் உணவே மேலானது என்பது தேற்றம். ஒரு மனிதனைச் சிறையில் வைத்து அவனுடைய ஆயுட்காலம் முழுதிலும் தூய உணவையே வழங்கி வருவதன் மூலம் அவனைப் பக்தன் ஆக்க முடியாது. ஆனால் சிறைவாசம் கிடந்த மாணிக்கவாசகர், ராம்தாஸர் போன்றவர்கள் தங்கள் உள்ளத்தில் ஊட்டிய தூய எண்ணத்தின் மூலமே பெரிய பக்தர்கள் ஆனார்கள். மனதுக்கு ஊட்டும் எண்ணமும் உணர்வும் மேலானவைகளாக இருக்குமானால் அவை சுத்த

மான ஆகாரம் ஆகின்றன. அத்தகைய எண்ணங்களின் வாயிலாக சாத்விக குணம் பக்தி சாதகனிடத்து ஓங்குகிறது. அந்தக்கரணம் அல்லது மனது சுத்தியடைகிறது. சித்த சுத்தி உண்டான பிறகு ஆத்மசாதனங்கள் எல்லாம் மிக எளிதில் நிறைநிலை அடைகின்றன. சித்தமலம் அறுபட்டுப் போனபிறகு அந்தச் சித்தமிசை குடிகொண்டிருக்கிற பேரன்புப் பேரானந்தப் பொருளைப் பற்றிய ஞாபகம் இடையீடில்லாத நிறை ஞாபகம் ஆகிறது. சுத்தமான ஆகாரத்தைப் பற்றி இவ்விதம் ஸ்ரீ சங்கராச்சாரியார் வியாக்யானம் செய்திருக்கிறார்.

தூய உணவு எது என்பதைப்பற்றி இதுகாறும் இரண்டுவிதமான வியாக்யானங்களை நாம் ஆராய்ச்சி செய்தோம். ஒன்று ஸ்ரீ ராமானுஜாச்சாரியருடைய வியாக்யானத்தைத் தழுவியது. மற்றது ஸ்ரீ சங்கராச்சாரியருடைய வியாக்யானத்தைத் தழுவியது. இவ்விரண்டு கோட்பாடுகளும் ஒன்றோடொன்று முரண்படுபவை போன்று தென்படுகின்றன. ஆனால் உண்மையில் இவ்விரண்டுக்குமிடையில் முரண்பாடு இல்லை. இரண்டு விளக்கங்களிலும் உண்மையிருக்கிறது. இந்த இரண்டு விதமான ஆகார விவேகமும் முற்றிலும் வேண்டப்படுபவைகளே. மனிதனுடைய அமைப்பிலே உடல் உள்ளம் என்னும் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. உள்ளம் உடலைவிட உயர்ந்ததாகவும் நுண்ணியதாகவும் இருக்கிறது. உடலில் உண்டாகிற மாறுதல் உள்ளத்தைத் தாக்குகிறது. உள்ளத்தில் உண்டாகிற மாறுதல் உடலைத் தாக்குகிறது. உடலும் உள்ளமும் ஒன்றோடு ஒன்று சம்பந்தப்பட்டவைகள். பின்பு உள்ளத்தின் ஆதிக்கமே உடலின் ஆதிக்கத்தைவிட வலிவு மிக வாய்ந்தது ஆகிறது. பக்தி சாதகன் உடல் உள்ளம் ஆகிய

இரண்டையும் தன் வசப்படுத்தியாகவேண்டும். ஸ்தூலமாக இருக்கிற சரீரத்தை வசப்படுத்திப்பழகினால் பிறகு சூக்ஷ்மமாக இருக்கிற மனதையும் வசப்படுத்தலாம். எனவே உடல் உள்ளம் ஆகிய இரண்டு பகுதிகளையும் அடக்கியாண்டு பழகுவது முற்றிலும் அவசியமாகிறது. உடலின் நடைமுறையை ஒழுங்குப்படுத்துதற்கு உணவு ஏற்கும் விஷயத்தில் அமைந்துள்ள கட்டுப்பாடுகளை யெல்லாம் சாதனத்தின் ஆரம்பதசையில் முறையாகப் பழகிவரவேண்டும். எத்தகைய உணவு வகைகளை அருந்தலாம், எவைகளை அருந்தலாகாது என்று சமயாச்சாரியர்கள் விதிகளை வகுத்து வைத்திருக்கின்றனர். அவ்விதிகளுக்கு ஒப்ப உணவு ஏற்றுப் பழகுவது அவசியம். ஆனால் இது விஷயத்தில் பக்தன் ஒருவன் வெறி பிடித்தவன் ஆகலாகாது. சாதனத்தில் தான் மேல்நிலைக்கு வருவதும், கீழ்மையில் வீழ்வதும் எல்லாம் உணவைப் பொறுத்துத்தான் இருக்கிறதென்ற பொருளற்ற கொள்கைக்கு அவன் ஆளாகி விடலாகாது. உட்கருத்தை உள்ளபடி அறிந்து கொள்ளாதவர்கள் சமய அனுஷ்டானம் அனைத்தையும் சமையலறைக்குள்ளே அடக்கி வைத்திருக்கிறார்கள். சமையலறையைப் பற்றிய கட்டுமானத்துக்குமேல் சீரிய கோட்பாடு வேறு எதையும் அன்னவர்களுடைய ஜீவிதத்தில் நாம் காணமுடியாது. பாரமார்த்திகப் பெருவாழ்வுக்குரிய மேலாம் கோட்பாடுகள் அத்தகைய ஆகார நியமன வெறியர்களிடத்து ஒரு பொழுதும் தென்படமாட்டா. அந்த மேலாம் கோட்பாடுகள் அவர்களுடைய அறிவுக்கு எட்டுவதுமில்லை; செயலுக்கு வருவதுமில்லை. உணவு அருந்தும் கோட்பாடுதான் அவர்கள் அனுஷ்டிக்கும் சமயமாகிறது. அவர்களுடைய சமயத்தை வேறு ஒரு விதத்தில் விளக்க முயலுங்கால் அது கலப்பற்ற லோகாயதம் ஆகிறது.

ஞானத்தின் அறிகுறியை அத்தகைய உணவு வெறியரிடம் காண முடியாது. பிறரிடமிருந்து உணவு ஏற்கும் விஷயத்தில் ஒதுங்கியிருந்து அவர்கள் உள்ளம் உலர்ந்து போனவர்களாய் இருக்கின்றனர். எனவே மன்னுயிர்களிடத்து அன்பு, அனுதாபம் போன்ற பக்தி சாதனத்தின் அறிகுறிகளையும் அவர்களிடத்துக் காண முடியாது. தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்கின்றவனே நல்ல கர்மயோகி ஆகிறான். ஆனால் உணவு வெறி பிடித்தவன் பிறர் தனக்குக் கீழானவர் என்று எண்ணி தனது அகங்காரத்தை வளர்க்கின்றான். பிறர் பொருட்டுத் தன்னலத்தை அவன் ஒருபொழுதும் விட்டுக் கொடுக்க மாட்டான். எனவே அவன் கர்மயோகி ஆவதில்லை. அத்தகைய மனிதன் கொண்டிருக்கும் இயல்பை ஒரு நூதனமான பயித்தியக்காரத்தனம் எனலாம். உணவு வெறியிலேயே காலமெல்லாம் கட்டுண்டு கிடப்பவர்கள் பிரம்மலோகம் போன்ற மேலுலகங்களுக்குப் போக ஒரு நாளும் தகுதியுடையவர்கள் ஆகமாட்டார்கள். பயித்தியக்காரர் உலகிலேயே உழன்று கிடப்பதற்கு மட்டும் அன்னவர்கள் தகுதியுடையவர் ஆகின்றனர். நல்ல பக்தி சாதகன் ஒருவன் உணவு வெறி என்னும் நோய்க்கு ஆளாகலாகாது. தனது பகுத்தறிவை நன்கு பயன்படுத்தித் தனக்குப் பொருந்தும் சாத்வீக உணவுகளைப் பகவத் பிரசாதமாக அருந்திப் பழகுவது முறை. அதன் மூலம் அவனுடைய அந்தக்கரணம் தெளிவையும் மேன்மையையும் அடைகிறது. அப்படி மனபரிபாகம் உண்டாவதற்குப் பொருந்துகிற நல்லுணவை அருந்தி வருவதும் ஓர் உபாயம் என்பதை அவன் கருத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

உடலின்மீது செலுத்துகிற கவனத்தை விட உள்ளத்தின்மீது செலுத்துகிற கவனம் மிக முக்கியமானது. ஏனென்

ருல் மானுட அமைப்பிலே உடலினும் உயர்ந்தது உள்ளம். இக்கோட்பாடு யாண்டும் ஆத்ம சாதகனுடைய ஞாபகத்தில் இருக்கவேண்டும். மனதில் பல விதமான விகாரங்கள் உண்டாகின்றன. அந்த விகாரங்களுக்கு ஆசாபாசங்கள் என்று பல பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்திரியங்கள் வாயிலாக மனது வெளியுலகில் உள்ள விஷயங்களில் இயல்பாக ஓடிக் கொண்டிருக்கிறது. அந்த இந்திரியங்களை அடக்கிப் பழகவேண்டும். இந்திரியங்களுக்கு வலிவு கொடுக்கிற மனதையும் கட்டிப் பழகவேண்டும். ஆத்ம சாதகனுடைய ஆணைக்குட்பட்டு மனதும், இந்திரியங்களும் அடங்கி ஒடுங்கியிருக்க வேண்டும். ஆத்ம சாதனம் பயிலுகின்றவனுக்கு இப்படி அந்தக்கரண அடக்கமும், புறக்கரண அடக்கமும் முற்றிலும் அவசியமானவைகள். கருவி கரணங்களின் அடக்கமின்றி சாதகன் ஒன்றையும் சாதிக்க முடியாது. கரணங்களை அடக்கிப் பழகியான பிறகு ஜீவபோத விருத்தியைக் கட்டியாளவேண்டும். அதற்கடுத்தபடியாக ஜீவபோதம் நசித்துப் போவதற்கான முயற்சியை எடுத்துக் கொள்ளவேண்டும். தெய்வீக அனுபூதிகள் பலவற்றைப் பெறுவது சாதகன் ஒருவனுக்குச் சாத்தியம். ஆனால் அத்தகைய அனுபூதிகள் விளையாட்டுப் போன்று எளிதில் அமையமாட்டா. சாதன முறைகளில் சாதகன் அரும்பாடு படவேண்டும். இடையறுப் பழக்கத்துக்கும், முயற்சிக்கும் அவன் உட்பட்டவன் ஆகவேண்டும். காந்த ஊசி சர்வ காலமும் வடதிசையிலேயே திரும்பியிருப்பது போன்று மனது யாண்டும் இறைவனையே சிந்தித்துக்கொண்டு இருக்கவேண்டும். மனதுக்கு எத்தகைய பயிற்சி தரவேண்டுமென்பதை சிவபெருமான் தமது ஆனந்தத் தாண்டவத்தின் மூலம் உயிர்கட்கு விளக்குகிருர். ஒரு கரத்தில் அவர் மானைப்

பிடித்து வைத்திருக்கிறார். அந்த மான் அவருடைய முகத்தைப் பார்த்தவண்ணமாய் இருக்கிறது. மனதின் சின்னமாக அந்த மான் அமைந்திருக்கிறது. துள்ளிக் குதித்து இங்கும் அங்கும் ஓடும் தன்மையுடையது மான். அப்படி ஓடாது தன் பிடியில் மனதை அடக்கி வைப்பது முதல் கடமை. அம் மனது இடையறாது இறைவனுடைய முக விலாசத்தைப் பார்த்த வண்ணமாயிருப்பது இரண்டாவது கடமை. பக்தி சாதகன் செய்யக்கிடக்கும் அரிய சாதனம் இதுவேயாம். சாதனத்தின் ஆரம்பதசையில் மனது கட்டில் அடங்காது. ஆனால் பயிற்சியை முறை பிறழாது செய்து கொண்டு வருமளவு அது கட்டில் அடங்குகிறது. அதைக் கட்டியாளும் வல்லமையும் சாதகனுக்கு அதிகரிக்கிறது.

असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥

அஸம்சயம் மஹாபாஹோ
மனோ துர்நிக்ரஹம் சலம் ।
அப்யாஸேன து கௌந்தேய
வைராக்யேண ச க்ருஹ்யதே ॥

'தடந்தோளாய்! மனம் கட்டுப்படாதது, அலையும் தன்மையது என்பதில் ஐயமில்லை. எனினும், குந்தியின் மைந்தா, அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் அதை அடக்கலாம்' என்று கிருஷ்ணபகவான் கீதையில் பகர்ந்துள்ளார்.

பக்தி சாதனவகைகளுள் யாகக்கிரியை என்பது ஒன்று. யாகம் அல்லது வேள்வியின் மூலம் ஆத்ம சாதகன் தன்னைப் பண்படுத்துகிறான். சிற்றுயிராயிருக்கும் ஜீவாத்மா பேருயிராயிருக்கும் தெய்வத்திடத்து செயல்கள் மூலம் தன்னை ஒப்படைப்பது யாகமாகிறது. தேவயக்ஞம், ரிஷியக்ஞம்,

பித்ருயக்ஞம், நரயக்ஞம், பூதயக்ஞம் என்பன பஞ்ச மகா யக்ஞமாம். தெய்வத்தை முறையாக வழுத்தி வருவது தேவயக்ஞம். நமக்கு ரிஷிகள் கொடுத்திருக்கும் சிறந்த நூல்களைப் பக்தி விசுவாசத்துடன் கற்பதும், புகட்டுவதும் ரிஷி யக்ஞமாகும். காலம்சென்ற முன்னோர்களைக் குறித்து நல்லெண்ணம் எண்ணுவதும், உயிர் வாழ்ந்திருக்கும் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதும் பித்ருயக்ஞம் ஆகும். உலகில் வாழ்ந்திருக்கும் மற்ற மனிதர்களுக்கு நானாவிதமான முறைகளில் ஒருவனுடைய வாழ்வு பயன் படுவது நரயக்ஞம் ஆகும். மனிதனுக்குப் பயன்படும் கால்நடைகள் போன்ற ஏனைய உயிர்களை மனிதன் பேணிவரும் செயல் பூதயக்ஞமாகும். இவை யாவையும் மனிதன் நாள்தோறும் அனுஷ்டிக்கக் கடமைப்பட்டிருக்கிறான்.

கட்டுகிற வீடு ஒன்றுக்கு அஸ்திவாரம் முக்கியமானது. அதைப் பலப்படுத்தாவிட்டால் வீடு வலிவற்றதாகும். பக்தி சாதனத்தில் முன்னேற்றம் அடைவதை வீடு கட்டுவதோடு ஒப்பிடலாம். பக்தி என்னும் வீட்டுக்குத் தூய்மை அஸ்திவாரம் ஆகிறது. கற்பாறை போன்று அஸ்திவாரம் உறுதியாயிருந்தால் அதன்மீது கட்டிடத்தை மிக உயரமாக அமைக்கலாம். தூய்மை அக் கற்பாறைக்கு ஒப்பானது. தூய்மையில் உறுதி பெறாத சாதகன் பக்தி சாதனத்துக்கு உதவமாட்டான். தூய்மையில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. புறத்தூய்மை ஒன்று; அகத்தூய்மை மற்றொன்று. இவ்விரண்டினுள் புறத்தூய்மை சுலபமானது. சரீரத்தைச் சுத்தமாய் வைத்திருத்தல், அங்கீகரிக்கப்பட்டுள்ள சுத்த ஆகாரத்தையே அருந்துதல் போன்றவைகள் புறத்தூய்மைக்கு ஏதுக்கள் ஆகின்றன. இவை போன்ற புறத்தூய்மைகளை யார் வேண்டுமானாலும் எளிதில் பழக்கத்

தில் கொண்டு வரலாம். ஆனால் அகத்தூய்மை இல்லாது போனால் புறத்தில் அமைந்துள்ள இத்தகைய அனுஷ்டானங்கள் ஒன்றுக்கும் உதவமாட்டா. அகத்தூய்மைக்குத் தேவையாயிருக்கும் பண்புகளை ஸ்ரீ ராமானுஜாச்சாரியர் பாகுபடுத்திப் பகர்ந்திருக்கிறார். அவைகளுள் சத்தியம் ஒன்று. பக்தன் ஒருவன் யாண்டும் உண்மையே பேசவேண்டும். வாய்மையினின்று வழுவுகிறவன் பக்திக்குப் புறம்பாவான். அடுத்து வருவது ஆர்ஜவம். நேர்மை என்பது அதன்பொருள். அந்த நேர்மையோடு சேர்ந்து ஊக்கமும் ததும்பிக் கொண்டிருக்கவேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவது ஆர்ஜவம் ஆகாது. மனதில் நல்லெண்ணமே குடிகொண்டிருக்க வேண்டும். அந்த நல்லெண்ணத்தையே பொருத்தமான சொற்களால் வெளியிட வேண்டும். பக்தியின் வளர்ச்சிக்கு அத்தகைய நேர்மை முற்றிலும் அவசியமானது. தயை என்பது மூன்றாவது பண்பு. உயிர்களிடத்து அன்பும் இரக்கமும் வைத்திருக்க வேண்டும் என்பது அதன் கருத்து. தனக்கு ஊதியம் ஒன்றையும் ஏற்றுக்கொள்ளாது பிறர்க்கு நலம் செய்வது தயை ஆகும். பிறர்க்கு நலம் செய்வதனால் தனக்குத் துன்பம் நேர்ந்திடினும் அதைப் பொருட்படுத்தலாகாது. அத்துன்பத்தையும் பொறுத்துக்கொண்டே மன்னுயிர்களுக்கு நலம் புரிதல் முற்றிலும் அவசியம். அப்படிச் செய்து பழகுகின்றவனுக்குப் பக்தி ஓங்குகிறது. பக்தனிடத்து இருக்க வேண்டிய நான்காவது பண்பு அஹிம்ஸையாகும். மனம், மொழி, மெய்யால் பிறர்க்குத் தீங்கு செய்யாதிருப்பது அஹிம்ஸை. அனபித்யா (अनभिध्या) என்பது மற்றொரு பண்பு. அபித்யா என்றால் நாட்டங்கொள்ளுதல் அல்லது ஆசைப்படுதல் என்று பொருள்படுகிறது. அதற்கு எதிரி

டையாயிருப்பது அனபித்யா. பக்தி சாதனத்தில் செல்லு கிறவன் பிறர் பொருளை விரும்பலாகாது. பயன்படாத வீணான எண்ணங்களை அவன் எண்ணலாகாது. பிறர் தனக்குச் செய்த தீமைகளையும், குற்றங்களையும் பற்றி மனதில் அவன் சிந்தித்துக் கொண்டிருக்கலாகாது. 'இந்தப் பண்பு வகைகளுள் அஹிம்ஸை என்னும் பண்பைப்பற்றி இன்னும் கொஞ்சம் விரிவாக எடுத்துரைப்பது அவசியமாகிறது. அஹிம்ஸா தர்மத்தை மானுடர் எல்லாரும் அனுஷ்டிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். உயிர்களனைத்துக்கும் தீங்கு செய்யாதிருந்து பழகுதல் அதன் அடிப்படை கோட்பாடு ஆகும். ஒரு சிலர் மக்களுக்கு மட்டும் தீங்கு செய்யாதிருப்பதை அஹிம்ஸை யென்றும், மற்ற விலங்கு இனங்களைக் கொடூரத்தனமாக நடாத்துதலில் குற்றம் ஒன்று மில்லை யென்றும் கருதுகின்றனர். இன்னும் சிலர், இதற்கு நேர்மாறாக அஹிம்ஸை என்னும் சீலத்தைப் பொருள்படுத்துகின்றனர். அத்தகையவர்கள் பூனை, நாய் போன்ற விலங்குகளை நன்றாகப் பாதுகாத்து போஷித்து வருகின்றனர். எறும்புகளுக்கு சர்க்கரை, அரிசி மாவு முதலியவைகளை ஊட்டி வளர்க்கின்றனர். ஆனால் மனிதனை அவர்கள் எத்தனையோ விதங்களில் சித்திரவதை செய்து வருகின்றனர். கொடுத்த சம்பளத்துக்காக வேலையாளிடம் மிகைபட வேலை வாங்குதல், உயர்ந்த வட்டிக்குப் பணம் கொடுத்து வட்டியையும், முதலையும் கடன்காரனைப் படாதபாடுபடுத்தி உறிஞ்சி எடுத்தல் ஆகிய தீங்குகளைச் சிறிதேனும் தயங்காது அன்னவர்கள் விளைவிக்கின்றனர். இன்னும் ஒரு கூட்டத்தார் மூட்டைப் பூச்சிகளைக் கொல்லலாகாது என்று அவைகளிடத்துக் காருண்யம் காட்டுகின்றனர். மனிதனுக்குக் கூலி கொடுத்து மூட்டைப் பூச்சிகள் தங்கியிருக்கும் கட்டில்களில்

படுக்க வைத்து அவனுடைய இரத்தத்தைக் கொண்டு அப்பூச்சிகளைப் போஷிக்கின்றனர். அத்தகைய செயல்களை அவர்கள் ஜீவகாருண்யம் எனக் கருதி வருகின்றனர். சீலத்தையும், ஸதாசாரத்தையும் அனுஷ்டிக்க மனிதன் கடமைப் பட்டிருக்கின்ருன். ஆனல் அவைகளை இவ்விதங்களில் வரம்பு கடந்து அனுஷ்டிக்க ஆரம்பித்தால் அது அருவருப்புக்குரிய செயலாகிறது. நல்லொழுக்கங்கள் பல இருக்கின்றன. அவைகளின் உட்கருத்தை யறிந்து கொள்ளாது செயலளவில் அவைகளை வரம்புக்கு மீறி பழக்கத்தில் கொண்டுவர ஆரம்பிக்குமிடத்து அந்த நல்லொழுக்கங்களே தீய ஒழுக்கங்களாக வடிவெடுக்கின்றன. சில சமயங்களைச் சார்ந்துள்ள துறவியர்களிருக்கின்றனர். அவர்கள் தங்கள் தேகத்தின்மீது இருக்கின்ற பேன் முதலியவைகளைக் கொல்லலாகாது என்னும் கருத்துடன் நீராடுவதையே நிறுத்துகின்றனர். அதனல் அவர்களுடைய உடலில் துர்நாற்றம் எடுக்கிறது. நோய்கள் பல உண்டாவதற்கும் அது காரணமாகிறது. அன்னவர்களுக்குப் பக்கத்தில் செல்லும் ஏனைய மாந்தர் துர்நாற்றத்தால் வாட்டப்படுகின்றனர். மற்றவர்களுக்குத் தாங்கள் எவ்வளவு தூரம் துன்பத்தை விளைவித்து வருகிருர்களென்பதை நீராடாத அத்துறவியர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. பேன், பூச்சி முதலியவைகளைக் காக்க முயலுகின்ற அன்னவர்கள் மானுட வர்க்கத்துக்குப் பெருங்கேடு விளைவிக்கின்றனர். அத்தகைய பொருளற்ற அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று வேதங்கள் புகட்டுவதில்லை. எனவே வேதங்களை முடிவான பிரமாணமாகக் கொண்டுள்ள சமயங்களோ அப்படியெல்லாம் அஹிம்ஸா தர்மம் போன்று தென்படும் துராசாரத்துக்கு இடந்தருவதில்லை.

அஹிம்சை எது என்பதை நாம் சரியாக அறிந்து கொள்ளவேண்டும். அதை அனுஷ்டிக்கின்ற மனிதன் சிறிதேனும் பொருமைப்படுவதில்லை. மற்றவர்களடைகின்ற முன்னேற்றத்தைக் குறித்து அவன் மகிழ்வு எய்துகிறான். திடீரென்று தாற்காலிகமாக உண்டாகின்ற உணர்ச்சியால் தூண்டப்பெற்று ஒரு மனிதன் சத்கர்மம் அல்லது புண்ணிய கர்மம் ஒன்றைச் செய்யலாம். தானத்தையும் அவன் தாராளமாகச் செய்ய முன்வரலாம். குருட்டு நம்பிக்கையால் தூண்டப்பெற்றும், புரோகிதர்கள் புகட்டுகின்ற மறுமைப் பயன்களை எதிர்பார்த்தும் இன்னும் சிலர் பொருளை எடுத்துத் தானமாகக் கொடுக்க முந்துகின்றனர். அத்தகைய ஈகையை அஹிம்ஸை என்று நாம் எண்ணலாகாது. உண்மையாக மானுட வர்க்கத்தின்மீது அன்பு கொண்டிருக்கிறவன் யாரிடத்தும் பொருமை கொள்வதில்லை. பெருமக்கள் எனக் கருதப்படுபவர் உலகிலே பலர் இருக்கின்றனர். அன்னவர்கள் பேரையும் புகழையும் முன்னிட்டு ஒருவர் மீது ஒருவர் பொருமைப்படுவதுண்டு. இன்னும் பொருள் சம்பாத்தியத்தில் ஒருவர் மற்றொருவருக்கு மேலே போய்விட்டால் அதைக் குறித்து அசூயை கொள்வதுமுண்டு. அப்படிச் செய்வது அஹிம்ஸையின் அறிகுறியாகாது. எக்காரணத்தை முன்னிட்டும் உள்ளத்தினுள்ளே அழுக்காறு என்னும் குற்றத்துக்கு இடங் கொடுக்கலாகாது. உள்ளத்தினுள்ளே அக்குறைபாடு குடிகொண்டிருக்குமளவு ஒரு மனிதன் அஹிம்ஸைக்குப் புறம்பானவன் ஆகிறான். அதன் பரிபூரண நிலையை அவன் இன்னும் எட்டவில்லை என்பது வெளியாகிறது. பசு ஒன்று ஊன் அருந்துவதில்லை. புல்லையும், இலைதழைகளையும் புசித்து வாழ்வதாலேயே அந்தப் பசு யோகி ஆய்விட முடியுமா? அஹிம்ஸா தர்மத்திலே நிலைபெற்றிருக்

கிறது என்று அவ்விலங்கைப் பற்றிப் பகர முடியுமா? பொருந்துகிற உணவு ஒன்றை உண்டு, பொருந்தாத உணவு ஒன்றை ஒதுக்கி வைத்துப் பழகுதல் கயவன் ஒருவனுக்கும் சாத்தியமாகிறது. சாகபட்சிணி விலங்குகளுக்கும், அம்மனிதனுக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை. எனவே உண்ணும் உணவில் யோக சாதனம் எல்லாம் அடங்கியிருக் கிறது என்று நாம் ஏமாற்றம் அடையலாகாது. ஈவு, இரக்கமின்றி விதவைகளையும் அநாதைகளையும் மோசம் செய்கின்றவனை உலகில் காணலாம். பணத்தின் பொருட்டு அவன் எத்தகைய கொடிய செயலையும் செய்யத் தயங்குவ தில்லை. அத்தகைய கீழோன் கனிகளையும் கிழங்குகளையுமே தின்று வாழ்பவனுக இருக்கலாம். அவன் உண்ணும் உணவைக் கொண்டு அவனைப் பெரியவன் என்று நாம் மதிக்கலாகாது. துஷ்ட மிருகங்களினும் அவன் பொல் லாதவன் ஆகிருன். பிறர்க்குத் தீங்கு செய்வதைப் பற்றிய எண்ணம் யார் ஒருவனுடைய உள்ளத்தில் சிறிதேனும் எழு கிறதில்லையோ அவனே மேலோன். தனக்கு மிகப் பெரிய சத்ருவாக இருப்பவன் அடைகிற ஆக்கத்தைக் குறித்து எவன் ஒருவன் பெருமகிழ்வு அடைகிருனே அவனே மேலோன். அத்தகைய மேலோனே பக்தி சாதனத்தில் செல்லத் தகுதி வாய்ந்தவன் ஆகிருன். மனத்தூய்மை படைத்துள்ள அம்மனிதனையே யோகி எனப் பகரவேண்டும். மக்கள் எல்லாருக்கும் அத்தகைய மேலோனே குரு ஆகின் ருன். நாள்தோறும் பன்றி மாமிசத்தைப் புசிக்கிற நிலையிலே அத்தகைய மனிதன் இருக்கலாம். திபேத்து நாட்டிலிருக் கின்றவர்களுக்கு உண்ணுதற்கு ஊனைத்தவிர வேறு உணவு கிடையாது. வட துருவத்துக்குப் பக்கத்தில் வாழும் எஸ்கிமோ ஜாதியார்க்குப் பச்சை மீனையும், கரடி மாமிசத்

தையும் தவிர வேறு உணவுப் பொருள் இல்லை. மனிதன் உண்ணும் உணவைப் பார்த்து அவனுடைய பண்பாட்டை நாம் மதிப்புப் போடலாகாது. அவனுடைய மனபரிபாகத்தைக் கொண்டே நாம் அவனை மதிப்பிடவேண்டும். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் ஆகிய குறைபாடுகள் யார் ஒருவனுடைய உள்ளத்தினின்று அறவே அகன்று போயிருக்கின்றனவோ அவனே நல்ல ஆத்ம சாதகன் ஆகின்றான்.

பொருத்தமற்ற எந்த உணவை வேண்டுமானாலும் மனிதன் புசிப்பதற்கு அனுமதி தரப்பட்டு இருப்பதாக இதினின்று முடிவு கட்டலாகாது. உண்ணும் உணவை விட மனதில் அடைந்துள்ள சீர்மையே மிகச் சிறந்தது என்பதை யாண்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். புறத்தில் அமைந்துள்ள அனுஷ்டானங்கள் ஆகிய தூய நல்ல உணவு, நீராடல், தூய உடை அணிந்துகொள்ளுதல் முதலிய செயல்களெல்லாம் மனதைப் பக்குவப்படுத்துவதற்கென்றே அமைந்தவைகளாம். தூய மனம் படைத்தவனாக பக்தன் ஒருவன் திருந்தியமைய வேண்டும். அந்த ஒரு நோக்கத்திலேயே அவன் கண்ணுங்கருத்துமாயிருக்கக் கடமைப்பட்டிருக்கிறான். புறத்தூய்மை தேசத்துக்கு ஒரு வடிவெடுக்கக் கூடியது. எனவே ஆத்ம சாதகன் அதில் அதிகமாகக் கருத்தைச் செலுத்தலாகாது. புறத்திலமைந்துள்ள அனுஷ்டானம் எதுவாயினும் அதன் மூலம் மனத்தூய்மை உண்டாக வேண்டும். மனத்தூய்மை நாட்டுக்கு ஒருவிதமாக அமைவதன்று. எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்துக்கும் பொதுவாயுள்ளது மனத்தூய்மை. அதன் மூலமாகவே தெய்வீகம் இனிது திகழ்கிறது. மனத்தூய்மையை இழந்துவிட்ட மனிதன் மேன்மையனைத்தையும் இழந்தவன் ஆகிறான். இக்

கோட்பாடு ஒவ்வொரு சமுதாயத்துக்கும் பொருந்துகிறது. எந்தச் சமுதாயத்தில் மனத்தூய்மை மறைந்து போகிறதோ அது அழிவு காலத்தை அணுகிவிட்டது எனலாம். புறத்திலமைந்துள்ள நல்ல பழக்க வழக்கங்களாகிய முறையாக நீராடல், சமயச் சின்னங்களை மேனியில் அணிந்துகொள்ளுதல், ஆலயம் சென்று வணங்குதல் ஆகிய செயல்களை எவ்வளவு உறுதிப்பாட்டுடன் செய்தாலும் மனபரிபாகம் அடையப் பெருதவர்களுக்கு அதனுல் நலன் ஒன்றும் நேர்ந்துவிடாது. குறிப்பிட்ட வேளையில்தான் அருந்துவது, தானே சமைத்த உணவை அருந்துவது, அல்லது தன் இனத்தார் சித்தப்படுத்திய உணவை அருந்துவது ஆகிய புறச் சடங்குகளை விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்பவர்களுண்டு. பிறகு அப்பழக்க வழக்கங்களை யந்திரங்கள் போன்று அவர்கள் ஆயுட்காலமெல்லாம் அனுஷ்டித்து வருகின்றனர். அப்படியெல்லாம் செய்தும் மனத்தூய்மை உண்டாகாவிடின் அப்புறச் சடங்குகளால் ஒரு பயனும் இல்லை. உள்ளே இலங்கும் உயிர்த் தத்துவத்தை விளக்குதற்கு உடல் என்னும் கருவி உதவுகிறது. உயிர்த் தத்துவம் தெய்வீகமும், தூய்மையும், ஆழ்ந்த அன்பும், சீரிய ஒழுக்கமும் உடையதாயிருக்க வேண்டும். உள்ளத்தினுள்ளே அத்தகைய பண்பு ஒன்றும் இல்லாது போய்விடுமாயின் உடலைச் சார்ந்துள்ள நல்ல பழக்க வழக்கங்கள் எல்லாம் ஒன்றுக்கும் உதவாதவைகளாம். ஆத்ம சாதகன் ஒருவன் சீரிய கோட்பாடு ஒன்றையாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எச் செயல்கள் மூலமாகவும், பழக்க வழக்கங்கள் மூலமாகவும் அவன் மனபரிபாகம் அடைகின்றுனே அவைகளை யெல்லாம் அவன் உறுதியாகக் கடைப்பிடித்து வரவேண்டும். அப்படியல்லாது மனபரிபாகத்துக்குப் பயன்படாத வெறும் புறச்

சடங்குகளை யெல்லாம் கயமையென விரைவில் ஒதுக்கித் தள்ளி விடவேண்டும்.

பக்தியோகத்தில் முன்னேற்றமடைவதற்கு முகாமையாயிருப்பது மற்றொன்று உண்டு. அது பலம். அது அனவசாதம் என்று பகரப்படுகிறது.

नायमात्मा बलहीनेन लभ्यः
நாயமாத்மா பலஹீனேன லப்ய:

'இந்த ஆத்மன் பலஹீனனால் அடையப்படுவதன்று' என்று உபநிஷதம் இயம்புகிறது. பலஹீனத்தில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. உடல் வலிவற்றிருப்பது ஒரு பகுதி. மனம் தளர்வுற்றிருப்பது மற்றொரு பகுதி. பலஹீனம் உதவாது என்று உபநிஷதம் இயம்புகின்ற பொழுது இந்த இரண்டு விதமான தளர்வுகளும் குறிப்பிடப்படுகின்றன. வலிவு மிகப் படைத்திருப்பவனே நல்ல ஆத்ம சாதகன் ஆகிறான். உறுதியுடன் செயல் புரிகின்றவனே ஆத்ம சாதனத்துக்குத் தகுதியுடையவனாகிறான். மெலிந்தும், சிறுத்தும், தளர்வுற்றும் கிடக்கும் கயவர்கள் என்ன செய்யக் கூடும்? அவர்கள் வெறுமனே பொருத்தி வைக்கப்பட்டிருக்கிற சிறு குடிசில் போன்றவர்கள். பெருங்காற்றும், மழையும் அடிக்கின்றபொழுது அக்குடிசில் சிதறடைந்து தரைமட்டம் ஆய்விடும். யோக சாதனங்கள் பயில முயலுகின்றவர்களுள் பலஹீனர்களுடைய நிலையும் அத்தகையது. யோக சாதனங்களை அனுஷ்டிப்பதன் விளைவாக உடலிலும், உள்ளத்திலும் புதைந்து கிடக்கும் ஆத்ம சக்திகள் வெளிக் கிளம்ப ஆரம்பிக்கும். அந்தச் சக்திகளின் வேகத்தைத் தாங்குதற்கு அன்னவர்களுக்கு இயலாது. அதனால் அவர்கள் சுக்கல் சுக்கலாகச் சிதறடைந்து போவார்கள். ஆதலால்தான்

அருள்பேறு பலஹீனனுக்குக் கிட்டாது என்று இயம்பப் பட்டிருக்கிறது. விருத்தாப்பியம் வந்த பிறகு ஆத்ம சாதனம் லபிக்காது. இளம் வயதே அதற்கேற்ற பருவமாகிறது. இளம் வயதிலும் ஆரோக்கியமும் திட்பமும் வாய்க்கப்பெற்ற வனாக ஆத்ம சாதகன் இருக்கவேண்டும். அத்தகையவ னுக்கே சாதனமானது சாத்தியமாகிறது. எனவே உள்ளத் தின் உறுதியைப் போன்று உடல் திறனும் சாதகன் ஒருவ னுக்கு முற்றிலும் அவசியமாகிறது. பொறி, புலன்களை அடக்க முயலுகின்றபொழுது அதன் எதிர்ச் செயல் வலிவு மிகப்படைத்ததாயிருக்கும். அதாவது ஒருவன் காமத்தை வெல்ல முயன்றால் வெறிக்கு நிகராக அக்காமம் மேலும் தோற்றத்துக்கு வரும். அப்படி அது தோற்றத்துக்கு வரு வதைத்தான் எதிர்ச்செயல் என்று இயம்புகிறோம். உறுதி மிகப் படைத்திருப்பவனே அந்த எதிர்ச் செயலின் வேகத் தைச் சமாளிக்கவும், மீளவும் வல்லவனாகிறான். பக்தன் ஆக விரும்புகின்றவன் தொத்தலாகவோ, தளர்வடைந்தவனா கவோ இருக்கலாகாது. அவன் திட்பம் மிக வாய்க்கப் பெற்றவனாக வேண்டும். ஆரோக்கியத்திற்கு இலக்காகவும் அவன் இலங்கவேண்டும். முற்றிலும் மெலிந்திருப்பவன் ஏதேனும் ஒரு யோக சாதனத்தைச் செய்ய முயன்றால் அவன் தீராத நோய் ஏதேனும் ஒன்றுக்கு ஆளாவான். அன்னவனுக்கு மனத்தடுமாற்றம் வருவதுண்டு. பரஞானத் தைப் பெறுதல் பொருட்டு வேண்டுமென்றே உடலைச் சிறிது சிறிதாகத் தளர்வுறச் செய்பவனுண்டு. ஆகாரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைப்பதாலும் உடற்பயிற்சியை நிறுத்தி வைப்பதாலும் தன்னைச் சீரிய சாதனங்கள் ஏதோ சிலவற்றிற்குத் தகுதியுடையவனாகத் திருத்தியமைத்து வருவ தாக அவன் எண்ணிக் கொள்கின்றான். ஆனால் அத்தகைய

எண்ணமும் செயலும் நல்ல விவேகத்தினின்று உதித்தவைகள் ஆகா. எனவே மாந்தர் தங்களைப் பலஹீனர்களாக ஆக்கிக் கொள்ளுதல் ஆத்ம சாதனத்துக்கு உற்ற உபாயம் ஆகாது.

மனதில் உறுதி சிறிதேனும் இல்லாத ஏழை நெஞ்சினர்கள் இருக்கிறார்கள். ஆத்மாவின் அனுபூதியைப் பெற அத்தகையவர்களுக்கும் இயலாது. பக்தர்கள் ஆக விரும்புகின்றவர்கள் தெளிவும், இனிமையும் நிறைந்த மனமுடையவர்களாக இருக்கவேண்டும். பாரமார்த்திக வாழ்வு வாழ்கின்றவர்கள் எத்தகைய மனம் படைத்தவர்களாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றிய கருத்து ஒன்று மேல்நாட்டவர்க்கிடையில் உண்டு. அவர்கள் கொள்கைப்படி பாரமார்த்திக வாழ்க்கை வாழ விரும்புகின்றவர்கள் முக மலர்ச்சி கொண்டிருக்கலாகாது. முகத்தின்மீது கார்மேகம் போன்ற இருளும், வாட்டமும் படிந்திருக்க வேண்டுமாம். பிணத்தின் தாழ்வாய்க்கட்டை தானாகத் திறந்து கொள்கிறது. கிட்டத்தட்ட அப்போக்கில் கடவுளைச் சார்ந்திருப்பவர்கள் கதியில்லாதவர் போன்று ஏங்கிக் கிடக்கவேண்டுமாம். விசனப்பட்டுக் கொண்டிருப்பதின் விளைவாக முகமே நீண்டு போய் விட்டதாகத் தென்படவேண்டுமாம். இக்கொள்கை வேதாந்தத்துக்குச் சிறிதேனும் ஒவ்வாதது. மெலிந்த மேனியுடன் இருப்பவர்களும், வாட்டத்தால் நீண்டுபோன முகம் படைத்திருப்பவர்களும், நோயாளிகளின் இனத்தைச் சேர்ந்தவர்கள் ஆகிறார்கள். தகுதி வாய்ந்த மருத்துவன் ஒருவனிடம் ஒப்படைத்து வைப்பதற்கு அன்னவர்கள் ஏற்றவர்களாகின்றனர். யோக சாதனத்துக்கு அவர்கள் ஒரு பொழுதும் தகுதியுடையவர் அல்லர். இனிமையும், குதூகலமும் நிறைந்திருக்கிற மனதே சாதனத்தில் உறுதியாக மேல் நோக்கிச் செல்ல

வல்லதாகிறது. உறுதியே வடிவெடுத்திருக்கிற மனது எண்ணிறந்த கஷ்டங்களையும் இடைஞ்சல்களையும் தாண்டி மேல் நோக்கிச் செல்ல வல்லதாகிறது. செயற்கரிய செயல்கள் பலவற்றைச் சாதிக்க மனிதன் கடமைப்பட்டிருக்கிருன். மனிதனுல் சாதிக்கக்கூடிய செயல்களில் மாயப் பிறப்பறுக்கும் செயல் ஒன்றே மிக உன்னதமானதாகிறது. எதற்கும் தளராத வஜ்ரம் போன்ற மனம் படைத்திருக்கின்றவர்களுக்கே மாயை என்னும் வலையைத் தகர்த்து அப்பால் செல்ல இயலும்.

ஈண்டு எச்சரிக்கை ஒன்று எடுத்துக்கொள்ளுதல் அவசியமாகிறது. மிகைபட்ட களியாட்டமும் நகைப்பும் ஆத்ம சாதனத்துக்கு உதவமாட்டா. அடக்க ஒடுக்கத்தோடு கூடிய மகிழ்ச்சியே சாதனத்துக்கு ஏற்றதாகிறது. அத்தகைய மனநிலைக்கு அனுத்தர்ஷம் (अनुद्धर्ष) என்று பெயர். யார் ஒருவன் எப்பொழுதும் நகைப்பிலும் வேடிக்கை விநோதங்களிலும் மூழ்கியிருக்கிருனே அவன் ஆழ்ந்த கருத்து எதையும் எண்ணவோ, ஏற்றுக்கொள்ளவோ தகுதியற்றவன் ஆகிருன். மற்றொரு கேடும் அத்தகைய மனிதனுக்கு உண்டாகிறது. மனதின்கண் உள்ள ஆற்றல்கள் எல்லாம் அவனுக்கு வீண் விரயம் ஆகின்றன. மன உறுதி படையாதிருப்பவனுக்கு இன்புறுதல் என்கின்ற உணர்வும், துன்புறுதல் என்கின்ற உணர்வும் மிக எளிதில் மாறி மாறி அமைகின்றன. ஆழித்துரும்பு மேலும், கீழும் அலைக்கழிக்கப்படுவது போன்று ஏழை நெஞ்சத்தினன் இன்ப துன்பங்களால் அலைக்கழிக்கப்படுகின்ருன். ஆனல் உறுதியான உள்ளம் படைத்தவனே மலைக்கொப்பானவன் ஆகிருன். அது அசைவற்றிருப்பது போன்று வாழ்வில் வாய்க்கும் எத்தகைய நிகழ்ச்சிகளாலும் தளர்வுருதவனுக அவன்

இருக்கிறான். எனவே கட்டில் அடங்காத களியாட்டம், பொருளற்ற முகவாட்டம் ஆகிய ஒன்றோடு ஒன்று ஒவ்வாத இரண்டு விதமான கூறுகளும் ஆத்ம சாதனத்துக்கு உதவ மாட்டா. இவ்விரண்டும் மனதை வீணில் ஊசலாடும்படி செய்கின்றன. நடுநிலையை நோக்கி வருகிற மனது உலகத்தையொட்டிய இன்ப துன்பங்களில் தத்தளிப்பதில்லை. அது படிப்படியாக அமைதியின்கண் நிலைபெறுவதாகிறது. தெளிவும் அமைதியும் வாய்க்கப்பெற்ற நடுநிலையை அடைந்தவனே ஆத்மானுபூதிக்குத் தகுதியுடையவன் ஆகின்றான்.

இதுகாறும் பகரப்பெற்றுள்ள பண்புகள் எல்லாம் மனதைச் சீர்ப்படுத்துவதற்கு உதவுகின்றன. சீர்மையும், நேர்மையும், பண்பும் வாய்க்கப்பெற்ற மனதே பக்தி சாதனத்துக்கு உற்றதாகிறது. அத்தகைய நல்ல மனம் படைத்திருப்பவனுக்குக் கடவுள் பக்தி விரைவில் வந்து வாய்க்கிறது.



# 11. பராபக்தி - தியாகம்

பக்தியின் ஆரம்ப நிலையைப்பற்றி நாம் இதுகாறும் ஆராய்ந்து வந்தோம். என்னென்ன சாதனங்களைச் செய்து வந்தால் அவைகள் சாதகனைப் பக்திக்குத் தகுதியுடையவனுக்கும் என்பதை இதுவரையிலும் விளக்கியுள்ளோம். பராபக்தி அல்லது பேரன்பைப்பற்றி இனி ஆராய்வோம். எடுத்த எடுப்பில் சாதகன் ஒருவனுக்கு பராபக்தி வாய்ப்பதில்லை. அதன் பொருட்டு அவன் தன்னைப் பக்குவப்படுத்துவது முற்றிலும் அவசியமாகிறது. எதை அளவையாக வைத்துக்கொண்டு மனிதன் பராபக்திக்குத் தகுதியுடையவனாகிறான் என்னும் கேள்வி எழலாம். மனது எவ்வளவுக்கெவ்வளவு புனிதமடைந்து வருகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் பராபக்தியின் எல்லையை அணுகுபவன் ஆகிறான். மனதைத் தூய்மைப்படுத்துவதற்கு உதவிய சாதனங்களைத் திரும்பவும் சுருக்கமாக எடுத்து இயம்புவோம். இறைவனுக்கு அமைந்துள்ள திருநாமங்களை இடையறாது ஜபித்து வருவது ஒரு சாதனம். கிரியா விசேஷங்களுடன் பூஜைகள் செய்வது மற்றொரு சாதனம். முறையாக நீராடுவது, நெற்றியில் சின்னங்கள் அணிவது, மேனியில் ருத்ராக்ஷம், துளசி, ஸ்படிகம் ஆகிய மாலைகளை அணிவது ஒரு சாதனம். ஆகம விதிப்படி மூர்த்திகளை யமைத்து ஆலயத்தில் பிரதிஷ்டை பண்ணி அவைகளை ஒழுங்காக ஆராதிப்பது ஒரு சாதனம். புண்ணிய தீர்த்தங்களுக்கும், ஸ்தலங்களுக்கும் பக்தி விசுவாசத்தோடு யாத்திரை போவது ஒரு சாதனம். விழாக்கள் கொண்டாடுவது ஒரு சாதனம். நல்லார் இணக்கம் கொள்ளுவது ஒரு சாதனம். சிரத்தையோடு சாஸ்திர ஆராய்ச்சி செய்வது ஒரு சாதனம். பக்தி மார்க்கத்தில் மேன்மையடைந்துள்ள மேலோர்களின் வரலாறுகளை உள்

ளன்போடு ஆராய்வது ஒரு சாதனம். பகவானுடைய மகிமைகளை ஒருவரோடு ஒருவர் பேசி ரசித்துக்கொண்டிருப்பது ஒரு சாதனம் — இவை யாவும் சித்த சுத்தி அல்லது மனபரிபாகம் அடைதற்கென்றே அமைந்துள்ளவைகளாம். இத்தனை விதமான சாதனங்களுக்கெல்லாம் மேலாக மற்றொரு சாதனமிருக்கிறது. மிக முக்கியமான இந்தச் சாதனத்தை அனுஷ்டிக்காவிட்டால் பராபக்தியைப் பெறுவது யாருக்குமே இயலாது. தியாகம் ஒன்றே ஏனைய சாதனங்கள் எல்லாவற்றிற்கும் மேலானது. தியாகம் என்னும் சொல்லைக் கேட்கின்றபொழுதே பலர் திகிலடையலாம். அவர்கள் அஞ்சுவதை முன்னிட்டு உண்மையை இயம்பாது விட்டுவிடலாகாது. பாரமார்த்திகப் பெருவாழ்வில் முன்னேற்றமடைதல் என்பது தியாகத்தாலன்றிச் சாத்தியப்படாது. வாழ்க்கையில் முன்னேற்றம் அடைவதற்குத் தியாகம் முற்றிலும் இன்றியமையாதது என்பதை இயற்கையே பல்வேறு விதங்களில் விளக்கிக் கொண்டிருக்கிறது. காய் ஒன்று மரத்தில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. மரத்தைப் பற்றிப் பிடித்துக்கொண்டிருந்தாலொழிய அம் மரத்தினின்று அது சத்தை வாங்கமுடியாது. சத்தை வாங்கி அது முதிர்கிறது. முதிர்ந்தபின் அது கனி ஆகிறது. கனிந்தபின் தனக்கு உணவு ஊட்டிய மரத்தை அக் கனி தியாகம் பண்ணியாக வேண்டும். தியாகம் பண்ணவிட்டால் அது உலகுக்கும் உதவாது; புதிய மரங்கள் உண்டாவதற்கு வித்து ஆக வெளியேகாமலும் நின்றுவிடும். தன்னைத் தாங்கி இருந்த மரத்தைத் தியாகம் பண்ணுவதன் வாயிலாகவே கனிக்குப் புதிய பெருவாழ்வு வாய்க்கிறது. தாய் கருத்தரிக்கிறாள். கர்ப்பத்தில் அது சிசுவாக உருவெடுக்கிறது. பிறகு தாயின் வயிற்றை அது தியாகம் பண்ண வேண்டும். அப்படித் தியாகம் பண்ணவிட்டால் தாய், சேய்

ஆகிய இருவருக்கும் ஆபத்து உண்டாகும். புது வாழ்வுக்கு பழைய வாழ்வையும் சூழ்நிலையையும் தியாகம் செய்தாக வேண்டும்.

ஆத்ம சாதனங்களை நான்கு யோகங்களாக ஆன்றோர்கள் பிரித்து வைத்திருக்கிறார்கள். இந்த நான்கு விதமான யோகங்களிலும் தியாகம் வற்புறுத்தப்பட்டிருக்கிறது. வீட்டுக்குள் நுழைவதற்கு வாயிலில் படி இருப்பதுபோன்று பாரமார்த்திகப் பெருவாழ்வினுள் பிரவேசிப்பதற்கு தியாகம் இன்றியமையாத ஒரு படியாக இருக்கிறது. சாதனங்களனைத்துக்கும் நடு நாயகமாக இருப்பது தியாகம். உடல் வாழ்க்கைக்கு ஹிருதயம் முற்றிலும் அவசியமானதாக இருக்கிறது. ஆத்ம சாதனம் என்னும் பண்பாட்டுக்கு அங்ஙனம் தியாகமே ஹிருதயம் போன்று இருக்கிறது. அறநெறியைப் பற்றி நாம் வேண்டியவாறு பேசுகிறோம். ஆத்ம சாதனத்தின் அவசியத்தைப் பற்றியும் ஆழ்ந்து ஆராய்ச்சி பண்ணுகிறோம். இவையாவும் தியாகத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. உலகப் பொருள்களில் பற்று வைத்து மனிதன் வாழ்ந்து வருகிறான். இவ்வுலகிலும் மேலான நிலை ஒன்றுக்கு மனிதன் போக முடியும். அந்த மேலான நிலைக்குப் போவதற்கு இவ்வுலகப் பொருள்களினின்றும் தனது மனதை மனிதன் பிரித்து எடுத்துக் கொள்ளவேண்டும். மனிதனுடைய உடலும் இவ்வுலகிலுள்ள ஏனையவைகளும் ஜடப்பொருள்கள் ஆகின்றன. இந்த ஜடப்பொருள்களோடு கலந்து தானும் ஒரு ஜடப்பொருள் ஆய்விடுவது மனிதனுடைய நிஜ சொரூபமல்ல. மண்ணையும் மண்ணினின்று ஆகியுள்ள பொருள்களையும் நம்பி வாழ்வது மாயம். மண்ணை மனிதன் மிகைபட நம்பி அதில் கட்டுண்டு கிடந்தால் தானும் மண்ணாவது திண்ணம். மனிதன் உண்மையில் ஆத்ம

சொரூபம். அறியாமையினால் தன்னை ஜகத்திலுள்ள ஜடப் பொருள்களோடு சம்பந்தப்படுத்திக் கொண்டிருக்கிறான். ஜட நிலையினின்று தன்னைப் பிரித்து எடுத்துக் கொள்ளுதல் தியாகம். அப்படிப் பிரித்து எடுத்துப் பழகுகின்றபொழுதே அவன் சேதனப்பொருள், அல்லது ஆத்ம சொரூபம், அல்லது அறிவு சொரூபம் ஆகிறான். அந்த மேல் நிலையை அடைதல் பொருட்டு ஜடப்பொருள்களில் கட்டுண்டு கிடக்கின்ற கீழ் நிலையைத் துறப்பது அவசியம்.

கர்மயோகி ஒருவன் தன் இயல்புக்கும், சாதனத்துக்கும் ஒத்துள்ள முறையில் தியாகம் பண்ணுகிறான். தான் ஆற்றுகின்ற கர்மங்களின் பலன் அல்லது வினைப்பயன் தனக்குரியதல்ல என்று அவன் துறக்கின்றான். பேருக்கத்துடன் அவன் பெருவினைகள் பல ஆற்றுகிறான். அவை யாவையும் இறைவனுக்குரிய தொண்டு என்று அவ்வினைப் பயன்களை அவன் துறக்கின்றான். தான் செய்யும் செயல்கள் அனைத்தையும் ஈசனுக்குரிய ஆராதனையாக அவன் எண்ணுகிறான். எனவே தனது கருமத்தில் அவனுக்குப் பற்றுதல் இல்லை. இம்மையிலோ அல்லது மறுமையிலோ தனது வினைப்பயன் தனக்கு இன்பத்தை அளிக்கவேண்டுமென்று அவன் கனவிலும் கருதுவதில்லை. வினையில் பற்றற்று இருப்பதே அவன் புரியும் தியாகம் ஆகிறது. இனி, ராஜயோகி ஒருவனும் இன்னொரு விதத்தில் தியாகம் பண்ணுகிறான். ஜீவாத்மாவைப் பண்படுத்தி அதற்கு மெய்யறிவு புகட்டுவதற்காக இயற்கை முழுதும் அமைந்திருக்கிறதென்று அவன் உணர்கிறான். ஆத்மா வேறு, இயற்கை வேறு என்னும் மெய்யறிவை இயற்கையின் துணையைக் கொண்டே அவன் பெறுகிறான். இயற்கையை விட்டுப் பிரிக்க முடியாத விதத்தில் ஆத்மா அதனோடு பிணைக்கப்பட்டிருக்கிறது.

எனினும் உண்மையில் ஆத்மா இயற்கை சொரூபமல்ல என்பதை அறிந்தாக வேண்டும். பல கல்பகாலம் ஆத்மா தன்னை இயற்கையோடு சம்பந்தப்பட்டதென்று எண்ணிக் கொண்டிருந்த காலையிலும் உண்மையில் அது இயற்கையோடு சம்பந்தப்பட்டதன்று. ஏதோ சிறிது காலத்துக்குத் தன்னுடைய அறியாமையினால் இயற்கையின் சொரூபத்தையும் தன்னுடைய நிஜ சொரூபத்தையும் ஒன்றோடு ஒன்று குழப்பிக்கொண்டு நிலை தடுமாறி இருந்தது. புளியங்காய் பிஞ்சாய் இருக்கும் பொழுது மேல் ஓடும் உள்ளிருக்கும் விதையும் ஒன்றே போல் தோன்றுகின்றன. முதிர்ந்து பழுத்துப் பழமான பிறகு மேல் ஓடு வேறு, சதைப்பற்று வேறு, விதை வேறு இப்படியெல்லாம் பிரிந்து விடுகின்றன. அப்பொழுது மேலோட்டை உடைத்து அப்புறப்படுத்த வேண்டும். யோகாரூடனாக இருக்கும் ராஜயோகிக்கு உடல் மேல் ஓடு போன்றது. அதினின்று விலகிக் கொள்வது அவன் செய்யும் தியாகம். இனி, ஞானயோகி ஒருவன் செய்கின்ற தியாகமே எல்லாவற்றிலும் மிகக் கடினமானது. எடுத்த எடுப்பிலே நாம ரூபத்தோடு புலனாகும் பருப்பொருள்கள் மயமாயிருக்கிற இப்பிரபஞ்சத்தை வெறும் பொய்த்தோற்றமென்று புறக்கணிக்க அவன் கடமைப்பட்டிருக்கிறான். காணுதல், உணருதல், சிந்தித்தல் போன்று தென்படும் பேராற்றல்கள் எல்லாம் ஆத்மாவுக்கு உரியவைகள். ஜடப் பொருளாகிய பிரகிருதிக்கு அத்தகைய ஆற்றல் இல்லை என்பதை அவன் ஓர்ந்து உறுதியாக அறிந்துகொள்ள வேண்டியவனாகிறான். ஞான சாதனத்தைத் துவக்குகின்ற பொழுதே அறிவு அனைத்தையும், அனுபவம் யாவும் ஆத்மாவுக்குரியவை இயற்கைக்கு உரியவையன்று என்னும் தெளிவு அவனுக்கு உண்டாகவேண்டும். இத்தகைய திடச் சித்தத்

தாலும், ஞான விசாரத்தாலும் இயற்கையினிடத்திருந்து அவன் தன்னைப் பிரித்து எடுத்துக் கொள்ளவேண்டும். பட்டுப் பூச்சியைப் பட்டு நூல் மேல் கூடாக அமைந்து பந்த பாசத்தில் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அந்தக் கூட்டை உடைத்துத் தள்ளி விட்டுப் பட்டுப் பூச்சி வெளியே வந்தாக வேண்டும். கடப்பதற்கரிய மாயா சக்தி மனிதனைப் பந்தபாசத்தில் கட்டிப்பிடித்துக் கொண்டிருக்கிறது. ஞான யோகி ஒருவன் தன்னுடைய ஞான வாளால் அந்தப் பந்தங்களை யெல்லாம் வெட்டித் தகர்த்து விட்டுத் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும். இயற்கையையும் அதற்குரிய வல்லமை யனைத்தையும் அவன் உதறித் தள்ளுகிறான். கானல் நீர் தென்பட்டுக் கொண்டிருக்கிற வேளையிலும் அது நீர் அல்ல என்று புறக்கணிக்க வேண்டும். கால, தேச, நிமித்த சொரூபமாகப் பிரபஞ்சம் முழுத் தோற்றத்திலிருக்கின்ற வேளையிலும் இதெல்லாம் மனத்தின் வெறும் கற்பனையென்று அவன் ஒதுக்கி விடவேண்டும். ஆதலால்தான் ஞானயோகத்தில் செல்லுகிறவனுக்கு அமைந்துள்ள தியாகம் மிகவும் கடினமானது.

இனி, பக்தியோகியும் தியாகம் பண்ணக் கடமைப்பட்டிருக்கிறான். ராஜயோகியும், ஞானயோகியும் செய்வது போன்று பக்தியோகி இயற்கையை எதிர்த்துப் போராட வேண்டியதில்லை. இயற்கையை முற்றிலும் அனுசரித்தேயிருப்பதால் பக்தன் செய்கின்ற தியாகம் இயற்கையின் இயல்புக்கு முற்றிலும் ஒத்ததாகிறது. பக்தனுடைய தியாகத்தில் எந்தவிதமான போராட்டத்துக்கும் இடமில்லை. வெறுத்து ஒன்றை விட்டு விடுதல் என்னும் கசப்பு நிறைந்த செயலில் அவன் ஈடுபடுவதில்லை. உலகினின்று தன்னைப் பலவந்தமாகப்பிரித்து எடுத்துக்கொள்ளுதல் என்பதையும்

கின்றனர். "வேந்தே, ஹரியின் மகிமையை என்னென்று இயம்புவேன்! ஆசைகளை யெல்லாம் கடந்தவர்களும், நெஞ்சத்திலுள்ள தளைகளையெல்லாம் அறுத்தெறிந்தவர்களும் பரமனிடத்து அன்புகொண்டிருப்பதையே குறிக்கோளாக வைத்திருக்கின்றனர்." அத்தகைய பரமனுடைய மகிமை தான் என்ன என்ற கேள்வி எழலாம்.

यं सर्वे देवाः नमस्यन्ति मुमुक्षवो ब्रह्मवादिनश्चेति
யம் ஸர்வே தேவாஃ நமஸ்யந்தி
முமுக்ஷவோ ப்ரஹ்மவாதிநஸ்சேதி

"தேவர்களெல்லாம் அவரையே போற்றுகின்றனர். முமுக்ஷுக்களெல்லாம் அவரையே வணங்கி நிற்கின்றனர். பிரம்மஞானிகளும் அவரையே போற்றுகின்றனர்."

பக்தியின் வல்லமை இத்தகையது. பக்தன் தன்னையே முற்றிலும் மறந்துவிடுகின்றான். தனக்குச் சொந்தமாக இவ்வுலகில் ஏதேனும் இருப்பதாக அவன் உணர்வதில்லை. அனைத்தும் அவனுக்குப் பகவத் மயமாய் மாறுகிறது. ஆதலாலே அவையாவும் புனிதம் நிறையப்பெற்றவைகள் ஆகின்றன. இப்பெரு நிலையை எட்டியவன் 'ததீயதா' என்னும் பேறுபெற்றவன் ஆகிறான்.

உலகத்தவர்களுக்கிடையில் உலகத்தை ஒட்டிய அன்பு இருக்கிறது. அன்பு பாராட்டுகிறவன் தனது அன்புக்கு உரியவனுடைய உடைமைகளையெல்லாம் அன்புடனும், ஆதரவுடனும் பாராட்டுகிறான். தனது அன்பனுடைய வஸ்திரத்தின் ஒரு சிறு துண்டையும் அவன் அன்போடு நேசிக்கிறான். அதே முறையில் பக்தன் ஒருவன் இறைவனை நேசிக்கிறான். அத்தகைய பக்தனுக்கு அண்டத்திலுள்ள யாவும் அன்புக்கு உரியவைகளாகின்றன. ஏனென்றால் அவை யாவும் இறைவனுக்கு உரியவைகளாம்.

## 15. பிரேமைபக்தியும் பிரபத்தியும்

சமஷ்டி என்றும் வியஷ்டி என்றும் இரண்டு சொற்களிருக்கின்றன. இவைகளின் உட்கருத்தை அறிந்து கொள்வது அவசியம். பகுத்தெடுத்துள்ள ஒன்றைக் குறிப்பது வியஷ்டி. தொகுத்துள்ள அனைத்தையும் குறிப்பது சமஷ்டி. நமது உடல் முழுவதையும் சமஷ்டி என்று வைத்துக் கொண்டால் அதில் தலை, கை, கால்போன்ற ஏதேனும் ஓர் உறுப்பு வியஷ்டி ஆகிறது. சமுதாயம் முழுதையும் சமஷ்டி என்றால் அதிலுள்ள ஒரு மனிதன் வியஷ்டி ஆகிறான். சமஷ்டியினிடத்து அன்பு வைக்காத மனிதன் வியஷ்டியினிடத்து அன்பு வைக்கமுடியுமா? சர்வேசுவரன் சமஷ்டி. நமக்குக் கண்கூடாகத் தென்படும் பிரபஞ்சமோ வியஷ்டி. சமஷ்டியினிடத்து அன்பு வைத்திருப்பவனே, வியஷ்டியினிடத்து அன்பு வைக்கமுடியும். அகிலாண்டங்கள் என்னும் எண்ணிறந்த வியஷ்டிகளுக்கு சர்வேசுவரன் என்னும் சமஷ்டியின்கண் இடமுண்டு. இங்ஙனம் இவ்விரண்டுக்குமுள்ள தொடர்பை நாம் தெளிவுபட அறிந்துகொள்ளுதல் வேண்டும். தத்துவ ஆராய்ச்சி செய்துள்ள நம் நாட்டுப் பரமஞானிகள் கையாண்டு வந்திருக்கும் முறை ஒன்று உளது. வியஷ்டிகளைப் பற்றிய ஆராய்ச்சியோடு அவர்கள் நின்றுவிடவில்லை. விரைந்து அவர்கள் வியஷ்டிகளை விசாரித்துப் பார்த்துவிட்டு அவைகளுக்கு அடிப்படையாயிருக்கும் பொது நிலைகள் அல்லது சமஷ்டிகளினிடத்துக் கருத்தைச் செலுத்தினர். பிரபஞ்சத்திலுள்ள பொருள்களனைத்துக்கும் முதல் காரணமாயிருக்கும் மூலப்பொருள் எது என்னும் விசாரணையை நம் நாட்டிலுள்ள தத்துவ தர்சனங்களும், சமயங்களும் துருவி ஆராய்ந்து வந்துள்ளன. யாவையும் தன்னகத்து அடக்கிவைத்திருக்கும் பூரணப்

பொருள் யாது என்னும் கேள்வியை ஞானி ஒருவன் கேட்கலானான். உலகனைத்துக்கும் முதலாயிருக்கும் மூலப் பொருள் எது என்று அவன் விசாரித்தான். எப்பொருளை அறிந்துகொண்டால் பிரபஞ்சத்திலுள்ள பொருள்களனைத் தும் அறியப் பெறுவனவாகின்றன என்றும் அவன் ஆராய்ந் தான். மெய்ப்பொருளை அல்லது மூல வஸ்துவை அறியும் விஷயத்தில் ஞானி ஒருவன் எடுத்து வந்துள்ள முயற்சி அத்தகையது. இனி, பக்தன் ஒருவன் தன்போக்கில் அன்புத் துறையிலே செல்லுவானாயினன். எந்தப் பரம புருஷனி டத்துத் தன் அன்பை நாட்டுதலின் மூலம் அண்டங்கள் யாவினிடத்தும் தான் அன்பு செலுத்தியவன் ஆகிறான் என்னும் கேள்வியைப் பக்தன் கிளப்பினான். ராஜயோகி ஒருவன் மற்றொரு முறையிலே தனது முயற்சியைச் செலுத்தினான். சக்திகளனைத்துக்கும் ஆதி சக்தியாயிருப்பது எது என்று அவன் விசாரித்தான். எந்தச் சக்தியை அடக்கி யாண்டால் பிரபஞ்சம் யாவிலும் வெவ்வேறு வடிவங்களிலே வியாபித்துள்ள சக்திகள் யாவும் அடக்கியாளப்படுவனவா கின்றன என அவன் துருவி ஆராய்ந்தான். பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியப் பெருமக்கள் செய்து வந்துள்ள முயற்சிகளெல்லாம் இப்படி ஒரே முறையில்தான் அமைந்தி ருக்கின்றன. எத்துறையிலே புகுந்து பார்த்தாலும் அவர்கள் ஒரே நோக்கத்துடன் ஆராய்ச்சி செய்வாராயினர். தோன்றி யுள்ள அனைத்துக்கும் முதற் காரணமாயிருக்கும் மூலப் பொருள் எது என்பதுவே அவர்கள் உள்ளத்தில் எழுந்த பெரிய கேள்வியாகும். பிரபஞ்சத்தின் அமைப்பை அவர்கள் ஆராய்ந்து பார்த்தார்கள். மனோதத்துவத்தை அவர்கள் துருவித்துருவி பரீக்ஷை செய்து பார்த்தார்கள். அன்புத் துறையிலே அவர்கள் ஆழ்ந்து மூழ்கிப் பார்த்தனர். மெய்ப்

பொருள் விசாரத்திலே மிக நுணுக்கமாக அவர்கள் ஈடுபட்டனர். ஆதிமூலத்தை அல்லது முழுமுதற் பொருளை சென்றடைந்ததே அவர்கள் பெற்றுள்ள வெற்றியாகும். முயற்சிகள் பலதரப்பட்டவைகள். எனினும் அவைகளின் விளைவு ஒன்றேயாம். இதே ஐதிகத்தில்தான் பக்தனும் வந்துள்ளான். எண்ணிறந்த மக்கள் உலகில் தோன்றிக் கொண்டிருக்கின்றனர். ஒருவர் பின் ஒருவராக அவர்களனை வரிடத்தும் அன்பு செலுத்திப் பழக வேண்டுமா என்று அவன் விசாரித்தான். அப்படிச் செய்வதற்குக் காலமும், எல்லையிலடங்காத அகண்டாகாரத்தில் விரிந்து ஓடவேண்டியதாயிருக்கிறது. அப்படிச் செய்துகொண்டு போனலும் அண்டங்கள் யாவிலும் இருக்கின்றவைகளை ஒன்றன் பின் ஒன்ருக நேசித்து ஒரு முடிவுகாண மனிதனுக்கு இயலாது. எனவே இந்த மூலக் கோட்பாட்டினிடத்து பக்தனும் வந்து சேர்ந்து விட்டான். அன்புத் துறையிலே வியஷ்டியாயிருப்பவன் பக்தன். அன்புத் துறையிலே சமஷ்டியாயிருப்பவர் சர்வேசுவரன். ஆதலால் பக்தன் ஒருவன் தனது பக்தியை சமஷ்டியாகிய சர்வேசுவரனிடத்துச் செலுத்திவிட்டால் தான் அனைத்தையும் நேசித்தவன் ஆகிருன். இனி, உலகில் எண்ணிறந்த ஜீவர்கள் இருக்கிருர்கள். அவர்களில் பலர் பந்த பாசங்களினின்று முக்தி அடைந்தவர்கள். எண்ணிக்கையிலடங்காத பலர் பந்த பாசங்களில் கட்டுண்டு கிடக்கும் பத்தாத்மாக்கள். அவர்களில் இன்னும் பலர் முமுக்ஷுக்கள் அல்லது முக்தியை நாடுபவர்களாக உளர். இத்தனை விதமான ஜீவர்களும் எடுத்துக்கொள்ளுகிற முயற்சி முடிவில் ஒன்றுபட்டதாகிறது. அறிந்தோ அறியாமலோ அவர்கள் எல்லாரும் மெய்ப்பொருளாகிய கடவுளை அடைதற் பொருட்டே முயன்று வருகின்றனர்.

இப்பேருண்மையை அறிந்து கொண்டால் இறைவனிடத்து பக்தி செலுத்துதலும் அவ் இறைவனோடு அடங்கியுள்ள உயிர்களனைத்தையும் பரந்த பேரன்போடு நேசித்தலும் சாத்தியமாகிறது.

பரமாத்மாவே சமஷ்டி. இப்பிரபஞ்சமோ எண்ணிறந்த நாம ரூபங்களுடன் அவரிடத்திலிருந்து தோற்றத்துக்கு வந்துள்ள வியஷ்டி. சமஷ்டியினிடத்து பக்தி வைப்பதன் மூலம் வியஷ்டியினிடத்தும் நாம் பக்தி வைக்கிறோம். இதை வேறொரு முறையில் சொல்லுமிடத்து இறைவனிடத்து அன்பு வைக்கும் பக்தன் உயிர்களனைத்திடத்தும் அன்பு வைக்கிறான். உலகை நேசிக்கத் தகுதி வாய்ந்தவன் யார்? கடவுளிடத்துப் பக்தி வைத்திருப்பவனே உலகத்தை உள்ளன்போடு நேசிக்கிறான். கடவுளுக்குத் தொண்டு செய்கின்றவனே ஆருயிர்களுக்கும் உள்ளன்போடு தொண்டுபுரியத் தகுதியுடையவன் ஆகிறான். பக்தன் ஒருவனே நல்ல சேவை செய்ய வல்லவனாகிறான். முதலில் கடவுளிடத்து அன்பு செலுத்திப் பழகினால் உயிர்களிடத்து அன்பு செலுத்துதல் எளிதாகிறது. கடவுளுக்குக் கைங்கரியம் செய்து பழகினால் அவருடைய குழந்தைகளுக்குக் கைங்கரியம் செய்வது எளிதாகிறது. அப்படிச் சர்வேசுவரன் மூலமாகவல்லாது, வேறு எந்த விதத்திலும் உலகுக்குப் பணிவிடை செய்ய வல்லவர் ஆகமாட்டோம். இறைவனைப் புறக்கணித்துப் பணிவிடை செய்ய முயலுவதெல்லாம் வெறும் வேடிக்கை விநோதமாகப் போய்விடும். அல்லது ஆதரவற்ற பாசாங்காகப் போகலாம். "சராசரங்களனைத்தும் சர்வேசுவரனுக்கே உரியவைகளாம். அந்தச் சர்வேசுவரன் எனது அன்புக்கு இலக்காக இருக்கும் நாயகன். அவர் என்னை நேசிக்கிறார். நான் அவரை நேசிக்கிறேன்." இங்ஙனம் பக்தன் பகர்கிறான்.

பக்தனுடைய காட்சிக்கு இலக்காகும் பிரபஞ்சப் பொருள் களனைத்தும் புனிதம் நிறைந்தவைகளாம். பொருள்களெல் லாம் தான் நேசிக்கும் பரமாத்மாவுக்கே உரியவைகளாதலால் அவைகளிடத்துப் புனிதத்தைத் தவிர வேறு எதை பக்தன் ஒருவன் காண முடியும்? உயிர்களனைத்தும் சர்வேசுவர னுடைய குழந்தைகள். எண்ணிறந்த அத்தனை தேகங்களி னுடைய தொகை அவருடைய விராட் சரீரம். பார்க்குமிட மெங்கும் அவருடைய விசுவரூபமே அத்தனை விதமான வடி வங்களில் இலங்குகிறது. இவ்வுண்மையை அறிந்துகொண் டான பிறகு எவ்வுயிரை அவருக்குப் புறம்பானதென்று கருதி அதற்குத் தீங்கு செய்ய முடியும்? எல்லாம் அவருடைய சொரூபம் என்று தெரிந்துகொண்டான பிறகு யாரை நாம் நேசிக்காது இருக்க முடியும்? பகவானிடத்து பக்தி பெருகு மிடத்து அதனுடைய தெள்ளிய விளைவாகப் பிரபஞ்சம் முழுதிலுமுள்ள ஒவ்வொரு உயிரையும் நேசித்தல் தானாக வந்தமைகிறது. பகவானுடைய சாந்நித்தியத்தை நாம் அணுகுகின்றபொழுது அதன் விளைவும் தானாகவே நம் மிடத்து அமைகிறது. அனைத்தும் இறைவனுடைய சொரூபத்தில் அடங்கியிருக்கின்றன என்பதை நாம் தெளிவு பட உணருகிறோம். பக்தி பெருகுகின்றவளவு பேரானந்த மும் தானாகவே ஊற்றெடுக்கிறது. அந்தப் பக்தியின் பயனாக ஞானக்காட்சியும் சேர்ந்தே பக்தனுக்கு வந்தமைகிறது. பார்க்கின்ற பொருள்களிடத்தெல்லாம் பகவானுடைய சாந் நித்தியத்தையே பார்க்கும் பெருவாய்ப்பு அவனுக்குக் கிட்டு கிறது. அப் பிரேமை பக்தியைப் பெறும் வாய்ப்பு நமக்கு அமையுங்கால் அது தங்குத் தடையற்ற பேர் ஊற்றாக நம் உள்ளத்தினின்று பொங்க ஆரம்பிக்கிறது. பிறகு அது படிப்படியாக வளர்ந்து விரிவடைகிறதே யொழிய

குன்றிப்போவதென்பது அதனிடத்தில்லை. உலகப்பொருள் களிடத்து சிறிதளவாவது வேற்றுமை காணும் இயல்பு மக்களிடத்துப் பொதுவாயிருக்கிறது. ஆனால் பிரேமை பக்தி ஓங்கப்பெறுகிறவர்களுக்கு அந்த வேற்றுமைகளெல்லாம் அறவே அகன்று போகின்றன. பிறகு மனிதனை வெறும் மனிதனைக் காணும் காட்சி எஞ்சியிருப்பதில்லை. மானுட வடிவத்தில் ஈசனே இலங்கிக்கொண்டிருக்கிறார் என்பது தெளிவுபட விளங்குகிறது. மேலும் விலங்கு ஒன்று அந்தப் பக்தனுக்கு வெறும் விலங்காகத் தோன்றுவதில்லை. கடவுளே அவ்வடிவெடுத்து இலங்குகின்றார் என்னும் அனுபவம் உறுதியாகிறது. விலங்குகளுள் மிகக் கொடியதாகிய புலியின் காட்சி அப்பரம பக்தனுக்கு மாறியமைகிறது. சாக்ஷாத் சர்வேசுவரனே புலியின் வடிவெடுத்து விளையாடுகிறார் என்பதை அவன் காண்கிறான். எல்லையிலடங்காத பிரேமை பக்தி ஓங்கப் பெற்றுள்ள பக்தன் தனது பேரியல்புக்கொத்த முறையில் ஆராதனை செய்கிறான். காட்சிக்கு வரும் பொருள் ஒவ்வொன்றும் கடவுள் சொரூபமெனக்கருதி அவன் வழுத்துகிறான். வாழ்ந்திருக்கும் ஒவ்வோர் உயிரும் கடவுளின் வடிவம் எனக்கண்டு அவன் போற்றுகிறான். ஒவ்வொரு நரனும் அவனுக்கு நாராயணனைகத் தோன்றுகிறான். ஒவ்வொரு ஜீவனும் அவன் காட்சியில் சிவம் ஆகிறான். இத்தகைய அனுபவமே அவன் செய்யும் பேராராதனையாகிறது.

एवं सर्वेषु भूतेषु भक्तिरव्यभिचारिणी ।
कर्तव्या पण्डितैर्ज्ञात्वा सर्वभूतमयं हरिम् ॥

ஏவம் ஸர்வேஷு பூதேஷு பக்திரவ்யபிசாரிணீ
கர்தவ்யா பண்டிதைர்ஞாத்வா ஸர்வபூதமயம் ஹரிம்

"பிரபுவாகிய ஹரி ஒருவரே எல்லா உயிர்களிடத்தும் இலங்குகிருர் என்பதை அறிகின்ற பேரறிஞன் அத்தனைவித உயிர்கள் மயமாக ஹரி ஒருவரே இலங்குகிருரென்று அவரிடத்து மாருத பக்தி செலுத்துகிருன்." ஆற்றுப்பெருக்கு நிலமிசை ஓடிக்கொண்டிருக்கும்பொழுது, மேலும் மேலும் விரிவடைவதுபோன்று பக்திப் பெருக்கும் பகவானை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் பொழுது விரிவடைகிறது. எங்கும் பரவுகின்ற நீர்ஆனது அனைத்திடத்தும் ஊடுருவுவதுபோன்று பக்திஅனைத்தையும் தனக்குச் சொந்தமாக்குகிறது. அதற்கும் மேலாகத் தன்னைத் தெய்வத்துக்குச் சொந்தமாக்கும் பேருணர்வு பக்தனிடத்து உருவெடுக்கிறது. இயற்கையிலே நிகழ்கிறநிகழ்ச்சி எதுவும் தனக்குப் பிரதிகூலமானதாக அந்த பக்தன் உணர்வதில்லை. (अप्रातिकूल्य-அப்ராதிகூல்ய) அப்பெருநிலையை எட்டிய பக்தன் பிறகு என்ன பகர்கிருன் என்பதை நாம் ஆராயவேண்டும். துன்பம் வந்து வாய்த்தகாலை, "துன்பமே உனக்கு நல்வரவு" என்கின்ருன் பக்தன். துயரம் வந்து தனக்கு வாய்த்தகாலை, "துயரமே நீயும் எனது அன்புக்குரிய சர்வேசுவரனிடத்திருந்தே வந்துள்ளாய். ஆதலால் உனக்கு நல்வரவு" என்கின்ருன் அவன். நச்சுப் பாம்பு ஒன்று அவன் முன் தோன்றுமிடத்து, "நாதன் தலைமீதுள்ள நச்சுப் பாம்பே உனக்கு நல்வரவு" என்கிருன் பக்தன். உயிரைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போகும் கூற்றுவன் தோன்றுமிடத்து பக்தன் அம்மரணத்தைப் புன்னகை பூத்தவளுக வரவேற்கிருன். "இவை யாவும் என்னை நோக்கி வருவதால் நான் பாக்கியவாளுகிறேன். இவை யாவுக்கும் நல்வரவு" என்று அவன் இயம்புகிருன். இறைவனிடத்துத் தன்னை முற்றிலும் ஒப்படைத்துவிட்டதளுலேயே அவனுக்கு இத்தகைய மனப்பான்மை வந்தமைகிறது. யாரிடத்து

பக்தி பெருக்கெடுக்கிறதோ அவனே தன்னை முற்றிலும் இறைவனிடத்து ஒப்படைக்க வல்லவனாகிறான். எல்லாம் இறைவனுக்கே சொந்தம் என்னும் உணர்விலே அவன் உறுதிபெற்றிருப்பதால் தன்னை வந்தடையும் இன்பதுன்பங்களுக்கிடையில் அவன் எந்தவிதமான வேற்றுமையையும் காண்பதில்லை. துன்பத்தையோ, துயரத்தையோ முன்னிட்டு முறையிடுதலென்பது அவனுடைய இயல்பில் இல்லை. மனிதன் பெறுகிற பேறுகளனைத்திலும் பிரபத்தி என்னும் பேறே சாலச்சிறந்தது. நதி ஒன்று தங்குத்தடையின்றிக் கடலினிடம் தன்னைக் கொடுப்பது போன்று பக்தன் தன்னை அன்புக் கடவுளிடம் கொடுக்கிறான். நதியும் நீர்மயம். கடலும் நீர்மயம். பெருக்கெடுத்துவரும் நீரானது நிலைபேறுடைய நீரினுள் கலந்துகொள்கிறது. பிரேமைபக்தி படைத்திருப்பவன் அன்புமயம். பரம்பொருளும் அன்பு மயம். அன்பு வடிவினனாகிய பக்தன் எல்லை மருவா அன்பு ஆகிய கடவுளிடத்துத் தன்னைக் கொடுத்து இன்புறுகிறான். அதற்குத்தான் பிரபத்தி என்று பெயர். அடைக்கலம், தஞ்சம், சரணாகதி ஆகிய நிலைகளின் உச்சமே பிரபத்தி என்னும் பெயர் பெற்றுள்ளது. வாழ்க்கையிலே செயற்கரிய செயல்கள் பல இருக்கின்றன. பராக்கிரமமே வடிவெடுத்துள்ள செயல்கள் பல இருக்கின்றன. தெய்வீக மகிமைகள் பல வாய்க்கப்பெற்ற பெரும் செயல்கள் எண்ணிக்கையில் அடங்காதவைகளிருக்கின்றன. அச்செயல்களனைத்துக்கும் உச்ச நிலையிலிருப்பது பிரபத்தி என்னும் செயல்.

மானுடர்களில் பெரும்பான்மையோர்க்கு தாங்கள் எடுத்துள்ள மேனியே முதன்மை வகித்து வருகிறது. அண்டம் ஒன்றினுள் எல்லாம் அடங்கியிருப்பது போன்று உடல் பற்று வைத்திருப்பவர்களுக்கு வாழ்க்கையின் குறிக்

கோளத்தும் உடலின் கண்ணே அமைந்திருக்கிறது. யாக்கையின் மூலமாகப் பெறுகிற இன்பத்துக்கு நிகரான இன்பம் வேறு எதுவும் அன்னவர்க்கு இல்லை. அசுரனைப் பற்றி நாம் வேண்டியவாறு கேட்டிருக்கிறோம். அத்தகைய அசுரன் வேறு எங்குமில்லை. காயத்தையும், காயத்துக்குரிய யாவையும் போற்றுகின்ற பான்மையே அசுரன் என்னும் பெயர் எடுத்துள்ளது. அத்தகைய அசுரன் நம் உள்ளத்தினுள் புகுந்திருக்கிறான். அரும்பெரும் விஷயங்களைப் பற்றி நாம் ஆழ்ந்து பேசலாம். தத்துவ ஆராய்ச்சியிலே நாம் மிக உயர்ந்த நிலைக்கு மேல் நோக்கிப் போகலாம். அதற்கெல்லாம் இடையில் நாம் கழுகு போன்றவர்களாக நடந்துகொள்கிறோம். கழுகு வானத்தில் மிக உயரப் பறக்கிறதெனினும் கீழே எங்கே செத்த பிணம் கிடக்கிறது என்ற நாட்டம் கொண்டதாக இருக்கிறது. தத்துவ ஆராய்ச்சியில் நாம் உயர்வுற மேல்நோக்கிப் போகிறோம். ஆயினும் வாழ்க்கையில் நாம் கொண்டுள்ள நாட்டம் மண்ணின்மீது நடமாடித் திரிகிற இனிச் சாகும் பிணத்தினிடத்தேயாம். நாம் அபிமானித்து வளர்த்துவரும் யாக்கை பிணமாகக் கூடியதென்பதை மறந்து விடுகிறோம். உயிர் வகைகள் அவ்வவைகளுக்குத் தேவையாயிருக்கும் உணவு வகைகளை இயற்கையினின்று பிரித்தெடுக்கின்றன. நமக்குத் தேவையாயிருக்கும் உணவுப் பொருள்களைச் சேகரிப்பதிலும் நல்லுணவு சமைத்து உண்பதிலும் நாம் பெருமகிழ்வடைகிறோம். அதே மகிழ்ச்சி உணவைப் பெறுதலின் மூலம் மற்ற உயிர்களுக்கும் உண்டாகிறது. புலி ஒன்றுக்கு மானுட உடலை உணவாக்குதலில் உண்டாகும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஆனல் மனிதன் என்ன செய்கிறான்? தன் தேகத்தைப் புலியின் வாயினின்று காப்பாற்றிக்கொள்ள அவன் முயலுகிறான். அவன் ஏன்

அப்படிச் செய்யவேண்டும்? உவகையுடன் தன் உடலை அவன் ஏன் புலிக்குக் கொடுக்கலாகாது? கனிந்த கனியை மரம் தானாக உதிர்த்துவிடுவது போன்று அன்பில் கனிந்த மனிதன் தன் உடலை உவகையுடன் மன்னுயிர்க்கு ஏன் வழங்கலாகாது? புலி ஒன்று மானுட உடலைப் பெற்றுப் பெருமகிழ்ச்சியடைகிறது. தன்னுடலையே பிறர் நலத்துக்காக வழங்குவது சுயநலத்தியாகத்துக்கு நல்ல எடுத்துக் காட்டு ஆகாதா? தமது திருமேனியைப் புலியின் பசியைப் போக்குதற் பொருட்டு மகிழ்வுடன் கொடுத்துவிட்ட பெருமக்கள் நம் நாட்டில் தோன்றியிருந்திருக்கின்றனர். தான் தனது என்பனவற்றைத் தெய்வத்துக்குப் படைத்துவிடுவதை ஆராதனை என்கின்றோம். புலி வடிவெடுத்து வந்துள்ள தெய்வத்துக்கு ஆராதனை செய்யும் முறையில் தனது யாக்கையை வழங்குபவன் நல்ல தியாக மூர்த்தியாகிறான். மற்ற உயிரைவிடத் தன்னுயிர் பெரியதென்று கருதுவது சுயநலம். மன்னுயிரின் பொருட்டுத் தன்னுயிரை மகிழ்வுடன் வழங்குவது தியாகம். கடவுள் ஒருவரே எல்லா உயிர்களாகவும் இலங்குகிறார். ஆதலால் பக்தனுடைய காட்சியில் பேருயிர், சிற்றுயிர் என்னும் வேற்றுமையில்லை. தன் உடல், பொருள், ஆவியெல்லாம் இறைவனிடம் ஒப்படைப்பது வாழ்க்கையின் குறிக்கோள். பரலோகத்தில் எங்கேயோ வீற்றிருக்கும் பரமனுக்கு அவன் வேண்டும்பொழுது நமது உடல் பொருள் ஆவியைக் கொடுக்க நாம் ஆயத்தமாயிருக்கிறோம் என்று பகர்வதெல்லாம் வெறும் வாய்ப்பேச்சு. இங்கு நாம் வசித்து வரும் மண்ணுலகிலேயே பரம்பொருள் எண்ணிறந்த வடிவெடுத்து விளையாடுகிறார். தான் தனது என்னும் சுயநலத்தை அறவே துறந்திருப்பவன் தன் தேகத்தை எந்த நொடிப்பொழுதிலும் பரமனுடைய சேவைக்குக் கொடுக்க முந்துகிறான்.

பிரபத்தியை அடைந்துள்ள பக்தன் தன்னைப் புலி பிடிக்க வருகிறதென்று பயப்படுவதில்லை. தன்னுடையது என்று எண்ணிக் கொண்டிருந்த தேகத்தைப் பகவானுக்கு நைவேத்தியமாகப் படைத்து விட்டதாகவே கருதி மகிழ்வடைகிறான். மன பரிபாகத்தில் அத்தகைய பெருநிலையை அடைந்தவனே உண்மையில் சுயநலத்தியாகம் செய்தவனாகிறான். அது பெறுதற்கரிய மகோன்னத நிலை என்பது தேற்றம். பக்தி நெறியிலே செல்லுகின்றவன் அடையும் முடிவான பெருநிலை அது. இம்மண்ணுலகிலே வாழ்ந்திருந்தவர்களுள் யாரோ சிலர்தான் அந்த உச்ச நிலையை இதுகாறும் எட்டியவர் ஆயினர். அதை அடையப் பெறாதவன் தன் பொருட்டு அச்சிறந்த லக்ஷியத்தைக் கீழ் நிலைக்கு இழுத்து வரலாகாது. எந்த க்ஷணத்தில் வேண்டுமானாலும் தான் தனது என்பனவற்றையெல்லாம் தான் வணங்கும் தெய்வத்துக்கு முழுமனதோடு கொடுத்துவிட ஆயத்தமாக இல்லாதவன் பக்தியின் பரிபூரண நிலையை அடையப்பெற்றவனாகான். சற்று ஏற்றத்தாழ்வாகவெனினும் திருப்திகரமாகவே நமது தேகங்களைப் பாதுகாத்துவைத்துக் கொள்ள நாம் வல்லவர்களாக இருக்கிறோம். அவைகளைப் பாதுகாக்கும் முறையில் அலக்ஷியமாய் இருக்கிறவர்களைக் காண முடியாது. பாங்குடன் மக்களால் பாதுகாக்கப்பெறும் தேகங்களும், நெடுநாட்களுக்கோ, அல்லது குறுகிய நாட்களுக்கோ நிலவுலகில் வாழ்ந்திருக்கின்றன. அப்படி உடலைப் பேணும் விஷயத்தில் நாம் எடுத்துக் கொள்ளும் முயற்சிக்கு முடிவில்லை. அங்ஙனம் அல்லும் பகலும் அரும்பாடுபட்டதினால் ஆன பயன்தான் என்ன? எப்படியும் நமது தேகங்கள் அழிந்துபட்டுப் போகத்தான் வேண்டும். அவைகள் நிலைபேறு உடையவைகளாக இந்நிலவுலகில் இருக்க முடியாது.

நிலையற்ற தேகங்களைப் பிறர் சேவையின்பொருட்டு மன முவந்து கொடுக்கின்றவர்களே பாக்கியவான்கள்.

சான்றோன் ஒருவனுடைய செயலிலுள்ள சிறப்பு யாது என்று ஆராய்வோம். தனக்கு வந்து வாய்க்கும் செல்வத்தைச் சான்றோன் தன்னுடையது என்று பிடித்து வைத்துக் கொள்வதில்லை. பிறர் பணிவிடையில் அவன் அதைச் செல வழித்து வருகிறான். உயிர் வாழ்க்கையைத் தன்னுடைய தென்று அவன் கருதி வைத்திருப்பதில்லை. அது இருக்கும் வரையில் பிறர் பணிவிடையிலேயே அவன் அதைப் பயன் படுத்தி வருகிறான். இவ்வையகத்திலே ஒரு நிகழ்ச்சி நேருவது திண்ணம். அதுதான் மரணம். ஆதலால் இந்த மானுட சரீரம் ஒரு நல்ல லக்ஷியத்தில் ஈடுபட்டு அழிந்து போவது மேலானது. கெட்ட காரியத்தில் ஈடுபட்டு அது அழிவது சான்றோனுக்குப் பொருந்தாது. ஆயுளைப் பெருக்க நாம் அனைவரும் ஆசைப்படுகிறோம். ஐம்பது ஆண்டு வாழ்ந் திருப்பதைப் பற்றாக்குறை என நாம் பொருள்படுத்துகிறோம். நூறாண்டு வாழ்ந்திருப்பதை நிறைவாழ்வு என நாம் எண்ணு கிறோம். காலகதியில் ஐம்பது ஆண்டுக்கும் நூறாண்டுக்கும் இடையில் என்ன வித்தியாசமிருக்கிறது! கற்பகாலம் கணப் பொழுது போன்று உருண்டோடி விடுவதே காலகதியின் போக்கு. ஐம்பூதங்களின் சேர்க்கையால் உண்டாகிற உருவங்களெல்லாம் நாளடைவில் பழையபடி ஐம்பூதங் களாகப் பிரிந்துபோவதுதான் இயற்கையின் நியதி. வடிவங்களாகத் தோன்றியிருப்பவைகளெல்லாம் அவ்வடிவ நாசம் அல்லது மரணம் என்னும் குறியை நாடிப்போய்க் கொண்டிருக்கின்றன. ஆதலால் மானுட சரீரத்துக்கு அழிவு காலம் என்பது வந்தே தீரும். அதை யாரும் தடுத்துவிட முடியாது. உலகம் போற்றுதற்கேற்ற பெருமக்கள் ஈண்டு பிறப்பெடுத்தனர். ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன், புத்தர்

பெம்மான், ஏசுநாதர், மகம்மது நபி ஆகிய பெருமக்கள் இப்பூவுலகுக்குள் தோன்றி வந்தவர்கள். புகழுடம்பிலே அவர்கள் இன்று இருந்து வருகிறார்களெனினும் அன்னவர்களுடைய பூத உடலங்களெல்லாம் அழிந்துபட்டுப்போயின. இத்தொல்லுலகுக்கு நன்னெறி காட்ட அவதரித்த ஆசாரியர்களும், மகாபுருஷர்களும் மரணத்துக்கு ஆளாயினர். "இந்நிலவுலக வாழ்வு நிலையற்றது. ஈண்டு தோன்றியுள்ள யாவும் துகள் துகளாகப் பிரிவடைந்து வீழ்கின்றன. இத்தகைய நெருக்கடியிலே நமக்கு வாய்த்திருக்கும் காலத்தை மிக உயர்ந்த முறையிலே நாம் பயன்படுத்த வேண்டும்" என்று பக்தன் பகருகிறான். வாழ்க்கையினால் ஆகும் பெரும் பயன்தான் என்ன? உயிர்களனைத்தின் நலத்தின் பொருட்டுத் தன்னைப் பயன்படுத்துவதற்கு மிக்கான குறிக்கோள் வாழ்க்கையில் இல்லை. உண்மையில் ஆத்மசொரூபமாகிய மனிதன் உடல் சொரூபியல்ல. ஆதலால் தன்னை உடல் சொரூபம் என்று எண்ணும் எண்ணமே மிக இழிவானது. இவ்வுலகில் தென்படும் சுயநலம் என்னும் கேடு தன்னை உடல் சொரூபம் என்று எண்ணும் எண்ணத்திலிருந்து உதித்ததாம். நாம் படைத்திருக்கிற உடலம்தான் நம்முடைய நிஜசொரூபம் என்று நாம் எண்ணியிருப்பது பெரும் மயக்கம். வெவ்வேறு முறைகளைக் கையாண்டு இவ்வுடலத்தை நாம் எப்படியாவது பாதுகாத்து வைத்திருக்க வேண்டும் என்று கருதுவதும் மயக்கம். இந்த உடலத்துக்கு வேண்டியிருக்கிற இன்பங்களை யெல்லாம் எப்படியாவது அதற்கு நல்க வேண்டுமென்று எண்ணுகிற எண்ணமும் மயக்கத்தினின்று வருவதாம்.

தான் உடல் அல்ல, ஆத்மா என்பதை ஒருவன் அறிந்து கொள்வானாகில் பிறகு சண்டை சச்சரவுக்கோ, போராட்டத்துக்கோ இடமில்லை. தேகாத்ம புத்தி அல்லது உடல்

உணர்வு அழியும்பொழுது சுயநலமும் அத்துடன் அழிந்து பட்டுப் போகிறது. ஆகையினால்தான் இம்மண்ணுலகில் வாழ்ந்திருக்கும்பொழுதே நாம் மாண்டுபோனவர்கள் போன்று ஆகவேண்டுமென்று பக்தன் ஒருவன் பகர்கிறான். உலக விஷயங்களினிடத்துச் செத்துப் போனவன் போன்று ஆகின்றவனுக்குச் சுயநலம் ஏது? அத்தகைய பெருநிலைக்கே பிரபத்தி என்று பெயர். வாழ்க்கைக்குரிய நிகழ்ச்சிகள் தம் போக்கில் வந்துகொண்டிருக்கட்டும். நிகழ்பவைகளில் சில நலம் நிறைந்தவைகளாய் இருக்கலாம். வேறு சில துன்பத்துக்கு ஏதுவானவைகளாக இருக்கலாம். அவையாவும் இறைவனுடைய திருவுளத்துக்கு ஒப்ப நிகழ்பவைகள் என்கிறான் பக்தன். "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே!" என்னும் மனப்பான்மையில் அவன் நிலைத்திருக்கிறான். அவனன்றி ஓரணுவும் அசையாது என்று ஒரு சிலர் வாயால் பேசுகின்றனர். அதற்கிடையில் தேவையில்லாத பல போராட்டங்களில் அவர்கள் ஈடுபடுகின்றனர். வம்புச் சண்டையை வேண்டுமென்றே வரவழைத்துக் கொள்கின்றனர். அவையாவும் அகங்காரத்தினின்று வருபவைகள். அத்தகைய வியவகாரங்களுக்கிடையில் இறைவனுடைய திருவுளத்துக்கு ஒப்பத் தங்களுடைய செயல்கள் எல்லாம் நடைபெற்று வருகின்றனவென்று அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கின்றனர். தங்களிடத்திலுள்ள குறைபாடுகளும், உலக ஆசைகளும் கடவுளின் திருவுளத்துக்கு ஒப்ப உண்டாகின்றன வென்றும் அன்னவர் கருதி ஏமாற்றமடைகின்றனர். சுயநலத்தால் தூண்டப் பெற்று நாம் புரிகின்ற போராட்டங்களினின்று சில வேளைகளில் நலன் ஏதாவது வாய்ப்பதும் உண்டு. அது முற்றிலும் கடவுளைச் சார்ந்தது, தன்னை ஒருபொழுதும் சார்ந்ததல்லவென்று பக்தன் கருதவேண்டும்.

பக்தியிலே பெருநிலைக்கு வந்துள்ள பக்தன் ஒருவன் தனது இச்சா சுதந்திரங்களையெல்லாம் இறைவனிடம் ஒப்படைத்துவிடுகிறான். தனக்காகவென்று அவன் எக்கருமத்தையும் செய்வதில்லை. “இறைவா! உன் பெயரால் உலகத்தவர்கள் வானுற உயர்ந்த கோவில்களைக் கட்டுகின்றனர்; உன் பெயரால் பிறகு பெரிய தானங்களையும் பெறுகின்றனர். உனக்குப் பணிவிடைகள் செய்பவர்கள் போன்று வாழ்க்கையைத் துவக்கிவிட்டுப் பிறகு தங்களுக்கே பிரதிபலனைத் தேடிக்கொள்கின்றனர். நான் அப்படிச் செய்யமாட்டேன். நான் ஏழையேன்; என்னிடத்துப் பொருள் ஒன்றும் இல்லை; என்னுடையது என்று உரிமை பாராட்டுவதற்கு உரியது இந்த உடல் ஒன்றே; இதை இனி என் பொருட்டு வைத்துக் கொள்ளாது உன் திருவடிகளில் சமர்ப்பித்துவிடுகிறேன்; பிரபத்தி என்னும் பெருநிலையினின்று நான் வழுவிவிடாது இறைவா என்னைக் காப்பாற்றுவாயாக.” பக்தன் ஒருவனுடைய ஆழ்ந்த உள்ளத்தினின்று பொங்கிப் பெருக்கெடுத்து வரும் பிரார்த்தனை இத்தகையதாம். பிரேமை பக்தியில் ஊறியிருக்கிறவன் தன்னைத் தனது அன்புக்கு நடுநாயகமாயிருக்கும் இறைவனிடம் மீட்டெடுக்காவண்ணம் ஒப்படைக்கிறான். அப்படித் தன்னையே தன் தெய்வத்தினிடம் கொடுப்பதினின்று அவன் அடைகின்ற ஆனந்தம் ஒப்பு உயர்வு அற்றது. உலகெங்கும் உள்ள செல்வத்தையும் செல்வாக்கையும் உடைத்திருப்பவர்கள் பிரபத்தி பண்ணியவன் அடைகிற ஆனந்தத்தைப் பெறமுடியாது. உலகம் முழுதுமே போற்றுகின்ற கீர்த்தியையோ, அல்லது உலகம் நல்குகின்ற இன்பத்தையோ பெறுகின்றவன் அவைகளினின்று ஏதோ ஒருவித இன்பத்தைப் பெறலாம். ஆனால் அவ்வின்பம் பிரபத்தி பண்ணியவன் அடைகின்ற ஆனந்தத்துக்கு அருகில் வரத் தகுதியற்றது. பக்தன் ஒருவன் தங்குத்

தடையின்றித் தன்னைத் தன் தெய்வத்திடம் ஒப்படைக்கிறான். அச்செயலைத்தான் அடைக்கலம் என்றும் பிரபத்தி என்றும் பகர்கிறோம். அதினின்று அவனுக்கு உண்டாகும் சாந்தியை உலகத்தினுள் எதனோடும் ஒப்பிடமுடியாது. தெய்வத்துக்கு நிகர் தெய்வம் ஒருவரே. அவரிடத்திருந்து வரும் சாந்திக்கு அவரே நிகர். அப்ராதிகூல்யம் அல்லது கைம்மாறு கருதாத்தன்மை என்பது பக்தனுக்கே உரிய மனநிலையாகும். தன்தெய்வமாகிய இறைவனை நாடுவதைத் தவிர வேறு எந்த விதமான நாட்டமும் அத்தகைய மனநிலை படைத்திருப்பவனுக்கு உண்டாவதில்லை. தான் கொண்டுள்ள அருள் நாட்டத்துக்கு இடைஞ்சலாக உலகில் ஏதேனும் இருப்பதாகவும் அவன் உணர்வதில்லை. உலகில் யாது நிகழ்ந்தாலும் அதன் மூலம் அவனுடைய பக்தி பன்மடங்கு அதிகரிக்கிறது. பிரபத்தியின் பெருமை அத்தகையதாம். பிரபத்தி பண்ணியிருப்பவனுடைய உள்ளத்தினின்று உலகப் பற்றுகள் யாவும் இருக்கும் இடம் தெரியாது அழிந்துபட்டுப் போகின்றன. உடலிருக்கும் வரையில், உடலிலே உயிரிருக்கும் வரையில் அந்த உயிரினூடு உள்ளம் இருக்கும் வரையில், 'இறைவா உன்னிடத்து நான் கொண்டுள்ள அருள் நாட்டம் இன்னும் பன்மடங்கு ஓங்குக' என்னும் ஏக்கமே பக்தனிடத்து மேலும் மேலும் ஓங்குகிறது. அத்தகைய அருள் நாட்டத்துக்கு இடையில் அவன் காண்கிற காட்சியும் ஒன்று உளது. பிரபஞ்சமாகவும், பிரபஞ்சத்திலுள்ள சராசரங்களாகவும் மற்றவர்களுக்குத் தென்படுவது எதுவோ அது பக்தனுக்குத் தான் போற்றும் தெய்வமாகக் காட்சி கொடுக்கிறது. உள்ளும், புறமும் தன் தலைவனையே அப்பக்தன் காண்கிறான். அந்த அருள் பேறிலேயே அவன் திளைத்து இருக்கிறான். இறைவனை சிக்கென அவன் பற்றிப் பிடித்துள்ள பிடிப்பு உலகப்பற்றுகள் யாவையும் அகற்றிவிடுகிறது. முக்த புருஷனாக அந்தப் பக்தன் பரிணமிக்கிறான்.

# 16. பரஞானமும் பராபக்தியும் ஒன்றே

உபநிஷதங்கள் ஞானத்தை இரண்டு விதங்களாகப் பிரிக்கின்றன. ஒன்று மேலானது; மற்றது கீழானது. பக்தனுக்குப் பக்தியிலும் இரண்டு விதமானவைகளுண்டு. அவன் பெறுகிற மேலான பக்திக்குப் பராபக்தி என்று பெயர். பராபக்திக்கும், உபநிஷதங்கள் புகட்டுகிற மேலான ஞானத்துக்குமிடையில் அவன் வேற்றுமை பாராட்டுவதில்லை. முண்டக உபநிஷதம் பகர்வதாவது :

द्वे विद्ये वेदितव्ये इति ह स्म यद्ब्रह्म
विदो वदन्ति ॥ परा चैवापरा च ॥
तत्रापरा ऋग्वेदो यजुर्वेदः सामवेदो
ऽथर्ववेदः शिक्षा कल्पो व्याकरणं
निरुक्तं छन्दोज्योतिषमिति ।
अथ परा यया तदक्षरमधिगम्यते ॥

த்வே வித்யே வேதிதவ்யே இதி ஹ ஸ்ம யத்ப்ரஹ்ம
விதோ வதந்தி பரா சைவாபரா ச
தத்ராபரா ருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேதோ
அதர்வவேத: சிக்ஷா கல்போ வ்யாகரணம்
நிருக்தம் சந்தோஜ்யோதிஷமிதி
அத பரா யயா ததக்ஷரமதிகம்யதே

"பிரம்ம வித்துக்கள் அல்லது பிரம்ம ஞானிகள் பராவித்யா என்றும், அபராவித்யா என்றும் பெறுதற்குரிய இரண்டு வித்தைகள் இருக்கின்றன எனப் பகர்ந்துள்ளனர். அவ்விரண்டினுள் ரிக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வவேதம், சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜோதிஷம் ஆகியவைகள் அபராவித்யா அல்லது கீழான

வித்தையாகின்றன. இனி எதன் மூலம் அக்ஷரம் அல்லது மெய்ப்பொருள் அடையப்பெறுகிறதோ அது பரவித்யா அல்லது மேலான ஞானம்.''

சொற்களை உச்சரிக்கும் முறைகளைப் புகட்டுவது சிக்ஷை. கிரியைகளைப் பற்றிய கோட்பாடுகளைப் பகர்வது கல்பம். வியாகரணம் என்பது இலக்கணம். வேதத்தைப் பற்றிய நிகண்டுக்கு நிருக்தம் என்று பெயர். சந்தஸ் என்பது யாப்பிலக்கணமாகும். ஜோதிஷம் என்பது ஜோதிடம். மானுட வாழ்க்கைக்கும், கிரகங்களின் சஞ்சாரத்துக்கும் இடையிலுள்ள தொடர்வை இந்நூல் விளக்குகிறது. அபரா வித்தையில் சிலவற்றை மட்டும் ஈண்டு உபநிஷதம் எடுத்துச் சொல்லியிருக்கிறது. இவ்வுலகும் இவ்வுலக வாழ்க்கை சம்பந்தமான நூல்கள் யாவும் சேர்ந்து அபராவித்தை அல்லது கீழான ஞானம் என்னும் பெயர் பெற்றுள்ளன. நான்கு வேதங்களையும் நன்கு கற்றிருப்பதே கீழான ஞானம் ஆகிறது என்று உபநிஷதம் சொல்லுவதைக் கருத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். என்வே வேதம் ஓதுபவர்கள் எல்லாரும் முடிவான ஞானத்தை அடையப்பெற்றவர் ஆகார். பரப்பிரம்மத்தைச் சாக்ஷாத்கரிப்பது ஒன்றே பரா வித்தை அல்லது பிரம்ம ஞானம் ஆகின்றது. பரம்பொருள் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது. அதைப் பற்றிய ஞானம் மனிதனுடைய சாதாரண புத்திக்கு எட்டாதது. மனதற்ற நிலையிலேயே பிரம்ம ஞானம் உண்டாகிறது. ஆதலால் அது தனிப் பெருமை வாய்க்கப் பெற்றதாகிறது.

இனி, பராபக்தி என்றால் என்ன என்பதைத் தேவி பாகவதம் தெளிவுபட விளக்குகிறது:—''ஒரு பாத்திரத்தி னின்று மற்றொரு பாத்திரத்தினுள் எண்ணெயை ஊற்றும் பொழுது அது இடையீடின்றிக் கீழே வடிகிறது. அதே

முறையில் தங்குத்தடையின்றி மனது பகவானைப் பற்றிச் சிந்திக்குமாகில் ஆத்ம சாதகன் அப்பொழுது பராபக்தியை அடையப் பெறுபவன் ஆகிறான்.'' இத்தகைய பராபக்தி யாருக்கு உண்டாகிறதோ அவனுடைய மனதில் எக்கார ணத்தை முன்னிட்டும் சலனம் உண்டாவதில்லை. அவனு டைய மனம், புத்தி யாவும் சர்வேசுவரனிடத்தே யாண்டும் திருப்பப்படுவனவாகின்றன. மேலும் இறைவனிடத்து அவனுக்குண்டாகும் பற்றுதல் எக்காரணத்தை முன்னிட்டும் மாறிப்போவதில்லை. மனிதனிடத்துள்ள அன்பில் தெள்ளத் தெளிந்ததாய் அமைந்திருப்பது இதுவே. இத்தகைய தூய அன்பு கடவுளுக்கே உரியதாகிறது.

பரம்பொருள் அறிவு சொரூபம் என்று சாஸ்திரம் சாட்டு கிறது. உயிர்களனைத்தும் பேரறிவினிடத்திருந்து வந்திருப் பதால் அவையாவும் அறிவு சொரூபம்.

அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே.

அத்தகைய அறிவு முற்றிலும் தெளிந்தது ஆகுங்கால் அது பரம்பொருள் மயம் ஆகின்றது. மேலும் அதே பரம்பொருள் அன்பு வடிவினன்.

அன்பும் சிவமும், இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே.

உயிர்களனைத்தும் பேரன்பினிடத்திருந்து வந்திருப்பதால் அவையாவும் அன்பு சொரூபம். அந்த அன்பு தூயதாகுங்

வித்தையாகின்றன. இனி எதன் மூலம் அக்ஷரம் அல்லது மெய்ப்பொருள் அடையப்பெறுகிறதோ அது பரவித்யா அல்லது மேலான ஞானம்.''

சொற்களை உச்சரிக்கும் முறைகளைப் புகட்டுவது சிக்ஷை. கிரியைகளைப் பற்றிய கோட்பாடுகளைப் பகர்வது கல்பம். வியாகரணம் என்பது இலக்கணம். வேதத்தைப் பற்றிய நிகண்டுக்கு நிருக்தம் என்று பெயர். சந்தஸ் என்பது யாப்பிலக்கணமாகும். ஜோதிஷம் என்பது ஜோதிடம். மானுட வாழ்க்கைக்கும், கிரகங்களின் சஞ்சாரத்துக்கும் இடையிலுள்ள தொடர்வை இந்நூல் விளக்குகிறது. அபரா வித்தையில் சிலவற்றை மட்டும் ஈண்டு உபநிஷதம் எடுத்துச் சொல்லியிருக்கிறது. இவ்வுலகும் இவ்வுலக வாழ்க்கை சம்பந்தமான நூல்கள் யாவும் சேர்ந்து அபராவித்தை அல்லது கீழான ஞானம் என்னும் பெயர் பெற்றுள்ளன. நான்கு வேதங்களையும் நன்கு கற்றிருப்பதே கீழான ஞானம் ஆகிறது என்று உபநிஷதம் சொல்லுவதைக் கருத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். எனவே வேதம் ஓதுபவர்கள் எல்லாரும் முடிவான ஞானத்தை அடையப்பெற்றவர் ஆகார். பரப்பிரம்மத்தைச் சாக்ஷாத்கரிப்பது ஒன்றே பரா வித்தை அல்லது பிரம்ம ஞானம் ஆகின்றது. பரம்பொருள் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது. அதைப் பற்றிய ஞானம் மனிதனுடைய சாதாரண புத்திக்கு எட்டாதது. மனதற்ற நிலையிலேயே பிரம்ம ஞானம் உண்டாகிறது. ஆதலால் அது தனிப் பெருமை வாய்க்கப் பெற்றதாகிறது.

இனி, பராபக்தி என்றால் என்ன என்பதைத் தேவீ பாகவதம் தெளிவுபட விளக்குகிறது:—''ஒரு பாத்திரத்தி னின்று மற்றொரு பாத்திரத்தினுள் எண்ணெயை ஊற்றும் பொழுது அது இடையீடின்றிக் கீழே வடிகிறது. அதே

முறையில் தங்குத்தடையின்றி மனது பகவானைப் பற்றிச் சிந்திக்குமாகில் ஆத்ம சாதகன் அப்பொழுது பராபக்தியை அடையப் பெறுபவன் ஆகிறான்." இத்தகைய பராபக்தி யாருக்கு உண்டாகிறதோ அவனுடைய மனதில் எக்காரணத்தை முன்னிட்டும் சலனம் உண்டாவதில்லை. அவனுடைய மனம், புத்தி யாவும் சர்வேசுவரனிடத்தே யாண்டும் திருப்பப்படுவனவாகின்றன. மேலும் இறைவனிடத்து அவனுக்குண்டாகும் பற்றுதல் எக்காரணத்தை முன்னிட்டும் மாறிப்போவதில்லை. மனிதனிடத்துள்ள அன்பில் தெள்ளத் தெளிந்ததாய் அமைந்திருப்பது இதுவே. இத்தகைய தூய அன்பு கடவுளுக்கே உரியதாகிறது.

பரம்பொருள் அறிவு சொரூபம் என்று சாஸ்திரம் சாட்டுகிறது. உயிர்களனைத்தும் பேரறிவினிடத்திருந்து வந்திருப்பதால் அவையாவும் அறிவு சொரூபம்.

அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே.

அத்தகைய அறிவு முற்றிலும் தெளிந்தது ஆகுங்கால் அது பரம்பொருள் மயம் ஆகின்றது. மேலும் அதே பரம்பொருள் அன்பு வடிவினன்.

அன்பும் சிவமும், இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே.

உயிர்களனைத்தும் பேரன்பினிடத்திருந்து வந்திருப்பதால் அவையாவும் அன்பு சொரூபம். அந்த அன்பு தூயதாகுங்

கால் அது முற்றும் தெய்வ சொரூபமாகிறது. ஒரு பொருளை உள்ளபடி அறியுமளவு அதனிடத்து அன்பு தானுக உருவெடுக்கிறது. மேலும் ஒருபொருளை உள்ளன்போடு நேசிக்குமளவு அப்பொருளைப்பற்றிய உண்மை நேசிப்பவனுடைய அறிவுக்கு எட்டுகிறது. இங்ஙனம் ஆரம்பதசையிலோ அறிவும் அன்பும் ஒன்றுக்கொன்று துணைபுரிந்து வருகின்றன. முடிந்த நிலையில் அறிவுக்கும், அன்புக்குமிடையில் வேற்றுமையில்லாது ஒன்றுபடுகிறது. உச்சநிலையில் அறிவும் அன்பும் ஒன்றேயாம். கடவுளே அறிவு சொரூபமாகவும் அன்பு சொரூபமாகவும் இருக்கிறுர்.

பக்தன் ஒருவனுக்குப் பராபக்தி என்னும் உச்சநிலை எடுத்த எடுப்பில் கிட்டுவதில்லை. தான் வழிபடும் தெய்வத்தினிடத்து அவனுக்குப் பற்றுதல் அதிகரித்துக் கொண்டே போகவேண்டும். அப்படி அதிகரிக்கின்ற பற்றுதலுக்கு 'ராகானுகா' என்பது பரிபாஷைச் சொல். தெய்வப்பற்று மனிதனுக்கு எளிதில் வாய்ப்பதில்லை. அதை வளர்த்தல் பொருட்டு பக்தி சாஸ்திரங்கள் புகட்டுகின்ற பக்தி சாதனங்களனைத்தையும் பக்தன் ஊக்கத்துடன் அனுஷ்டித்து வரவேண்டும். அப்படி அவைகளைப் பழகுவதின் மூலமாகவே அவன் பராபக்தியின் பொருட்டுத் தன்னைப் படிப்படியாகப் பக்குவப்படுத்துகிறுன். ஆத்மசாதகனுடைய உள்ளத்தினுள்ளே பேரன்பு உதயமாகுங்கால் கடவுளைப்பற்றிய எண்ணம் ஒன்றே அதனுள் குடிகொண்டிருக்கும். வேறு எதைப்பற்றிய ஞாபகமும் உள்ளத்தில் அப்பொழுது உண்டாவதில்லை. இரண்டு வஸ்துக்கள் ஏககாலத்தில் ஒரே இடத்தில் இருக்கமாட்டா. அதே விதத்தில் பக்தனுடைய உள்ளத்தில் உலகப்பற்றும், தெய்வப்பற்றும் சேர்ந்து இருப்பதில்லை. கடவுள் பற்று ஒன்றே

ஏனைய பற்றுகளையெல்லாம் அகற்றித்தள்ளுகிறது. உள்ளம் உனக்கே இடமாக வைத்தேன் என்கிறான் பக்தன். அந் நிலையை அவனடைந்திருப்பதற்கு அறிகுறி மற்றொன்று உண்டு. தெய்வத்தையே நினைந்திருப்பதின் விளைவாக அவன் தூய்மையே வடிவெடுத்தவன் ஆகின்றான். எக்காரணத்தை முன்னிட்டும் அத்தூய்மையை மலினப் படுத்த யாருக்கும் இயலாது. இனி, பந்தபாசம் என்பன வெல்லாம் உலகப்பற்றை அடிப்படையாகக் கொண்டிருக் கின்றன. தூய்மை வாய்ந்த தெய்வப்பற்றானது உலகப் பற்றுகளை யெல்லாம் அறவே களைந்துவிடுவதனால் பக்தன் மகிமை நிறைந்த முக்தி நிலையை எட்டுகிறான். நிறை ஞானம் முக்தியை நல்குவதுபோன்று நிறை அன்பு அல்லது பராபக்தியும் முக்தியை நல்குகிறது.

பக்தியில் மேல்நிலையை எட்டியிருப்பவனே இறைவ னுக்குத் தன் உள்ளத்தை ஆலயமாக அமைக்க முடியும். உள்ளம் பெருங்கோயில் என்னும் கோட்பாடு பராபக்தியை யடையப் பெற்றிருப்பவனுக்கே முற்றிலும் பொருத்தமான தாகிறது. புறத்தில் அமைக்கப்பெற்றிருக்கும் வடிவங்களும், விக்கிரகங்களும், பிரதிமைகளும், நூல்களும், கோட்பாடு களும் அத்தகைய பக்தன் ஒருவனுக்குத் தேவையில்லை. வானுற வளர்ந்துள்ள பெரு மரம் ஒன்றுக்கு வேலி எங்ஙனம் தேவையில்லையோ அங்ஙனம் இத்தகைய உபகரணங்கள் எல்லாம் பக்தனுடைய பிரேமை பக்திக்கு இனித்தேவை யில்லாது போய்விடுகின்றன. ஆனால் சாதாரண மனிதன் ஒருவனுக்குக் கோயில்கள், விக்கிரகங்கள், ஆராதனைமுறை கள் ஆகியவைகளின் துணையின்றி தெய்வத்தினிடத்து அன்பு வைப்பது எளிதன்று. எனவே பக்தி சாதனத்தின் ஆரம்ப தசையில் இருப்பவர்களுக்கு இந்த உபகரணங்கள் எல்லாம் தேவை.

இன்னும் ஆரம்பதசையிலிருக்கும் பக்தன் ஒருவன் கடவுளிடத்து பக்தி பூணுகிறான் என்பது உண்மை. தான் கொண்டுள்ள அன்புக்கு ஆதரவாக யாரை நேசிக்கின்றானோ அவனிடத்திருந்தும் அன்பு ஊற்றெடுத்து வந்தால்தான் தன் உள்ளத்திலிருக்கும் அன்பு மேலும் வளர்கிறது. பரஸ்பர அன்பு இல்லாதவிடத்து மனது சிறிது சிறிதாக பராமுகமடைந்துவிடுகிறது. அன்பில் இருவர் கருத்து ஒருமித்திருப்பதே அன்பை வளர்ப்பதற்கு உற்ற உபாயமாகும். ஆனால் இக்கோட்பாட்டுக்கு விலக்கு யாரோ ஒரு சிலரிடத்துக் காணலாம். தாங்கள் கொண்டுள்ள அன்புக்கு ஆதரவு காட்டாதவர்களிடத்தும் கைம்மாறு கருதாது அன்பைப் பொழியும் பாங்குடைய மேலோர் சிலர் இருக்கின்றனர். பிரதிபலனை எதிர்பாராத அன்புக்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளலாம். விட்டில் பூச்சிக்குத் தீயினிடத்து உள்ள அன்பு ஒப்பு உயர்வு அற்றது. அது இருளில் இருக்கும் பொழுது எங்கேனும் ஓரிடத்தில் தீமூட்டப்படுகிறது. சுடர் விட்டெரியும் தீயைக் கண்ட மாத்திரத்தில் ஆங்கு அது பறந்தோடுகிறது. தீயினுள் குதித்தால் தன்கதி என்ன ஆகும் என்பதைப்பற்றி நினைக்க அதற்கு நேரமில்லை. வெளிச்சத்தின் மீது அது வைத்த அன்பினால் தீயினுள் குதித்து அது தீக்கு இரையாகிறது. கைம்மாறு கருதாத அன்பு என்று விட்டில் பூச்சியின் அன்பைப் பற்றிப் பகரலாம். தனக்கு நேரும் தீங்கை முன்னிட்டுத் தீயினின்று அது ஒதுங்கியிருக்குமாகில் அதன் அன்பை நிறை அன்பு என்று சொல்லலாகாது. அன்பு உச்சநிலையை எய்துங்கால் தனக்கு வருவது நலனா அல்லது கேடா என்று எண்ணிப் பார்க்கும் மனப்பான்மை உள்ளத்தினின்று அறவே அகன்றுபோய்விடுகிறது. பேரன்பு கொள்ளுவது அன்பனுடைய பேரியல்பு

ஆகிறது. சுயநலத்துக்கு அணுவளவும் ஆங்கு இடமில்லை. தன்னிடத்துள்ள அன்பைக் கரவாது எடுத்து நேசிக்கப்படும் பொருளிடத்து அன்பன் சொரிகிறான். இவ்வுலகிலே காணும் தெய்வீகப் பெற்றிகளுள் மிக உயர்ந்த நிலையிலிருப்பது பிரதிபலனை எதிர்பாராத பேரன்பாம். அருள் துறையிலே பரம்பொருளிடத்து அத்தகைய பேரன்பு உருவெடுக்குங்கால் அதைப் பராபக்தி என்று பகர்கிறோம்.



# 17. பிரேமைபக்தியின் முக்கோணம்

முக்கோணம் ஒன்றை நாம் வரைகிறோம். அதை ஆராய்ந்து பார்த்தால் அதைப்பற்றிய உண்மைகள் சில



விளங்கும். ஓர் இடத்துக்கு எல்லை கட்டுதற்குக் குறைந்தது மூன்று நேர்கோடுகள் வேண்டும். அப்படி மூன்று கோடுகள் சேர்ந்தது முக்கோணம். அம்மூன்றும் ஒன்றோடொன்று நெருங்கித் தொடர்புடையவைகளாய் இருக்கின்றன. அம்முக்கோணத்துக்கு ஒப்பாக பிரேமை பக்தியில் மூன்று இயல்புகளிருக்கின்றன. அம்மூன்றையும் தனித்தனியாகப் பிரித்துவிட நமக்கு இயலாது. அம்மூன்றும் சேர்ந்து அமையும்பொழுதே பிரேமை பக்தி பூர்த்தியாகிறது. எப்படி மூன்று கோடுகளில்லாது முக்கோணம் ஒன்றை அமைக்க முடியாதோ அப்படி மூன்று பேரியல்புகளில்லாது பிரேமை பக்தி உருவெடுக்க முடியாது. அம்மூன்று இயல்புகளுள் ஒன்று நயவாமை அல்லது கைம்மாறு கருதாமை. தான் செய்கிற ஒவ்வொரு செயலுக்கும் பிரதிபலன் ஏதாவது தனக்குக் கிடைக்கவேண்டுமென்று மனிதன் எதிர்பார்க்கிறான். தன் பொருளை யெடுத்து மற்றவர்களுக்காகச் செலவிடும்பொழுதும் அதினின்று தனக்கு ஏதாவது நன்மை வரவேண்டுமென்று அவன் நினைக்கிறான். மனிதன் எச்செயலைச் செய்தாலும் அதினின்று தனக்கு ஏதாவது ஊதியம் அல்லது கைம்மாறு கிடைக்கவேண்டுமென்று அவன் எதிர்பார்க்கிறான். அப்படிப் பயனை எதிர்பார்ப்பது பிரேமை பக்தியின் இயல்பன்று. கைம்மாறு கிடைக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறவன் வாணிபம் செய்பவனுக்கு ஒப்பாகிறான். கொடுத்த விலைக்கேற்ற பண்டத்தை வாணிபத்துறையில்

மனிதன் எதிர்பார்க்கிறான். அன்பு என்னும் நல்லியல்பு எல்லாரிடத்திலும் இருக்கிறது. இந்த அன்பை உயிர்கள் உயிர்களிடத்துச் செலுத்துகின்றன. இதே அன்பை மனிதன் கடவுளிடத்துச் செலுத்துகிறான். அதைக் கடவுளிடத்து வைக்குங்கால் அது பக்தி யென்னும் பெயர் பெறுகிறது. பக்தியைப் பெருக்குவது நல்ல ஆத்ம சாதனம். தன் உள்ளத்தைக் கடவுளுக்கே உரியதாக ஆத்ம சாதகன் ஒருவன் செய்யவேண்டும். அப்படித் தான் செலுத்துகிற அன்புக்குக் கைம்மாருகக் கடவுள் இம்மையிலோ அல்லது மறுமையிலோ தனக்கு ஏதாவது உபகாரம் செய்யவேண்டுமென்று அவன் எதிர்பார்ப்பானாகில் அவன் உள்ளத்தில் உருவெடுத்தது மெய்யன்பு அல்ல. மறுமையில் சொர்க்க பதவி வேண்டுமென்று கடவுளை வழுத்துபவர்கள் இருக்கிறார்கள். இம்மையில் பிணி நீங்கவேண்டும்; ஆயுள் அதிகரிக்கவேண்டும்; பொருள் மேலும் மேலும் சேரவேண்டும்; பதவியும், போகமும் பெருகவேண்டும் என்றெல்லாம் கடவுளிடத்து நயந்து பிரார்த்தனை பண்ணுபவர்களிருக்கிறார்கள். தங்கள் கோரிக்கைகளைக் கடவுள் நிறைவேற்றிவைக்க மாட்டார் என்று அத்தகைய மாந்தர் அறிந்துகொள்ளுமிடத்து அவர்கள் பூணும் பக்தியும் அத்துடன் நின்றுவிடும். எனவே அன்னவர்கள் செய்வது ஒருவகை வியாபாரம் ஆகிறது. தங்களிடத்திருக்கும் அன்பைக் கடவுளுக்குக் கொடுப்பதாக அவர்கள் எண்ணிக்கொள்கின்றனர். அதற்குக் கைம்மாருகக் கடவுளிடத்திருந்து தங்களுக்கு என்னென்னவோ காரிய சித்தி கைகூட வேண்டுமென்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். ஆதலால் தான் அத்தகைய மனப்பான்மையை வாணிப மனப்பான்மை என்கிறோம். ஆனால் உண்மையான பக்தன் ஒருவனுடைய போக்கு அத்தகையதன்று. அவன் இயல்பாகவே இறைவ

னிடம் அன்புகொள்கிறான். ஏன் அவன் அப்படி அன்பு கொள்ளவேண்டும் என்னும் கேள்வி எழ இடமில்லை. குளிர்ந்த வெளிச்சத்தைக் கொடுப்பது சந்திரனுடைய இயல்பு. அன்பை வாரிப் பொழிவது பக்தனுடைய இயல்பு. அதை அவன் பகவானிடத்துச் செலுத்துகிறான். போற்று தற்கு அவரே உரியவர் என்னும் உணர்வு பக்தனுக்கு உண் டாகிறது. முழுமனதோடு அவரை நேசிப்பதில் அவன் பரம திருப்தியடைகிறான். மெய்யன்பன் ஒருவன் உள்ளத்தில் தூய உள்ளன்பு ஊற்றெடுத்துப் பொங்குகிறது. அவன் அதை வாரி ஏதேனும் ஓர் இடத்தில் கொட்டியாகவேண்டும். இறைவனுக்கே அப்பேரன்பு முழுதையும் அவன் உரிமை யாக்குகிறான். அவரிடம் தனது பேரன்பைச் சொரிவதை விட வேறு எந்த நோக்கமும் அவனுக்கில்லை. இறைவனை யல்லாது வேறு எப்பொருளையும் அவன் பொருளாக மதிப்ப தில்லை. ஆதலால் அவனுடைய அன்புக்கு இலக்காக அமைந் திருப்பவர் இறைவனே.

முன்பு ஒரு காலத்தில் சக்கரவர்த்தி ஒருவர் இந்தி யாவை ஆண்டு வந்தார். அவர் பக்திமிகப் படைத்திருந் தவர். குடிகளை அன்புடன் ஓம்புதலே அவருடைய குறிக் கோளாயிருந்தது. சான்றோர்கள் வாழ்ந்து வந்த வனம் ஒன்றுக்கு அவர் ஒரு தடவை சென்றிருந்தார். தவநெறியில் நிலைத்திருந்த மேலோர் ஒருவரை அவர் ஆங்குச் சந்தித்தார். அப்பெரியவரோடு பார் ஆளும் வேந்தன் உரையாடவும் ஆரம்பித்தார். நல்லாருடன் ஏற்பட்ட இணக்கம் வேந்தனது உள்ளத்தைக் கவர்ந்தது. அத் தவசியின் மனத்தூய்மையும் நுண்ணறிவும் ஒன்றுகூடி அரசனுக்கு அளவில்லா ஆனந் தத்தை ஊட்டின. தம்மிடமிருந்து சன்மானம் ஏதேனும் ஒன்றைப் பெற்றுத் தம்மை கிருதார்த்தனாக்கவேண்டுமென்று

அப்புவிராஜன் தவராஜனிடம் பணிந்து விண்ணப்பித்தார். ஆனால் பொருள் எதையும் ஏற்றுக்கொள்ள அத்துறவி சம்மதிக்கவில்லை. "காட்டில் நிறைந்திருக்கும் மரங்கள் எனக்கு வேண்டியவாறு கனிகளை உணவாகக் கொடுத்து உதவுகின்றன. மலைச்சாரல்களினின்று ஓடிவரும் ஓடைகள் பருகுதற்கு வேண்டியவாறு நன்னீரை நல்கி வருகின்றன. அரையில் கட்டிக்கொள்வதற்கு இங்குக் கிடைக்கும் மரவுரிகளுக்குக் குறையொன்றுமில்லை. மழை, குளிர், வெப்பம் முதலியவைகளினின்று மேனியைக் காத்துக்கொள்ளுதற்கு மலைக்குகைகள் பல இருக்கின்றன. சரீர வாழ்க்கைக்கு வேறு ஒன்றும் தேவையில்லை. இயற்கைத் தாயின் புதல்வனாயிருக்கும் நான் உம்மிடமிருந்தாவது அல்லது வேறு எவரிடமிருந்தாவது பெறுதற்கான சன்மானம் யாது உளது? நான் இருக்கிறபடி என்னை விட்டு விடுங்கள்" என்றார் அவ்வனத்தில் வசித்து வந்தவர். ஆனால் அரசனோ தமது முயற்சியை அத்தோடு நிறுத்திவிடவில்லை. "எனக்கு நலன் நல்குதல் பொருட்டு தேவே, எனது தலைமைப் பட்டணத்துக்குத் தாங்கள் எழுந்தருள்வீராக! எனது மாளிகையினுள் தங்கள் திருவடியை நாட்டி அதைப் புனிதப்படுத்துவீர்களாக! நான் பணிவுடன் படைக்கும் பொருளை மனமுவந்து ஏற்று என்னை ஆசீர்வதிப்பீர்களாக!" இப்படியெல்லாம் அவர் விண்ணப்பித்துக் கொண்டார். கோமானுடைய வற்புறுத்துதலுக்கு மறுப்புச் சொல்ல அப்பெரியவருக்கு மனம் வரவில்லை. அவ்வரசன் வேண்டிக்கொண்டபடி அவருடைய ராஜதானிக்கு விஜயம் செய்யத் துறவி இசைந்தார். அரண்மனைக்கும் அவ்வண்ணமே அரசனுடன் அவர் போய்ச் சேர்ந்தார். வனத்தினின்று வந்திருந்த துறவிக்குக் கைங்கரியம் செய்தற்கு முன்பு வேந்தன் தமது நித்திய வழிபாட்டில் அமர்ந்

தார். அவர் புரிந்த இறை வணக்கத்திற்கிடையில் பிரார்த் தனை ஒன்றை அவர் வாய் விட்டுப் பகரலானார் : ''அகிலாண் டங்களுக்கும் நாயகனாயிருக்கும் இறைவா, எனக்குப் புத்திரப்பேறு இன்னும் அதிகமாக உண்டாகுக. எனது ஆட்சியின் நலத்தின் பொருட்டு எனக்குச் செல்வம் இன்னும் அதிகமாக ஓங்கும்படி செம்பொருளே, எனக்கு அருள்புரி வீராக. நான் ஆண்டுவரும் நாடு இன்னும் அதிகமாக விரிவு அடையும்படி ஆண்டவனே, எனக்கு அருள்புரிவீராக. தேவாதிதேவா, என் தேகம் கட்டுடனும், ஆரோக்கியத் துடனும் நெடிது இருக்கும்படி எனக்கு அனுக்கிரகம் செய் வீராக.'' இவ்வாறு நாடாளும் வேந்தன் பரம்பொருளிடத் துப் பரிந்து விண்ணப்பம் செய்து வந்தார். அவர் புரிந்த கடவுள் வழிபாடு பூர்த்தியாவதற்கு முன்பே அவரிடம் வந்திருந்த துறவி தமது ஆசனத்தினின்று எழுந்து அறையை விட்டு அமைதியாக வெளியேகினார். அவர் புறப்பட்டுப் போவதைப் பார்த்த கோமானுக்கு மனக்கலக்கம் மிக வந்தது. தானும் அத்துறவியைப் பின் தொடர்ந்து சென்றார். ''பெரியோய், தாம் ஏன் இப்படி வெளியேகி விட்டீர்? என்னிடமிருந்து தாம் பெறுதற்கிருக்கும் சன்மானங்களை இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லையே!'' என்று உரக்கக்கூவி விண்ணப்பித்தார். போய்க்கொண்டிருந்தபடிபின்தொடர்ந்து வந்தவரைத் திரும்பிப் பார்த்து, துறவியானவர் பகரலானார்: ''யாசகர்களிடமிருந்து நான் யாசகம் ஏற்பதில்லை. வேந்தன் என்று சொல்லிக் கொள்ளும் நீரே மற்றொரு பிச்சைக்கார னாக இருக்கிறீர். வறியனாயுள்ள நீர் எனக்கு எதை வகுத் தெடுத்து அளிக்கப்போகின்றீர்? ஐயம் கேட்டுக்கொண் டிருக்கும் உம்மிடமிருந்து ஏதேனும் ஒன்றை ஏற்க எண்ணம் கொண்டுள்ள கயவன் நான் அல்லன். நீர் இப்பொழுதே

திரும்பிப் போய்விடும். என்னைப் பின்பற்ற வேண்டாம்!" இப்படித் துறவி வேந்தன் தன்னைப் பாராளும் வேந்தன் என்று எண்ணிக்கொண்டிருந்த வறியனுக்கு விடை கொடுத்தார்.

இந்நிகழ்ச்சியினின்று பேருண்மையொன்று நமக்கு நன்கு புலனாகிறது. கடவுளிடத்து மெய்யன்பு கொண்டிருக்கும் பக்தர்கள் யார், கடவுளிடம் கெஞ்சிக் கேட்கும் யாசகர்கள் யார் என்பது நமக்குப் புலனாகிறது. அன்புத் துறையில் யாசகத்துக்கு இடமில்லை. தன்னிடத்திருப்பதை யெல்லாம் கரவாதெடுத்து வழங்க வல்லது அன்பு. அப்படி வழங்க வழங்கக் கேணியில் நீர் ஊற்றெடுப்பது போன்று அன்பு ஓங்கி வளர்கிறது. கைக்கூலி ஏதேனும் ஒன்றைப் பெறுதற்காகக் கடவுளிடம் நயந்து விண்ணப்பிப்பது கீழ்த்தரமான அன்பு ஆகும். தெய்வத்தை வணங்கும் பக்தன் ஒருவன் தனக்கு முக்தி வேண்டுமென்றுவது பிரார்த்திப்பது கிடையாது. பெறுதற்குரிய பேறுகளிலெல்லாம் மிக உயர்ந்தது வீடுபேறு. 'வீடு பெற நில்' என்பது வேதவாக்கு. ஆனால் அத்தகைய பெரியபேறு வேண்டுமென்று ஒருபொழுதும் பக்தன் ஒருவன் மனதிலும் நினைப்பதில்லை. தெய்வத்திடத்து அதைக்குறித்து வேண்டுதல் செய்வதுமில்லை. கைம்மாறு எதையும் கருதாதிருப்பதே அன்பின் கூறு. அன்பை ஓயாது பொழிந்துகொண்டிருப்பதே அன்பின் பேரியல்பு. பக்தன் ஒருவன் பரம்பொருளை ஏன் நேசிக்கிறான்? அப்படி நேசிப்பதுதான் அவனுடைய பேரியல்பு. பிரகாசத்தைக் கொடுப்பது சூரியனுடைய பேரியல்பு. உள்ளன்போடு இறைவனை நேசிப்பது பக்தனுடைய பெரும்போக்கு.

இயற்கையில் அழகான காட்சி ஒன்று தென்படுகிறது. பார்ப்பவர் உள்ளத்தை முற்றிலும் கவர்ந்துகொள்ளும்

பெருமைஅதனிடத்துப் பொலிகிறது. அத்தகைய காட்சியைக் கண்டதும் அதனிடத்து உனக்கு அன்பு உண்டாகிறது. முழுமனதோடு நீ அதை நேசிக்கிருய். அப்படி அதை நேசிக் கும்பொழுது அந்த நட்புக்குக் கைம்மாருக இயற்கைக் காட்சி யினிடத்திருந்து நீ எதையும் எதிர்பார்ப்பதில்லை. அழகு நிறைந்த அந்த இயற்கைத் தோற்றமும் உன்னிடமிருந்து எதையும் கேட்பதில்லை. தன்னிடத்துள்ள சௌந்தர்யத்தை அது வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. நீ முற்றிலும் அதற்கு வசப்பட்டவனுகிருய். அதன் விளைவாக உன் மன திலே பேரானந்தப்பெருநிலை ஒன்று உண்டாகிறது. உன் மனதிலிருந்த கோணல்களையும், குறைபாடுகளையும், துயரங் களையும் அக்காட்சி அகற்றிவிடுகிறது. கொந்தளிப்பே வடிவெடுத்திருந்த மனதில் அமைதி உண்டாகிறது. அவ் இயற்கைக் காட்சி தாற்காலிகமாக உன்னை உயர்நிலைக்கு உயர்த்துகிறது. மானுடச் சிற்றியல்பை அவ்வேளையில் நீ மறந்துவிடுகிருய். தெய்விகப் பேரின்பம் ஓரளவு உன் னிடத்து அப்பொழுது திகழ்வதாகிறது. இங்ஙனம் பேரன் பிலும், அன்பினின்று விளையும் பேரானந்தத்திலும் திளைத் திருப்பதே பக்தியின் முக்கோணங்களுள் முதல் கோண மாகிறது. நீ பொழிகிற அன்புக்குக் கைம்மாருக எதையும் நீ கேட்கவேண்டாம். அன்பை எடுத்து வழங்கும் வள்ளலாக நீ யாண்டும் இருந்து வருவாயாக. உன்னிடத்துள்ள உள் ளன்பைக் கடவுளுக்கு எடுத்துப் படை. ஆனுல் கடவுளிடத் திருந்தேயாயினும் நீ எதையும் வேண்டுமென்று கேளாதே. பேரன்பைக் கரவாது வழங்குதல் முக்கோணங்களுள் முதல் கோணமாகிறது.

அன்பின் முக்கோணத்தில் இரண்டாவது கோணமாக அமைந்திருப்பது அச்சமின்மை. அன்பு எதற்கும் அஞ்சுவ

தில்லை. கடவுளிடத்து பயபக்திகொள்ளும் மாந்தர் உலகி லிருக்கின்றனர். அவரை நேசிக்காவிட்டால் அவர் நம்மைத் தண்டிப்பார், அல்லது நமக்குத் துன்பங்களை விளைவிப்பார் என்று அஞ்சி அவரிடத்து அன்பு காட்டுதல் கீழோரது இயல்பு ஆகும். மானுடப் பண்புகள் இன்னும் அவர்களி டத்து முறையாக உருவெடுக்கவில்லை என்றுதான் இயம்ப வேண்டும். கடவுளை அன்னவர் ஒரு கொடுங்கோல் மன்ன னாகக் கருதுகின்றனர். தம்மை வழுத்தாதவர்களை அவர் தண்டிக்கிறார் என்னும் பீதியால் தூண்டப்பெற்று அவர்கள் ஆராதனை செய்கின்றனர். தங்களுடைய சிற்றியல்புக்கு ஒப்பக் கடவுளை அவர்கள் கற்பனை பண்ணுகின்றனர். அவர் கள் கருத்துப்படி பேராற்றல் படைத்த ஒரு பெரும் மனித னாகக் கடவுள் இருக்கிறார். செங்கோலை ஒரு கையிலும், சவுக்கு ஒன்றை மற்றொரு கையிலும் அக்கடவுள் ஏந்தியிருக் கிறாரென்று அவர்கள் நினைக்கின்றனர். வண்டி ஓட்டுகிற வனுடைய விருப்பப்படி மாடு நடவாவிட்டால் சவுக்கால் அவன் அதை அடிக்கிறான். அதே விதத்தில் கடவுளுக்கு அடிபணிந்து நடவாவிட்டால் தங்களுக்கு அவரிடமிருந்து சவுக்கடி கிட்டுமென்று அவர்கள் நடுங்கியிருக்கின்றனர். கொடுங்கோல் மன்னன் ஒருவனுக்கு அஞ்சி வலிவற்ற குடி மக்கள் அவனுடைய கொடூரத்தன்மைக்கு ஆளாகிக் கிடக் கின்றனர். அவன் இடுகிற ஆணைகளையும், நடுநடுங்கிக் கொண்டு அவர்கள் நிறைவேற்றி வைக்கின்றனர். கொடுங் கோலாட்சியினின்று தங்களுக்கு வரும் துன்பங்களைக் குறைக் கும்படி முழந்தாளிட்டு அவர்கள் கெஞ்சிக் கேட்கின்றனர். அதே கொள்கையை அறிவிலிகள் கடவுளிடத்தும் வைக்கின் றனர். கடவுள் தம் விருப்பப்படி மக்களை சொர்க்கத்துக்கு அனுப்புகிறார்; அல்லது நரகத்தில் இடர்ப்படுத்துகிறார்.

அவரிடமிருந்து பிறக்கும் நரக தண்டனைக்குப் பயந்து அவரை வழுத்துவது கீழ்த்தரமான வழிபாடாகும். அதை வழிபாடு என்று சொல்லுவதா, அல்லது வேறு என்னென்று அழைப்பது என்பதுதான் கேள்வி. வழிபாடாக அதைக் கருதுமிடத்து அது மிகக் கீழ்த்தரத்திலிருக்கும் வழிபாடு என்று வைத்துக்கொள்ளவேண்டும். அன்பின் பொலிவு இன்னும் ஆங்கு உருவெடுக்கவில்லை என்று இயம்பவேண்டியிருக்கிறது. அன்பும் அச்சமும் ஒன்றோடொன்று முரண்படுபவைகள். வெளிச்சம் உள்ள இடத்தில் இருள் இல்லை. இருள் இருக்குமிடத்தில் வெளிச்சமில்லை. அதே விதத்தில் உள்ளத்தினுள் அச்சம் ஏதேனும் இருக்குமாகில் ஆங்கு அன்புக்கு இடமில்லை. ஆதலால் பயபக்தி என்னும் கோட்பாட்டுக்கு இடமெங்கே? ஆனால் அச்சத்தை அறவே வெல்லும் இயல்பு அன்புக்கு உண்டு.

சான்று ஒன்றின் மூலம் இதை விளக்குவோம். வீதியிலே இளம் தாய் ஒருத்தி போகிறாள். அவளைப் பார்த்துப் பயங்கரமான நாய் ஒன்று குலைக்கிறது. அவளைக் கடிக்க அது சீறி வருகிறது. அத்தகைய நெருக்கடி உண்டாகும் பொழுது அவள் அச்சம் கொள்கிறாள். அருகிலிருக்கும் ஏதேனும் ஒரு வீட்டுக்குள் பறந்தோடித் தன்னைப்பாதுகாத்துக்கொள்ள அவள் முயலுகிறாள். அதைத் தவிர வேறு எதையும் செய்யும் நிலைமையில் அவள் இல்லை. இனி, அடுத்தநாள் வீதியில் தன் குழந்தையுடன் அவள் உலாவிக்கொண்டிருக்கிறாள் என்று வைத்துக்கொள்வோம். சிங்கம் ஒன்று அக்குழந்தையைத் தாக்கித் தூக்கிக்கொண்டுபோகப் பாய்ந்து வருகிறது. அத்தகைய நெருக்கடியிலே அவள் செய்யக்கிடக்கும் கடமை யாது? குழந்தையைக் காத்தல் பொருட்டு சிங்கத்தின் வாயில் அகப்பட்டுக்கொள்கிற கஷ்ட

தசையில் தன்னை வைத்துக்கொள்ள அவள் சிறிதேனும் அஞ்சமாட்டாள். தனது அன்புக்குரிய குழந்தையைக் காப்பாற்றுதல் ஒன்றே அந்நெருக்கடியில் அவள் கொண்டுள்ள குறிக்கோளாகும். குழந்தையின்மீது வைத்துள்ள அன்பு சிங்கத்திடத்துக் கொண்டுள்ள அச்சத்தைவிடப் பெரியது. பெரிய அன்பு சிறிய அச்சத்தை வென்றுவிடுகிறது. பயத்தை அறவே வெல்லவல்லது அன்பு. அச்சம் எங்கிருந்து எப்படி உண்டாகிறது என்று நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். மனிதன் தன்னை ஒரு குமானுஷனைக் கருதி சுயநலத்தினால் தன்னை ஒரு தனி வியக்தியாகக் கற்பனை பண்ணிக்கொள்ளுவதால் அச்சம் உண்டாகிறது. உண்மையில் அண்டமென்னும் பூரணப்பொருளில் மனிதன் ஓர் அம்சமாக இருக்கிறான். கடலில் ஒரு சிறு பகுதியாக அலை இருப்பது போன்று இயற்கையென்னும் பேரமைப்பில் ஒரு சிறு பகுதியாக மனிதன் இருக்கிறான். ஆகவே இயற்கைக்கு அவன் புறம்பானவனல்லன். சுயநலத்தால் மனிதன் தன்னை இயற்கைக்குப் புறம்பானவனைக் கருதுவதால் அவனுக்கு அச்சமுண்டாகிறது. மற்ற உயிர்களிடத்திருந்து மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு தன்னைப் பிரித்தெடுத்துக்கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் சிறியவனாகிறான். சுயநலத்தால் மற்ற உயிர்களை எவ்வளவுக்கெவ்வளவு தன்னிடத்திருந்து வேறுபட்டவைகளென்று கருதுகிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் சிறியவனாகிறான். அப்படித் தன்னிடத்துச் சிறுமையையும், சுயநலத்தையும் வளர்க்குமளவு அச்சமும் அவனிடத்து அதிகரித்துக் கொண்டே போகும். தன்னை ஒன்றுக்கும் உதவாத அல்பன் என்று ஒரு மனிதன் கருதுவானாகில் அவனிடத்து அச்சம் உண்டாவது திண்ணம். தன்னைச் சிறியவன் என்று எண்ணு

கிற எண்ணத்தை மனிதன் அகற்றிவிடட்டும். சுயநல உணர்ச்சியைத் தன் உள்ளத்தினின்று அவன் ஓட்டிவிடட்டும். உயிர்களனைத்துக்கும் தனக்கும் இடையிலுள்ள பெருந் தொடர்பை அவன் மேலும் மேலும் எண்ணிப்பார்க்கட்டும். உயிர்களனைத்தும் தனக்குச் சொந்தம், தான் உயிர்களனைத்துக்கும் சொந்தம் என்னும் பேரியல்பை அவன் வளர்த்து வருவானாகை. அதன் விளைவாக அச்சம் என்னும் புன்மை அவன் உள்ளத்தினின்று அகன்று ஓடிவிடும். அனைத்துடன் தன்னை ஐக்கியப்படுத்துவது ஒன்றே அச்சத்தை அகற்றுதற்கு உற்ற உபாயமாகும். உள்ளத்தில் சிறிதளவாவது அச்சம் குடிகொண்டிருக்குமாகில் அவ்வுள்ளத்தினுள் மெய்யன்பு தோன்றுதற்கு இடமில்லை. அன்பும் அச்சமும் ஒன்றுக்கொன்று விரோதமானவை. ஒன்று இருக்குமிடத்தில் மற்றது இருக்காது. கடவுளிடத்து பக்திகொள்ளுகிறவர்கள் அவரிடத்து ஒருபொழுதும் பயம் கொள்ளலாகாது. "Do not take the name of the Lord thy God in vain"—"உன் இறைவனாகிய தெய்வத்தின் திருநாமத்தை வீணாக ஓதாதே; அல்லது வீணாகப்பயன்படுத்தாதே" என்பது இக் கோட்பாட்டின் மூலக் கருத்தாகும். கிறிஸ்துவ மதத்தில் ஏற்பட்டுள்ள பத்து ஆணைகளுள் இது ஒன்று. நீயே செய்து சாதிக்கக்கூடிய ஒரு செயலின் பொருட்டு இறைவனுடைய திருநாமத்தை ஓதி அதைச் சிறுமைப்படுத்தவேண்டாம். தக்க இடத்தில் தக்க செயலின் பொருட்டே இறைவனுடைய திருநாமத்தைப் பயன்படுத்து என்பது இவ் ஆணையின் உட்கருத்தாக இருக்கலாம். ஆனால் பக்தன் ஒருவனுக்கு இத்தகைய ஆணையானது நகைப்புக்குரியதாகிறது. பக்தி நெறியிலே தெய்வத்தைச் சிறுமைப்படுத்தக்கூடிய, அல்லது தெய்வ அபராதமாக அமையக்கூடிய செயல் யாது

உளது? 'எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன் செயலே' என்று பக்தன் பகர்கிறான். 'ஆட்டுவிப்பவனும் நீ, ஆடல் கண்டவனும் நீ' என்று பக்தன் பகர்கிறான். 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்றும் அவன் இயம்புகிறான். 'அவனன்றி ஓரணுவும் அசையாது என்னும் ஆப்தமொழி ஒன்று கண்டால் அறிவாவது ஏது, சில அறியாமை ஏது.........யாதும் உனையன்றி உண்டோ' என்றும் பக்தன் பரம்பொருளைப் புகழ்ந்து போற்றுகிறான். எனவே பகவானுடைய பெயரை வீணைகப் பகர்தல் என்பது பக்தனுக்குப் பொருளற்றது. எல்லா மனநிலைகளிலும் இறைவனுடைய திருநாமத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக ஓதுகிறானே அவ்வளவுக்கவ்வளவு அது நலன் தருகிறது. பிரார்த்தனைக்காகவென்று குறிப்பிட்ட தனி நேரம் பக்தனுக்கு இல்லை. அவன் நிற்கும்பொழுதும், நடக்கும்பொழுதும், இருக்கும்பொழுதும், கிடக்கும்பொழுதும், உண்ணும்பொழுதும், செயல்கள் பல புரியும்பொழுதும், இன்புற்றிருக்கும்பொழுதும், துன்புற்றிருக்கும்பொழுதும் யாண்டும் இறைவனுடைய திருநாமத்தையே ஓயாது ஓதிக்கொண்டிருக்கிறான். 'உன்னை மறந்தால் நான் உயிர் துறப்பேன்' என்றான் பக்தன் ஒருவன். கடவுளுடைய திருநாமத்தை அவன் ஓயாது ஓதுகிறான். ஏனென்றால் அவனுடைய அன்புக்கு இலக்காயிருப்பவர் கடவுள்.

பக்தியின் முக்கோணத்தில் மூன்றாவது கோணமாக அமைந்திருப்பது போட்டியின்மை. உலக வியவகாரங்களில் ஒருவனோடு ஒருவன் போட்டிபோடும் தன்மையுண்டு. காதலன் ஒருவன் தன் காதலியிடம் அன்பு கொள்கிறான். அதே காதலியிடத்தில் மற்றொருவன் அன்புகொண்டால் அங்குப் போட்டியுண்டாகிறது. ஒரு காதலன் மற்றொரு

காதலனிடத்துப் பொறாமைப்படுகிறான்; சீற்றம் கொள்கிறான். அத்தகைய போட்டிக்கோ பொறாமைக்கோ கடவுள் பக்தியில் இடமில்லை. 'அகண்டாகார சிவபோகமென்னும் பேரின்பத்தைப் புசிப்பதற்குச் சேரவாரும் ஜகத்தீரே' என்று கடவுள் பக்தியில் ஈடுபடுவதற்கு உலகனைத்தையும் பக்தன் அறைகூவி அழைக்கிறான். வாழ்க்கையிலே பெறுதற்கரிய பெருநிலை யாதோ அதைப் பெறுதற்கு பக்தன் பெருமுயற்சியெடுத்துக்கொள்கிறான். தான் பெறும் பேரின்பத்தில் மற்றவர்களும் கலந்துகொள்ளும்பொழுது அதில் அவன் பன்மடங்கு அதிகப்படியான ஆனந்தத்தை அடைகிறான். எப்பொருளை நாம் நேசிக்கிறோமோ அப்பொருள் ஒப்பு உயர்வற்ற பெரும் பொருள் ஆகும்பொழுதே நம்மிடத்துப் பேரன்பு உருவெடுக்கிறது. நிலையற்ற சிறிய பொருளிடத்துப் பேரன்பு கொள்ளுதல் என்பது பொருத்தமற்றது. சிறிய பொருள் ஒன்றனிடத்து ஒரு மனிதன் கொண்டுள்ள அன்பு பேரன்பு போன்று வெளிக்குக் காட்சி கொடுக்கலாம். ஆனால் அதனுள் புதைந்து கிடக்கும் பெருந் தத்துவத்தை நாம் துருவி ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரு மனிதன் மற்றொரு மனிதனை உள்ளன்போடு நேசிக்கிறான். அல்லது காதலர் இருவர் பரஸ்பரம் பேரன்புகொண்டு நேசிக்கின்றனர். பேரன்பு போன்று அது புறக்காட்சி தருகிறது. ஏனென்றால் நேசிக்கப்படும் பொருள் உண்மையில் பெரியபொருள் அல்ல. தாற்காலிகமாக அதைப் பெரிய பொருளாக அன்பன் எண்ணிக்கொள்கிறான். தன்னிடத்துள்ள அன்பை முறைதவறி நிலையற்ற பொருளின்கண் வைத்துவிட்டதாக அப்போது அவன் உணர்வதில்லை. தனது அன்பும் நிலைத்தது, தனது அன்புக்குரிய மற்றைய ஜீவாத்மனும் நிலைபேறு உடையவன் என்று கருதி இறுதியில் அம்மனிதன் ஏமாற்றமடைகிறான்.

ஏமாற்றம் அடைதற்கு முன்பு தான் கொண்டொழுகும் அன்பு நெறி நேரான உயர்ந்த நெறியென்றே அவன் இறுமாப்பு எய்துகிறுன்.

மிகக்கொடியதும், கீழானதுமான உயிர் ஒன்றனிடத்து ஒருவன் உள்ளன்பு கொள்ளுகிறுன். உயிர்களுள் மிக உயர்ந்த மற்ருென்றினிடத்து இன்னொரு மனிதன் உள்ளன்பு கொள்ளுகிறுன். உள்ளன்பு கொள்ளுதல் என்னும் கோட்பாடு இரண்டு மனிதருக்கும் ஒன்றேயாம். எப்பொருளை ஒரு மனிதன் உள்ளன்போடு நேசிக்கிருனே அப்பொருளினிடத்து அவன் கீழ்மை எதையும் காண்பதில்லை. ஆகவே கீழான உயிர் ஒன்றை உள்ளன்போடு நேசிக்கிற மனிதனுக்கு அது கீழான உயிராகத் தோன்றுவதில்லை. நலன் அனைத்தும் அதன்கண் திகழ்ந்திருப்பதாகவே உணர்கிருன். ஓர் உயிரின் கண் நலத்தைக் காணுவிட்டால் உள்ளன்போடு அவ்வுயிரை நேசிக்க யாருக்குமே இயலாது. ஏதேனும் ஒன்றை ஒரு மனிதன் முழுமனதோடும் முழு ஆற்றலோடும் நேசிக்க ஆரம்பித்து விடுவானுகில் அப்பொருள் அவனுக்குத் தெய்வம் அல்லது தெய்வம் போன்றது ஆகிறது. அது நலன் அனைத்தும் நிரம்பப் பெற்றதாகவும் கேடு ஒன்றும் இல்லாததாகவும் அம் மனிதனுக்குக் காட்சிகொடுக்கிறது. வாழ்க்கையில் அவன் கொண்டுள்ள லக்ஷியம் எதுவோ, அந்த லக்ஷியத்துக்கு இருப்பிடமாகவே தான் நேசிக்கும் உயிரைப் பொருட்படுத்துகிறுன். ஒவ்வொரு மனிதனும் தனது லக்ஷியத்தையே உண்மையாகவும், உறுதியாகவும் நேசிக்கிருன்.

கடவுள் இல்லையென்று உணருபவன் யாருமில்லை. ஒரு மனிதன் எதைத் தனக்கு மிக உயர்ந்த லக்ஷியம் என்று உணர்கிருனே அந்த லக்ஷியம் அவன் வணங்கும் தெய்வமாகிறது. அறிவிலி அல்லது அறிஞன், பாபி அல்லது

புண்ணியவான், ஆடவன் அல்லது மகளிர், கற்றவன் அல்லது கல்லாதவன், பண்பட்டவன் அல்லது பண்படாதவன் ஆகிய இத்தனைவித மாந்தர்களுள் ஒவ்வொருவனுக்கும் ஒப்பு உயர்வு அற்ற லக்ஷியமாக எது இருக்கிறதோ அது அவன் வணங்கும் கடவுள். அழகின் உச்சநிலை எது என்பதை ஒருவன் உணர்கிறான். மேன்மைகளுக்கு முடிந்த நிலை எது என்பதை மற்றொருவன் மனதில் கிரகிக்கிறான். ஆற்றல் படைத்திருப்பவர்களுள் பேராற்றலே வடிவெடுத்திருப்பவனை இன்னொருவன் மனதால் உணர்கிறான். பேரன்புக்கு உறைவிடம் எது என்பதை ஒருவன் ஓர்மைப்படுத்துகிறான். பேரறிவுக்கு இலக்காயிருப்பது எது என்பதை வேறொருவன் எண்ணிப்பார்க்கிறான். இந்த மாண்புகளனைத்தும் திரண்டு ஒன்றோடு ஒன்று பொருத்தமாக இணைக்கப்பெற்று எந்தப் பரமனிடத்து உறைந்துகிடக்கின்றனவோ அப்பரம்பொருளையே அன்புக் கடவுளென்றும், அன்புக்குரிய கடவுளென்றும் மாந்தரனைவரும் உணர்கின்றனர். இத்தனை விதமான மாண்புகளுக்கு வெவ்வேறு விதமான வடிவங்கள் கொடுத்து அவைகளை ஒப்பு உயர்வு அற்றவைகளாக உணரும் தன்மை மானுடர் மனதில் ஊறிக்கிடக்கிறது. அத்தகைய உணர்ச்சிகளில்லாத மன அமைப்பை எங்குமே காணமுடியாது. அப்பேருணர்வுத் தொகைகளையே மானுடர்கள் படைத்துள்ள விதவிதமான மனப்பான்மைகள் என்கிறோம். மானுட இயல்புகள் எண்ணிக்கையிலடங்காதவைகள். அவ் இயல்புகளெல்லாம் பல்வேறு செயல்களின் மூலம் தம்மை விளக்கிக் கொண்டிருக்கின்றன. எவைகளையெல்லாம் மேன்மை தங்கியவைகளென்று மானுடர் உணர்கின்றனரோ, அவைகளையெல்லாம் தங்களுடைய வாழ்க்கையின் வாயிலாக வெளிப்படுத்தவோ அல்லது நிலைநாட்டவோ அவர்

களெல்லோரும் முயன்று கொண்டிருக்கின்றனர். சமுதாயத்திலே நம்மைச் சுற்றிலும் பலவிதமான இயக்கங்களை நாம் பார்த்து வருகிறோம். மாந்தர் மனதில் கொண்டுள்ள உயர்ந்த லக்ஷியங்களை வாழ்க்கையில் உருவாக்குவதற்கே அவ்வியக்கங்கள் எல்லாம் செயல்புரிந்து வருகின்றன. மனதுக்குள்ளிருக்கும் பேருணர்வே வாழ்க்கைச் செயல்களின் வாயிலாக வெளியே உருவெடுத்து வருகின்றது. மனதுக்குள்ளே உதித்துக்கொண்டிருக்கும் இந்தப் பேருணர்வுக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லை. சூரியனிடத்திருந்து வெப்பம் ஓயாது வந்துகொண்டிருப்பது போன்று மனக்கோட்டத்தினின்று மேலாம் உணர்வுகள் மேலாம் லக்ஷியம் என்னும் பெயர் பெற்று வாழ்க்கையின் வாயிலாக ஓயாது வெளி உலகுக்கு வந்துகொண்டிருக்கின்றன. மானுடவர்க்கத்தினிடம் தென்படும் செயல்கள் யாவுக்கும் வேகத்தையும் வலிவையும் கொடுத்துக்கொண்டிருப்பது உள்ளத்தினுள்ளே இருக்கும் இப்பேருணர்வு ஒன்றேயாம்.

நல்வாழ்க்கையே வாழ்ந்து வருகிற மனிதனுக்கும் வாழ்க்கைத் தத்துவம் முழுதையும் அறிந்துகொள்ளுதற்கு ஒரு பிறவி போதாது. நூற்றுக்கணக்கான பிறவிகள் எடுத்துப் பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்ந்து பரம்பொருளுக்கும் தனக்குமுள்ள பேரிணக்கத்தை வையக வாழ்விலே வெளிப்படுத்த அவன் முயன்று வருகிறான். அம்முயற்சியிலே வெற்றியடைதற்கு அத்தனை பிறவிகளில் அவன் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருந்து பெரும்பாடுபட்டு வருகிறான். இப்படி அவன் பல் பிறவி, பல் பிறவி, பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு பெருமுயற்சி செய்தான பிறகு பேருண்மை ஒன்றை அறிந்துகொள்ளும் பக்குவம் அவனுக்கு வந்தமைகிறது. உயர்ந்த லக்ஷியம் ஒன்று மனதால் தெளிவுபட கிற

கிக்கப்படுகிறது. அந்த உயர்ந்த லக்ஷியத்தின் சொரூபமாகப் புறவுலகத்தைத் திருத்தியமைக்க நன்மக்கள் பலர் முயற்சியெடுத்துக்கொள்கின்றனர். அந்த முயற்சியில் தாங்கள் வெற்றியடைந்துவிட முடியும் என்றே அவர்கள் மனப்பூர்வமாக எண்ணி வருகின்றனர். தங்கள் எண்ணத்துக்கு ஏற்ப உலகில் அவர்கள் அரும்பாடுபட்டு சமூகசேவை செய்கின்றனர். ஆனால் அந்த சமூகமோ அவர்கள் எண்ணத்துக்கு ஏற்றபடி முற்றிலும் திருந்தியமைவதில்லை. அறவே திருந்தியமைந்துள்ள சமூக அமைப்பை ராமராஜ்யம் என்று இயம்புவது வழக்கத்திலிருந்து வருகிறது. கற்பனையால் கிரகிக்கப்படுகிற சீரிய ராமராஜ்யத்தைத் தசரதராமனே அமைத்துவைக்க இயலாதவன் ஆனான் என்பதுதான் பலருக்கு விளங்குவதில்லை. ஸ்ரீ ராமன், ஸ்ரீ கிருஷ்ணன், புத்தர் பெம்மான், ஏசுநாதர் போன்ற ஆற்றல் மிகப்படைத்திருந்த அருளாளர்கள் இம் மண்ணுலகில் தோன்றி அரும் பெரும் செயல்களைச் செய்திருக்கின்றனர். ஆயினும் உலகத்தை அடியோடு திருத்தியமைக்க அன்னவர்களுக்கே இயலவில்லை யென்றால் இனி வேறு யாருக்கு அது சாத்தியமாகும்? இக் கோட்பாட்டைச் சுருங்கச் சொல்லுமிடத்து மனதில் நாம் கிரகிக்கும் உயர்ந்த லக்ஷியத்தைப் புறவுலகிலே காணமுடியாது. மனதினுள் அந்த உயர்ந்த லக்ஷியத்தை மேலும் மேலும் பண்படுத்திக்கொண்டே போகலாம். மனம் பண்பாடடைகிறபொழுது அப் பண்பாட்டைப் புறவுலகில் காணும் மனநிலை ஆத்மசாதகனுக்கு வந்தமைகிறது. ஒரு மனிதனுக்குப் புறவுலகம் முழுதும் பரம்பொருள் சொரூபமாகத் தென்படுகிறதென்றால் அவன் தானே பரம்பொருள் சொரூபமாகத் திருந்தியமைந்திருக்கிறான் என்பது அதினின்று வெளியாகிறது. புறவுலகத்தை நல்லது என்றோ

கெட்டது என்றே பகரப்புகும் பொழுதெல்லாம் பகர்கிற மனிதன் தன் உள்ளத்திலிருக்கும் தரத்தைப் புறவுலகின் மீது பொருத்திவைத்து அங்ஙனம் பகர்கிறான். எனவே ஆத்மசாதகன் ஒருவன் செய்யக்கிடக்கும் முடிவான கடமை ஒன்று உள்ளது. தன்னைத்தானே அவன் முற்றிலும் திருத்தியமைத்துக்கொள்ளட்டும். அப்படித் திருந்தியமைந்துள்ள தன் சொரூபத்தைத்தான் அவன் புறவுலகில் காண்கிறான். தனது உள்ளத்தில் ஒளிர்ந்துகொண்டிருக்கும் உயர்ந்த லக்ஷியத்தினிடத்து அந்த ஆத்ம சாதகன் அளப்பரிய அன்பு வைப்பானாகில் அவன் சித்த புருஷன் ஆகிறான். பிரேமை பக்தியில் ஊறியவன் என்று அவனைத் தான் பகரவேண்டும். அப்பிரேமை பக்தி அவன் உள்ளத்தில் உயர்வுற உயர்ந்த திருப்தியாகத் திகழ்கிறது. அப்பொழுது உலக சம்பந்தமான அன்புகளெல்லாம் அப்பேரன்பில் லயமாகின்றன. பிரேமை பக்திக்குப் பெரு விளக்கமாக அந்த சித்த புருஷன் திகழ்கிறான்.

தன் மனதிலிருப்பதையே மனிதன் புறவுலகில் காண்கிறான் என்பதற்கு நல்ல சான்று ஒன்றை எடுத்துக்கொள்ளலாம். பெண்பாலர்களுள் அழகிலே உச்சநிலையை யெட்டியவள் மன்மதனுடைய மனைவியாகிய ரதி என்பது ஐதிகம். உலகத்தவர்களுள் அவலக்ஷணமே வடிவெடுத்துள்ள மங்கை ஒருத்தி இருக்கிறாளென்று வைத்துக்கொள்வோம். அந்த மங்கையினிடத்து ஆடவன் ஒருவன் எப்படியோ காதல் கொண்டுள்ளானென்றும் வைத்துக்கொள்வோம். அந்தக் காதலனது அன்பு நாள்தோறும் வளர்ந்துகொண்டே போகிறது. பிறகு அது பெருநிலையை எய்துகிறது. அந்தக் காதலனுடைய காட்சியில் தான் காதலிக்கும் மங்கையானவள் ஒருபொழுதும் அவலக்ஷணம் வாய்ந்

தவளல்லள். அவனுடைய கண்ணுக்கு அவள் ரதிபோன்றே தென்படுகிருள். காமத்துக்குக் கண் இல்லை என்னும் கோட்பாடு ஒன்று உண்டு. அக்கோட்பாட்டின் உட்கருத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டும். காமத்துக்கு விவேகம் என்னும் கண் இல்லை. ஆனல் அதனிடத்து முறைதவறி வைக்கப்பட்ட அன்பு என்னும் கண் இருக்கிறது. அந்த அன்புக்கண்கொண்டு காதலன் ஒருவன் உண்மையில் அவலக்ஷணமான தன் காதலியைக் காண்கிருன். அவனுடைய காட்சிக்கு அவள் பேரழகே வடிவெடுத்திருப்பவளாகப் புலப்படுகிருள். அப்படி அவன் காணும் காட்சிதான் நமக்கு அன்புத் தத்துவத்தை விளக்கிக் காட்டுகிறது. அன்பே வடிவெடுத்திருக்கும் ஒருவன் தன் மனதில் யாரை அழகுத் தெய்வம் என்று கருதுகிருனே அவள் அவனுக்கு அழகுத் தெய்வமாகிருள். மக்களுள் ஆடவர் மகளிர் ஆகிய இருபாலாரிடத்தும் அழகைப்பற்றிய கொள்கை மனதில் புதைந்திருக்கிறது. அந்த அழகுக் கொள்கையை அவர்கள் புறத்தில் ஏதேனும் ஒரு உயிரிடத்துப் பொதிய வைக்கின்றனர். பிறகு அப்படித் தாங்கள் காணும் அழகனை, அல்லது அழகியைத் தெய்வத்தைப் பாராட்டுவது போன்று போற்ற ஆரம்பிக்கின்றனர். அப்படித் தாங்கள் போற்றும் உயிர்களிடத்து உண்மையில் அப்பேரழகோ, அன்புக்கு இலக்காகும் பரிபாகமோ இல்லை. இல்லாத சிறப்பு ஆங்கு இருப்பதாக எண்ணித் தங்களுடைய அன்பை ஆங்கு வாரிக் கொட்டி இறுதியில் ஏமாற்றமடைகின்றனர். மக்களுள் ஒரு சிலர் அன்புக்குப் புறம்பானவர்கள் உண்டு. மற்ற உயிர்களை நேசிப்பதற்கு மாருகக் கொடூரத்தன்மையும் கொலைபுரியும் இயல்பும் உடையவர்களாக இருக்கிருர்கள். அவர்கள் உண்ணும் உணவும் அரக்கர்கள் பெறும் உணவாகிறது.

அத்தகைய வல்லியல்பு படைத்தவர்கள் வணங்கும் வன தேவதைகள் சில உண்டு. மக்களாகிய தங்களிடத்துள்ள கொடூரத்தன்மையைத் தாங்கள் வணங்கும் சிறு தெய்வத்திடத்தும் இருப்பதாக அவர்கள் பாவிக்கின்றனர். தாங்கள் விரும்புகின்ற மது, மாமிச வகைகளிடத்துத் தங்கள் தெய்வத்துக்கும் பெருவிருப்பம் இருப்பதாக அவர்கள் எண்ணி வருகின்றனர். இப்படி அவரவர் மனதிலிருப்பதைத்தான் புறத்திலுள்ள உயிர்களிடத்தும் சிறு தேவதைகளிடத்தும் இருப்பதாக மக்கள் கற்பித்து வருகிறார்கள். தங்கள் உள்ளத்திலிருக்கும் இயல்புக்குப் புறம்பான எதையும் புறத்தி லுள்ள உயிர்களில் அவர்கள் காண்பதில்லை. உலகப் பொருள் களையும் உயிர்களையும் போற்றுகிறவர்களெல்லாம் இதே தவறுதலைத் திரும்பத் திரும்பச் செய்து வருகின்றனர். வாழ்க்கையில் திரும்பத் திரும்ப அவர்கள் ஏமாற்றமும் அடைந்து வருகின்றனர். அப்படிப் பல தடவை ஏமாற்ற மடைந்து துயரத்துக்கு ஆளாகி இறுதியில் அவர்கள் அறிந்து கொள்ள வேண்டிய உண்மையொன்று இருக்கிறது. தங்கள் உள்ளத்தில் வேண்டியவாறு பேரன்பு ஊற்றெடுக்கட்டும். மேலும் மேலும் அவர்கள் தங்கள் உள்ளத்தைப் புனிதப்படுத்திக்கொண்டே வரட்டும். அழகையும், ஆற்றலையும், அறிவையும், அன்பையும் அவர்கள் வேண்டியவாறு வளர்த்துக் கொண்டே வரட்டும். அப்படி வளர்க்கப்பெற்ற அன்பும் ஏனைய மேன்மைகளும் பரம்பொருளாகிய கடவுளுக்கே யாண்டும் உரியவைகள் ஆகட்டும். அப் பரமன் பக்தனுடைய உள்ளத்தில் இலங்குகின்றார். புறத்திலும் அவர் பரிபூரண மாக நிறைந்திருக்கிறார். மனிதனிடத்து மலர்ந்துள்ள பேரன் பெல்லாம் அப் பரமனுக்கே உரியதென்று அதை அவரிடத்தே வைக்கக் கற்றுக்கொண்டவன் வாழ்க்கையில் இறுதி

யாகக் கற்றுக்கொள்ளவேண்டிய பாடத்தைக் கற்றுக் கொண்டவனுகிருன். தன் உள்ளத்தில் ஒளிர்வது தெய்விக அன்பு என்னும் பெரிய லக்ஷியம். தான் போற்றும் தெய்வமோ அகண்டமாயுள்ள பூரணப்பொருள். அதைப் போற்றும் பக்தன் பூரணத்தில் ஒன்றுபடுகிருன்.



## 18. அன்புக்கடவுளுக்கு அவரே விளக்கம்

பக்தன் ஒருவன் தான் கொள்ளும் பக்தியில் மேல் நிலைக்குப் போகுமளவு சுயநலப்பற்று அவனுடைய உள்ளத்தினின்று அகன்று போகிறது. 'நான் வணங்கும் தெய்வமே, நான் உனக்கு இத்தகைய கைங்கரியம் செய்கிறேன். அதற்குக் கைம்மாருக எனது கோரிக்கையை நீ நிறைவேற்றி வை' என்று அவன் கடவுளோடு வாணிபம் பண்ணுவதில்லை. 'நான் கடவுளை வழுவாது வழுத்தினுல் அவர் எனக்கு என்ன நலன் செய்வார்?' என்று கணக்குப் பார்க்கும் தன்மை தூய பக்தனுடைய மனதினின்று விலகிப் போய்விடுகிறது. 'தெய்வத்தை நான் போற்ருவிட்டால் அவர் என்னைத் தண்டிப்பாரோ!' என்னும் அச்சமும் அவனுக்கு உண்டாவதில்லை. பின்பு, அவனுடைய உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பெருகிவரும் குறிக்கோள்தான் என்ன? பரம்பொருளிடத்து அப்பக்தன் செய்யும் விண்ணப்பம் ஒன்று உண்டு. 'எனது உடல், பொருள், ஆவியெல்லாம் இறைவா, நான் உமக்கே உவந்து அளித்துவிடுகிறேன். உம்மிடமிருந்து நான் எதையும் வேண்டேன். என்னையே உமக்கு உரிமை ஆக்குவதனுல் உம்மிடமிருந்து இனி நான் கேட்பதற்கு ஒன்றுமில்லை. நானே எனக்குரியவனல்லன். ஆதலால் இனி எதை எனக்காகவென்று நான் உம்மிடமிருந்து கேட்பது!' இத்தகைய தீவிர நிலையைப் பக்தன் ஒருவன் அடையுங்கால் அவன் கடைப்பிடிக்கும் பக்தி நெறியானது பக்தியின் பரிபூரணநிலை என்னும் குறியை யெட்டியதாகிறது. பக்தியினின்று உதிக்கும் அபயம் அல்லது எதற்கும் அஞ்சாமை என்னும் பரிபூரணநிலை அவனுக்கு வந்தமைகிறது. அப்பெருநிலையை யடைந்துள்ள பக்தனுடைய அன்பு பின்பு சிறுமை எதிலும் கட்டுண்டு போவ

தில்லை. 'என் வணக்கத்துக்கு உரியது இது, புறம்பானது அது, என்று பாகுபடுத்தும் குறைநிலையை அவன் கடந்தவனாகிறான். அனைத்தையும் தன்னகத்து அடக்கும் பேரன்புக்கு உறைவிடமாக அவ்வன்பன் இலங்குகிறான். எல்லை மருவாததும், அலகிலாததுமான பேரன்பு அவனிடத்திருந்து பொழிந்துகொண்டிருக்கிறது. திரண்ட பேரன்பு சொரூபமாக அவன் திகழ்கிறான். இந்த உச்சநிலையை யெட்டியிருக்கிற பக்தனுக்குப் பின்பு ஆராதனைக்குரிய விக்கிரகங்களும், சின்னங்களும், மூர்த்திகளும் பொருளற்றவைகளாகின்றன. வழிபாட்டுக்கு இனி அவைகள் தேவையில்லை. பிற பொருள்களின் துணையின்றி சுயஞ்சோதியாய் சூரியன் பிரகாசிப்பது போன்று பிரேமை பக்தியில் திளைத்திருப்பவன் பேரன்பு சொரூபமாக விளங்குகிறான். பராபக்தியின் சிகரம் என இந்நிலையைப் போற்றுகிறோம். அனைத்தையும் தன்னகத்து அடக்கும் அகண்டாகாரப் பெருநிலை இதுவாம்.

இத்தகைய பேரன்புப் பெருநிலையை யடைதற்கான நெறிகள் பலவாம். அவைகளிற் பல நெடுந்தூரமானவைகளென்று இயம்பலாம். பக்தி மார்க்கங்களிலே உயிர்களனைத்தும் பேரன்புக் கடவுளை நோக்கிப் பெரும் பயணங்கள் போய்க்கொண்டிருக்கின்றன. அந்த யாத்திரை வாசிகள் போய்ச்சேர வேண்டிய குறி நெடுந்தூரத்திலிருக்கிறதெனினும் பயணம் போய்க்கொண்டிருக்கும் நெடுவழிகளிலும் அவ்வன்பர்களிடத்து வெவ்வேறு படித்தரங்களில் அன்புமிளிர்ந்துகொண்டிருப்பதைக் காணலாம். ஒரு பக்தனிடத்திருக்கும் அன்பு மற்றொரு பக்தனிடத்திருக்கும் அன்பைவிடப் பன்மடங்கு மேலானதாக இருக்கலாம். மலைச்சிகரத்தை நோக்கி நடப்பவர்கள் வெவ்வேறு இடங்களில் தென்படு

கிறார்களென்றாலும் அவர்களெல்லாரும் அடிவாரத்தை விட்டுப் பல படிகள் மேல்நோக்கிச் சென்றவர்களாகிறார்கள். பக்தி மார்க்கத்துக்கு அக்கோட்பாடு பெரிதும் பொருந்தும். சற்று ஏறத்தாழ உயிர்கள் யாவும் அன்பிலே ஊறிவளர்ந்தவர்களாக இருக்கிறார்கள். அன்பு நெறியிலே மேல்நோக்கிப் போய்க்கொண்டிருப்பவர்களுக்கு ஒவ்வொரு படித்தரத்திலும் வெற்றியே வந்து வாய்க்கிறதென்று பகரலாகாது. வெற்றிகளும் தோல்விகளும் எண்ணிக்கையிலடங்காதவைகளாக மாறி மாறி அமைந்துகொண்டேயிருக்கின்றன. திரும்பத் திரும்பத் தோல்விகளே வந்து வாய்த்த காலையிலும் அன்பு என்னும் குறியைப் புறக்கணிப்பார் யாருமில்லை. உள்ளத்தினுள்ளே ஒளிர்ந்து கொண்டிருக்கும் அன்பை உறுதிப்படுத்துதற்கே புறவுலகில் தென்படும் பொருள்கள் ஒன்றன் பின் ஒன்றாக அன்புக்கு இலக்காக்கப்படுகின்றன. குழந்தைப் பருவத்திலிருந்து விருத்தாப்பியம் வரையில் ஜீவன் ஒருவன் தனது அன்புக்கு இலக்காக்கியவைகளையெல்லாம் சிறிது எண்ணிப் பார்ப்போம். பொம்மைகளில் குழந்தை ஒன்று வைக்கும் அன்பு அளப்பரியது. அக்குழந்தையின் காட்சியில் பொம்மை ஒன்று பேரன்புக்கடவுளாகவே காட்சிகொடுக்கிறது. சிறிதுகாலத்துக்குப் பிறகு, அப்பொம்மை அன்புக்குரியது அல்லாததாகப் புறக்கணிக்கப் படுகிறது. வேறு விளையாட்டுக் கருவிகளிடத்தோ விளையாட்டுக் குழந்தையினிடத்தோ அன்பானது இடம் மாறிப் போய்விடுகிறது. பின்பு உற்றார் உறவினர் என்பாரிடத்து அவ்வன்பு செலுத்தப்படுகிறது. தக்க பருவத்தில் ஒருவனுக்கும் ஒருத்திக்குமிடையில் காதலாக அவ்வன்பு வடிவெடுக்கிறது. வயது முதிரும்பொழுது பெற்றெடுத்த மக்களிடத்து அது இடம் மாறிப்போகிறது. முதுமையில்

இன்னும் பல லட்சியங்களில் அவ்வன்பு புகுந்துகொள் கிறது. பிறந்தது முதல் சாகும் வரையில் எத்தனை பொருள் கள், எத்தனை உயிர்கள், எத்தனை கோட்பாடுகள் மாறி மாறி ஒருவனுடைய அன்புக்கு இலக்காக இருந்து வருகின்றன என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். அவையாவும் அன்பு நெறியிலே செல்லுகின்றவனுக்கு அந்தந்தப் படித்தரத்தில் பயன்பட்டு வந்திருக்கின்றன என்பதை நாம் மறந்துவிடலா காது. அன்புக்கு இலக்காக இருக்கும் பொருள்களும், உயிர்களும் நாளடைவில் ஏன் புறக்கணிக்கப்பட்டன என் னும் கேள்வி இயல்பாகவே ஈண்டு பிறக்கிறது. அன்பைப் பற்றிய கொள்கை உள்ளத்தில் பொங்கிக்கொண்டிருக்கிறது. புறத்திலிருப்பவை அவ்வன்புக்கு முற்றிலும் பொருத்தமான வைகள் எனக் கருதப்படுகின்றன. அப்படி அன்பைச் செலுத்திப் பார்க்குமிடத்துப் புறப்பொருள் உள்ளத்தில் ததும்பும் அன்புக்கு முற்றிலும் பொருத்தமானதாக இல்லை என உணரப்படுகிறது. ஆதலால்தான் அன்புக்கு இலக் காக இருப்பவைகள் மாறி மாறித் தெரிந்தெடுக்கப்படுகின் றன. அம் முயற்சியில் வெற்றியாகத் தென்படுவது தோல்வி யாக முடிவுறுகிறது. இளமையில் நேசிக்கப்படும் பொருள் முதுமையில் வெறுப்புக்குரியதாகிறது. இப்படிப் பிறவிகள் பல எடுத்து எண்ணிக்கையிலடங்காத புறப் பொருள்கள் பலவற்றை அவன் நேசித்துப் பார்த்தாய் விட்டது. அதன் பிறகு அவனுடைய உள்ளத்தினுள்ளே இன்னும் ஓர் உணர்வு உதயமாகிறது. உள்ளத்தினுள்ளே அகண்டாகாரமாகத் திரண்டு எழும் பேரன்புக்குப் பொருத் தமான இலக்காகப் புறப்பொருள் எதுவும் இருக்க முடியாது என்னும் தெளிவு இறுதியில் வருகிறது. புறப்பொருள்கள் யாவும் எல்லைக்குட்பட்டிருக்கும் ஐம்பொறிகளுக்குப் புலனு

கின்றன. ஆதலால் அவைகளும் எல்லைக்குட்பட்டவைகளா கின்றன. ஆனால் உள்ளத்தில் ஊற்றெடுக்கும் அன்போ அந்த உள்ளத்துக்குள் அடங்காது அகண்டாகாரத்தில் விரி வடைகிறது. எல்லை மருவாத கடலுக்குள் மலைகள், மடுவுகள், பள்ளத்தாக்குகள், சமவெளிகள் ஆகிய யாவும் மறைந்து பட்டுப்போவது போன்று பக்தனுடைய உள்ளத்திலே வியாபகமாகிவரும் பேரன்புக் கடலினுள் பிரபஞ்சப்பொருள் களனைத்தும் ஒடுங்கிவிடுகின்றன. அண்டபகிரண்டங்களை யும் கடந்ததாக அப்பேரன்பு வியாபகமாகிறது. கரை காணாத பேரன்பு சொரூபமாகப் பக்தன் வடிவெடுக் கிறான். பேரன்புக் கடவுளிலே அவன் லயமாகிறான். அதன் பிறகு அவனுக்கும், அவன் போற்றும் அன்புக்கடவு ளுக்குமிடையில் எந்தவிதமான வித்தியாசத்தையும் காண முடியாது. விறகுக்கட்டை தானே தீயாவதுபோன்று பக்தன் ஒருவன் பராபக்தியில் தெய்வ சொரூபமாக மாறி யமைகிறான். உயிர்க்குயிராய், மெய்ம்மைக்கு மெய்ம்மையாய், பேரன்பே வடிவாய் அவ்வன்பன் மிளிர்கிறான். இப்பெரு நிலையை அடைந்தான பக்தனிடத்து சிறுநிலையில் இருக்கின் றவர்கள் கிளப்புகின்ற கேள்விகள் எழ இடமில்லை. கடவுள் இருக்கிறாரென்று நிரூபித்துக் காட்டமுடியுமா என்னும் கேள்வியைக் கீழ்நிலையிலிருப்பவன் கேட்கிறான். கடவுள் சர்வசக்திமான் என்பதை எப்படி ஊர்ஜிதப்படுத்தமுடியும் என்று இன்னொருவன் கேட்கிறான். கடவுள் சர்வக்ஞன் அல்லது முற்றிலும் உணர்ந்தவர் என்பதற்கு அத்தாட்சி எங்கே என்று வேறொருவன் கேட்கிறான். இக்கேள்விக ளெல்லாம் பராபக்தியின் உச்சியை யெட்டியவனுக்குப் பொருளற்றவைகளாம்.

நம் அனைவர்க்கும் தெரிந்துள்ள ஒன்றை மாதிரியாக வைத்துக்கொண்டு அன்புக்கடவுளை அறிந்துகொள்ள நாம்

முயலலாம். கைக்குழந்தை ஒன்றிருக்கிறது. அது முற்றிலும் அன்பு சொரூபம். உற்றுரென்றும் வேற்றுரென்றும் அது பாகுபடுத்துவதில்லை. தன்னைப் பராமரிப்பவரிடத்தும், தன்னைக் கொல்ல வருபவரிடத்தும் அது ஒரே அன்பு சொரூபமாக இருக்கிறது. அது அப்படி அன்பு சொரூபமாயிருப்பது அனைவருக்கும் கண்கூடானது. குழந்தையினிடத்து அன்பு இருக்கிறதா என்னும் கேள்வி பிறப்பதற்கே இடமில்லை. அக்குழந்தையையும், அதனூடு இலங்கும் அன்பையும் பிரித்துவைக்க நமக்கு இயலாது. அதைவிடப் பன்மடங்கு மேலானது பிரேமை பக்தி சொரூபமாயிருக்கும் பக்தன் உணர்கிற பேரன்புக்கடவுள். பக்தன் கொள்ளும் நாட்டங்களனைத்தும் அப்பேரன்புக் கடவுள் உணர்விலே பூர்த்தியாகின்றன. அதற்குமேல் அவனால் அடையப் பெறுதற்கு உரியது வேறொன்றுமில்லை. அந்த அன்புக் கடலிலே அவன் நித்தியதிருப்தனாய் இருக்கிறான். பேரன்பை அந்த பக்தன் எட்டியுள்ளானா, அதை அவன் மற்றவர்களுக்கு விளக்கிக்காட்ட முடியுமா என்னும் கேள்வி எழுதற்கே ஆங்கு இடமில்லை. 'அன்புக் கடவுளை நான் அடைந்திருக்கிறேனா' என்கின்ற ஐயம் அவனுடைய உள்ளத்தில் உதிப்பதும் கிடையாது. நேசிக்கிற பக்தனும், நேசிக்கப் பெறுகிற பகவானும் பேரன்பில் ஒன்றுபடுகின்றனர். அன்புத் தெய்வம் கண்கூடாகத் திகழுதற்கு அன்பன்பால் மிளிரும் பேரன்பே அத்தாட்சியாம்.

அன்பு நெறியல்லாது வேறு நெறிகளிலே கடவுளை நோக்கிச் செல்லுகின்றவர்கள் அப்பரம்பொருளை ஒரு பெரிய நியாயாதிபதியாக நினைப்பதுண்டு. மக்கள் செய்கின்ற பாப புண்ணியங்களை யெல்லாம் சீர்தூக்கிப் பார்த்து வினைக்கேற்ற வெகுமதியோ, அல்லது தண்டனையோ விதித்து

வரும் தெய்வத்தைக் குறித்துக் கேள்விகள் பல எழுதற்கு இடமுண்டு. அத்தகைய நியாயாதிபதிக் கடவுள் ஒருவர் இருக்கிருரென்பதற்கு வேண்டியவாறு சான்றுகளை எடுத்துச் சொல்லலாம். அத்தகையவர் ஒருவர் இல்லையென்பதற்கும் சான்றுகளை ஏராளமாக எடுத்து ஓதலாம். பக்திக்குப் புறம்பான சிறு நெறிகளிலே செல்லுகிறவர்கள்தான் கடவுள் ஒருவர் இருக்கிருரென்றும் இல்லையென்றும் ஏராளமாக விவாதிக்கின்றனர். ஆனல் பிரேமை பக்தியை யெட்டிய பக்தன் ஒருவனுக்கு அத்தகைய விவாதங்களெல்லாம் பொருளற்றவைகள். மனிதனுடைய நன்மை தீமைகளைப் பொருட்படுத்தும் கடவுள் ஒருவரைப்பற்றி நினைக்க பக்தனுக்கு அவகாசமில்லை. அன்பே கடவுள் என்னும் பேருண்மை அந்த பக்தன் மூலம் ஓயாது பொழிந்து கொண்டிருக்கிறது. சூரியனை நேரே காண்பவர் உள்ளத்தில் சூரியன் உண்டா என்னும் கேள்வி எழுவதில்லை. அங்ஙனம் அன்பு நெறியிலே சென்று அன்பு என்னும் குறியை யெட்டியுள்ள அன்பனுக்கு யாவும் அன்புக்கடவுள் சொரூபமாம்.

न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति
आत्मनस्तु कामाय पतिः प्रियो भवति ।

ந வா அரே பத்யுः காமாய பதிः ப்ரியோ பவதி
ஆத்மனஸ்து காமாய பதிः ப்ரியோ பவதி

"கணவன் நேசிக்கப்படுவது கணவனின் வடிவத்தை முன்னிட்டல்ல; கணவனின் வடிவத்தில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது."

न वा अरे जायायै कामाय जाया प्रिया भवति
आत्मनस्तु कामाय जाया प्रिया भवति ।

ந வா அரே ஜாயாயை காமாய ஜாயா ப்ரியா பவதி
ஆத்மனஸ்து காமாய ஜாயா ப்ரியா பவதி

*"மனைவி நேசிக்கப்படுவது மனைவியின் வடிவத்தை முன்னிட்டல்ல; மனைவியின் வடிவத்தில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது."*

न वा अरे लोकानां कामाय लोकाः प्रिया भवन्ति
आत्मनस्तु कामाय लोकाः प्रिया भवन्ति ।

ந வா அரே லோகானும் காமாய லோகா: ப்ரியா பவந்தி
ஆத்மனஸ்து காமாய லோகா: ப்ரியா பவந்தி

*"உலகங்கள் நேசிக்கப்படுவது உலகங்களின் வடிவங்களை முன்னிட்டல்ல; உலகங்களின் வடிவங்களில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது."*

न वा अरे देवानां कामाय देवाः प्रिया भवन्ति
आत्मनस्तु कामाय देवाः प्रिया भवन्ति ।

ந வா அரே தேவானும் காமாய தேவா: ப்ரியா பவந்தி
ஆத்மனஸ்து காமாய தேவா: ப்ரியா பவந்தி

*"தேவர்கள் நேசிக்கப்படுவது தேவர்களின் வடிவங்களை முன்னிட்டல்ல; தேவர்களின் வடிவங்களில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது."*

न वा अरे सर्वस्य कामाय सर्वं प्रियं भवति
आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति ।

ந வா அரே ஸர்வஸ்ய காமாய ஸர்வம் ப்ரியம் பவதி
ஆத்மனஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி

*"யாவும் நேசிக்கப்படுவது அதனதன் வடிவத்தை முன்னிட்டல்ல; அதனதன் வடிவத்தில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது."*

ஈண்டு ஆத்மன் என்று பகரப்படுவது பரமாத்மனேயாம். அவர் ஒருவரே அன்புக் கடவுள். அவர்தான் இத்தனையும் ஆயிருக்கிறார். சர்க்கரையால் செய்யப்பட்டுள்ள பொம்மை யானது எல்லாப் பக்கத்திலும் தித்திப்பது போன்று பரமாத்மாவினின்று வந்துள்ள யாவும் அப் பரமாத்மாவின் தன்மையை உடைத்திருக்கின்றன. அவர் அன்புத் தெய்வம். ஆதலால் அவரிடத்திருந்து வந்துள்ள யாவும் அன்பு வடிவிலே இலங்குகின்றன. நாம ரூபத்தில் பற்று வைக்காது நாமரூபத்துக்கு அடிப்படையாயிருக்கும் வஸ்துவிடத்துப் பற்று வைத்துப் பழகினால் அன்புத் தெய்வமாகிய பரமாத்மாவின் சான்னித்யமே எங்கும் விளங்கும். அதை அனுபூதியில் கண்டறியும் பக்தனிடத்து அப்பேரன்பு அல்லது பிரேமை பக்தி சிறப்புற்று விளங்குகிறது. பிரேமை பக்தியை இன்னும் எட்டாத பொதுமக்கள் அந்தப் பக்தனிடத்திருந்தே அன்புத் தெய்வத்தைப் பெரிதும் உணர்ந்துகொள்ள முடியும்.

மானுடர்பால் தென்படும் இயக்கங்களை யெல்லாம் ஆராய்ந்து பார்ப்பவர்கள் சிலர் இருக்கின்றனர். அவர்கள் தங்கள் அறிவுக்கு எட்டியபடி இந்த இயக்கங்களை யெல்லாம் பொருள்படுத்தி யிருக்கின்றனர். சுயநலம் ஒன்றுதான் எல்லாவிதமான இயக்கங்களுக்கும் மூலகாரணமாயிருக்கிறது என்னும் முடிவுக்கு அவர்கள் வந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் செய்துள்ள முடிவை நாம் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். சுயநலப்பற்றாக வடிவெடுத்திருக்கும் மனநிலை அன்புக்குப் புறம்பானதல்ல. சுயநலப் பற்றுதலில் திகழ்வதும் அதே அன்புதான். ஆனால் அவ்வன்பு அனைத்தையும் தன்மயமாக ஆக்கிக்கொள்ளுதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட ஒரு வடிவத்தையும் உயிர் வாழ்க்கையையும் மட்டும் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்கிறது. சமஷ்டி அல்லது யாவையும்

ஒரே சொரூபமாகக் கருதுகின்றவர்களுக்கு வியஷ்டி அல்லது குறிப்பிட்ட ஒரு சிறுபகுதியின்கண் தனிப்பற்று வந்து குறுக்கிடுவதில்லை. அன்புக்கு வியஷ்டி என்னும் சிறிய எல்லை கட்டுகிறபொழுது அதற்குச் சுயநலப் பற்று என்னும் பெயர் தருகிறோம். கடல் முழுதையும் காட்சியில் எடுத்துக்கொள்ளுதற்கு மாறாகச் சிற்றலை ஒன்றை மட்டும் கருத்தில் வைப்பதற்கு ஒப்பாகிறது சுயநலப்பற்று. அறியாமையில் உழலும் மனிதன் ஒருவன் தன்னை ஒரு சிற்றலையாக வைத்துக்கொள்கிறான். ஆனால் கடலுக்கு அந்நியமாகச் சிற்றலையில்லை. சமஷ்டிக்கு அந்நியமாக வியஷ்டியில்லை. 'ஆதிபகவன் முதற்றே யுலகு.' ஆதிபகவனுக்குப் புறம்பாக உலகமில்லை. அந்த ஆதிபகவன் அன்பு சொரூபம். அவனை நேசிக்கும் பக்தனும் அன்பு சொரூபம். அன்பிலே பக்தனும், பகவானும் ஒன்றுபடுகின்றனர். இப்படிப் பூரணத்தை நேசிக்காது அதில் ஒரு சிறு பகுதியை மட்டும் நேசிப்பது அறியாமையின் விளைவு. சுயநலப்பற்று என்னும் குறுகிய அன்பு அறியாமையினால் வருகிறது. உலகனைத்தும் ஆகியிருப்பவர் இறைவன் ஒருவரே. அந்த இறைவன் அன்பு வடிவினன். ஆதலால் அவரிடத்திருந்து தோன்றியுள்ள அனைத்தும் அன்பு வடிவமாம். தோன்றியுள்ள யாவும் அன்பு வடிவமாயிருப்பதுதான் அவைகளைப்பற்றிய உண்மை. விருப்புக்குரியது எது என்றும், வெறுப்புக்குரியது எது என்றும் பாகுபடுத்துவதெல்லாம் அறியாமையின் செயலாம்.

முழுப்பொருளாயிருப்பவர் கடவுள். அவர் சொரூபத்தில் ஒரு சிறு பகுதியாயிருப்பது பிரபஞ்சம். கடவுளை நேசிக்கக் கற்றுக்கொண்டவன் பிரபஞ்சத்தையும் நேசிப்பவன் ஆகிறான். முழுமுதற் பொருளிடத்து அன்பு வைக்கிறவன் அதன் சிறு சிறு பகுதிகளிடத்தும் அன்பு

வைப்பவன் ஆகிறான். முழுதுமாயிருக்கும் பூரணப் பொருளே பக்தன் போற்றும் அன்புத் தெய்வம். அந்த அன்புத் தெய்வத்தின் பலதரப்பட்ட தோற்றங்களாக ஏனைய தெய்வங்கள் இலங்குகின்றன. பரலோகத்திலிருக்கும் பிதாக்களாக சமய வாதிகள் பலர்க்கு அப்பூரணப்பொருள் தென்படுகிறார். அண்டங்களை யெல்லாம் ஆட்சிபுரியும் இறைவர்களாக இன்னும் பல சமய வாதிகளுக்கு அவர் காட்சி கொடுக்கிறார். அவரவர்க்குரிய உலகங்களைப் படைத்துள்ள சிருஷ்டி கர்த்தாக்களாக இன்னும் பல சமயவாதிகளுக்கு அதே பெரிய பொருள் தோன்றிக்கொண்டிருக்கிறார். எண்ணிக்கையி லடங்காத கொள்கைகளும், கோட்பாடுகளும்,சமய நூல்களும் தோன்றுதற்கு முகாமையாக இருப்பவரும் அவரே. பராபக்தியை யெட்டாத கீழ் நிலையிலிருப்பவர்கள் என் தெய்வம் உன் தெய்வம் என்றும், எனது சமயம் உனது சமயம் என்றும் வாதாடி வேற்றுமையை வளர்த்து வருகின்றனர். பின்பு பராபக்தியை யெட்டியுள்ள பக்தனுக்கு இந்த வேற்றுமைகள் யாவும் தாமாக அடிபட்டுப் போகின்றன. அன்புக் கடலுக்குள் அந்த வேற்றுமைகளெல்லாம் மறைந்து போகின்றன. சித்தமலம் அறுபட்டுப் போகுங்கால் பக்தி என்னும் அமிர்தம் அத்தூய உள்ளத்தினுள் நிறைகுடம் போன்று நிறைந்ததாகிறது. அமிர்தம் என்னும் பூரண கும்பமாக பக்தனுடைய மனது மாறுமிடத்து அன்புத் தெய்வம் ஒன்றுதான் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறது என்னும் கோட்பாடு அவனுக்குப் பிரத்தியக்ஷமாய் விளங்குகிறது. கடவுளைப்பற்றி மாந்தர்கொள்ளும் மற்ற கருத்துக்களெல்லாம் மலினமடைந்தவைகளாம். பூரணத்தினின்று அவ்வெண்ணங்களெல்லாம் பலபடி கீழே நின்று விடுகின்றன. அச்சிறிய எண்ணங்களெல்லாம் பக்தனுடைய

அங்கீகாரத்துக்கு உதவாதவைகளாம். பகவானை சர்வ சக்திமான் என்கிறோம். பராபக்தியும், பகவானும் ஒன்றே. ஆதலால் பராபக்தியை அடையப் பெற்ற பக்தனுக்கும் சர்வசக்தி வந்தமைகிறது. அந்த சர்வசக்தியின் விளைவாகப் பூரணப் பொருளாகிய பகவான் ஒருவர்தாம் யாண்டும் உளர். அவருக்கு அந்நியமானதென்பது ஒன்றுமேயில்லை. இத்தகைய ஒப்பு உயர்வு அற்ற பராபக்தியை அடையப்பெற்ற பக்தன் கடவுள் தரிசனத்தை நாடி கோயில் குளங்களுக்குப் போக வேண்டிய அவசியமில்லை. கடலுக்குள்ளிருக்கும் மீன் நீரை நாடி எங்கும் பயணம் போகவேண்டிய அவசியமில்லை. அதே விதத்தில் பராபக்தியில் ஊறியிருப்பவனுக்குக் கடவுள் இருக்குமிடம் என்றும், அவர் இல்லாத இடமென்றும் வேற்றுமை கிடையாது. ஆலயத்தினுள்ளும் அவன் கடவுளைக் காண்கிறான்; ஆலயத்துக்குப் புறம்பிலும் அவன் கடவுளைக் காண்கிறான். சான்றோருடைய செந்தண்மையில் அவன் கடவுளைக் காண்கிறான். கயவனுடைய கயமையில் அவன் கடவுளைக் காண்கிறான். துஷ்டனுடைய துஷ்டத்தனத்தில் அவன் கடவுளைக் காண்கிறான். உலகத்தவர் பிரித்துவைத்துப் பொருள் படுத்தும் நல்லார்க்கும், பொல்லார்க்கும் நடுவிலிருக்கும் நலமாகவே பக்தன் பரம்பொருளைப் பொருள்படுத்துகிறான். அப்படி அவன் பூரணத்தையே யாண்டும் காண்பதற்கு ஏற்ற காரணம் ஒன்று உண்டு. தனது உள்ளம் என்னும் மலர்மிசை அந்த அன்புத் தெய்வம் எண்ணிறந்த மகிமைகளுடன் எழுந்தருளியிருப்பதை பக்தன் காண்கிறான். அப்படி உள்ளத்தின்கண் எழுந்தருளியிருக்கும் இறைவன் எல்லாம் வல்லவன். அணையா விளக்காக அவன் ஓயாது ஒளிர்ந்து கொண்டிருக்கிறான். அன்பு தெய்வமாக அவன் பார்க்குமிட

மெங்கும் வீற்றிருந்து கொண்டு தோன்றியுள்ள அனைத்தை யும் அன்பு சொரூபமாகவே அவன் விளக்கிக் கொண்டிருக் கிறான். உள்ளத்தினுள்ளே எழுந்தருளியிருக்கும் பேரன்புப் பொருளை அறிந்து கொண்டவன் உள்ளும், புறமும் யாண்டும் அந்த அன்புத் தெய்வமே காட்சி கொடுத்துக் கொண்டிருப் பதைக் காண்கிறான். நித்தியப் பொருளாய், சுயஞ்சோதி வடிவமாய் யாண்டும் பிரகாசித்துக்கொண்டிருப்பது அன்புத் தெய்வம் ஒன்றேயாம்.



# 19. பிரேமை பக்திக்கு மானுட இயல்புகளில் விளக்கம்

ஏதேனும் ஒன்றை ஒரு மனிதன் அறிந்து கொள்ளுமள வுக்கே அதற்கு விளக்கம் கொடுக்க முடியும். தான் அறியாத அல்லது அனுபவியாத ஒன்றைப்பற்றி விளக்க அவனுக்கு இயலாது. பிரேமை பக்தி மானுடர்க்கு எளிதில் வாய்ப்ப தன்று. ஆதலால்தான் அதை விளக்குவதும் மிகக் கடின மானது. பிரேமை பக்தியின் நிறைநிலை சாதாரண மனதுக்கு எட்டாதது. அதன் இனிமையையோ எதனோடும் ஒப்பிட முடியாது. அதன் கண் பொலியும் அழகோ வருணனைக்கு அப்பாற்பட்டது. மனிதன் தன்னுடைய மனதை மகோன்னத நிலைக்கு உயர்த்துமிடத்தும் பிரேமை பக்தியை உள்ளபடி கிரஹித்துக்கொள்ள அந்த மனதுக்கு இயலுவதில்லை. ஆயினும் பிரேமை பக்தியின் பெருநிலையை வெவ்வேறு விதங்களில் விளக்குதற்கு பக்தி மார்க்கத்தில் சென்றவர்கள் பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருக்கின்றனர். உயர்நிலையி லிருக்கிற பிரேமை பக்தியையும், ஆரம்பதசையிலிருக்கிற சாதாரண பக்தியையும் வெவ்வேறு விதங்களில் விளக்கு தற்கே வெவ்வேறு நாடுகளில் தோன்றியுள்ள பக்தர்கள் முயன்று வந்திருக்கின்றனர். மானுடர் கைவசத்திலிருக்கும் மொழிகளையும், இயல்புகளையும், வாழ்க்கை முறைகளையும் கையாண்டு விளக்குதற்கரிய பேரன்பை அவர்கள் விளக்கி யிருக்கின்றனர். அதுமட்டுமல்ல ; பக்தர்கள் இயல்பாகவே அன்பு வடிவினர். அவர்களிடத்திருக்கும் அன்பு வெவ்வேறு வடிவங்களில் விளங்கிக் கொண்டிருக்கிறது. என்னென்ன விதங்களிலெல்லாம் அவர்களுடைய அன்பு வெளியா கிறதோ அந்தந்த விதங்களை யெல்லாம் பிரேமை பக்தி யின்கண் செலுத்தி அவைகள் வாயிலாக விளக்குதற்கரிய

பிரேமை பக்தியை விளங்கச் செய்வதற்கும் அவர்கள் பெரு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கின்றனர். பாரமார்த்திகப் பெருநிலையை மக்கள் நினைக்குங்கால் மானுட இயல்பு என்னும் கருவிக்கு ஒத்தவாறே அதை அவர்கள் பொருள்படுத்துகிறார்கள். குணம் குறியற்ற அகண்ட வஸ்துவை மக்களாகிய நாம் விளக்க முயலுமிடத்து குணம் குறிக்கு உட்பட்டிருக்கும் நமது மொழியைக் கொண்டே விளக்கியாக வேண்டும். அதற்கு இப்பிரபஞ்சத்தையே தக்கதொரு சான்றாக எடுத்துக்கொள்ளலாம். உண்மையில் இப்பிரபஞ்சம் அகண்டமாயுள்ள பரவஸ்துவேயாம். அது எல்லை மருவாதது. ஆனால் நமது மனது என்னும் எல்லைக்குள் எட்டுகிற அளவுக்கே நாம் அதைப் பொருள்படுத்துகிறோம். மனம் மொழிக்கு எட்டாததை மனம் மொழிக்கு எட்டும்படி நாம் முயற்சி செய்து வருகிறோம். சொல்லற்கரிய தொன்றை நாம் சொல்லால் விளக்க முயலுகிறோம். மனதுக்கு எட்டாத ஒன்றை மனதுக்கு உட்படுத்த நாம் முயலுகிறோம். தெரிந்துள்ள ஒன்றைக் கொண்டே தெரியாத ஒன்றை விளக்கவேண்டிய நெருக்கடியில் நாம் இருக்கிறோம். மானுட வாழ்க்கையில் அன்பு பொலிந்து கொண்டிருக்கிறது. அத்தகைய அன்பை விளக்குதற்கான மொழிகள் நம் கைவசத்திலிருக்கின்றன. குறைபாடுடன் கூடிய இம்மொழிகளைக் கொண்டே எல்லை மருவாத தெய்வீக அன்பையும், அந்தத் தெய்வீக அன்பின் மூலம் தெய்வத்தைப் போற்றுவதையும் விளக்கியாக வேண்டும். விளக்குதற்கு அரியதை பக்தர்களனைவரும் விளக்கியிருக்கின்றனர். மொழியைக் கொண்டு எவ்வளவு தான் விளக்கினாலும் பராபக்தி முழுதும் விளக்கப்பெறாததாக இருக்கிறது. ஆயினும் தமது முயற்சியை பக்தர்கள் நிறுத்தி விடவில்லை. பராபக்தியின் பேரனுபவத்தை எடுத்

துக் காட்டுதற்கு மொழியின் முழு வல்லமையையும் அவர்கள் கையாண்டு இருக்கின்றனர். ஓரனுபவத்தைப் பலப்பல விதங்களில் பகர்ந்தால் அதனுட்பொருள் சிறிதளவாவது மற்றவர்களுக்குப் புலப்படும். புலப்படாததைப் புலப்படும்படி செய்தது மக்களுக்கு அவர்கள் புரிந்த பேருபகாரமாகும். எப்படியெப்படியெல்லாம் பக்தியை அவர்கள் விளக்கிக் காட்டியிருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து பார்ப்போம்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையில் உள்ள அன்பைப் பல படித்தரங்களில்வைத்து விளக்கலாம். மிகச்சாதாரணமான பக்திமார்க்கமாயிருப்பது சாந்தபாவனை என்னும் பெயர் பெறுகிறது. அமைதியான அன்புநெறி என்பது அதன் பொருள். எந்தவிதமான படாடோபத்தையோ, ஆடம்பரத்தையோ அல்லது ஆர்வத்தையோ சாந்த பக்தியில் காணமுடியாது. மனிதன் கடவுளை அமைதியாக நேசிக்கிறான். ஆற்றின் நீர்ப்பெருக்கு சில இடங்களில் கட்புலனாவதில்லை. அமைதியாக நீர் நின்றுகொண்டிருப்பது போன்று தென்படுகிறது. ஆயினும் பெருகிப் பாய்தல் என்னும் செயல் ஓயாது அதனிடத்து நிகழ்ந்துகொண்டிருக்கிறது. அங்ஙனம் பக்தனுடைய அன்பு வெளித் தோற்றத்தில்லாது இறைவனை நோக்கிப் பெருகிக்கொண்டேயிருக்கிறது. மனிதனிடத்து மனிதன் வைக்கும் அன்புபோன்றது அல்ல அது. மானுட அன்புக்கோ உயர்ந்த குறிக்கோள் ஒன்றுமில்லை. மானுட வடிவங்களே அழிந்துபோம் தன்மையுடையவைகள். அழிந்துபட்டுப்போம் வியக்திகளிடத்து அழியாததாக அம்ருத சொரூபமாக இருக்கும் நிலைத்த பேரன்பைக் காணமுடியாது. ஆனால் பக்தன் பரம்பொருளிடத்துக் காட்டும் அன்பு நதியின் ஓட்டத்துக்கு ஒப்பானது. ஓடாது நின்றுவிடுவதோ, வந்த வழியில் பின்னோக்கிச்

செல்வதோ ஆற்றுப்பெருக்கினிடத்து இல்லை. அது அடைய வேண்டிய குறியாகிய கடலைச் சேரும் வரையில் அதுபோய்க் கொண்டேயிருக்கிறது. அம்முறையில் சாந்தபாவனையில் ஊறியிருக்கும் பக்தனுடைய அன்பு பின்நோக்கிப் போதல் என்னும் எதிர்ச்செயல் ஒன்றுமில்லாது பகவானை நோக்கி முன்னேறிக்கொண்டேயிருக்கிறது. மேனியின் மீது சின்னங்களைப் பெருமிதமாக அணிதலை அவனிடத்துக் காணமுடியாது. கிரியா விசேஷங்களையும் அவன் பெருக்குவதில்லை. இறைவனுடைய ஆராதனைக்குப் புறச்சின்னங்களாக அமைந்திருக்கும் விக்கிரகங்களிடத்து மிகைப்பட்ட கருத்தைச் செலுத்துதலும் அவன்செயல் அன்று. 'பூமிமேல் புகழத் தக்க பொருளே' என்று பரம்பொருளை நோக்கி அவன் பகர்கிறான். அக்கோட்பாட்டுக்கு ஒப்ப அப்பரம்பொருளிடத்தே அவன் ஓயாது தனது அன்பைச் செலுத்திவருகிறான். இவ்வையகத்தில் வெவ்வேறு வகைப்பட்ட மக்களைக் காண்கிறோம். தொடுத்த கருமத்தை விரைந்து பதைபதைப்புடன் ஆற்றுகிறவர்கள் இருக்கிறார்கள். அதற்கு நேர்மாறாக அமைதியாகவும், ஊக்கம் ஒன்றும் இல்லாதவர்கள்போன்றும் வினையாற்றும் கூட்டத்தைக் காணலாம். அப்படிப் போதியவளவு ஊக்கமில்லாதவர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் போன்று பக்தியின் சாந்தபாவனையில் ஈடுபட்டிருக்கிறவர்கள் தென்படுகிறார்கள். சூறாவளி ஒன்று விரைந்து போவது போன்று அவர்கள் செயலாற்றுவது கிடையாது. மெல்லிய பூங்காற்று மிருதுவாக வீசிக்கொண்டிருப்பது போன்று அவர்கள் அமைதியாகப் பரமனிடத்துத் தங்கள் பக்தியைச் செலுத்திக்கொண்டிருக்கின்றனர். கடலை அணுக அணுக ஆறு கடல்மயமாக அமைதியாக மாறுவது போன்று இந்நெறியின்கண் செல்லுகிறவர்கள் புறத்தோற்

றத்தில் மாறுதல் ஒன்றுமில்லாது பரமனுக்கு உரியவர்கள் ஆகிறார்கள். அமைதியும், இனிமையும், பொறுமையும் பொருந்திய நெறியாக சாந்த பக்தி அமைந்திருக்கிறது. பக்தியின் பல்வேறு வடிவங்களுள் இது ஒன்றாம்.

ஞானத்தின் விளைவாக பக்தி உருவெடுப்பதுண்டு. அதை ஒரு உபமானத்தைக்கொண்டு விளக்கலாம். வளர்ந்து வருகிற குழந்தைக்கு இயல்பாகத் தாயினிடம் அன்பு உண்டாகிறது. அந்த அன்பு பக்திக்கு ஒப்பானது. பின்பு தாய் காட்டிக்கொடுப்பதால் தன் தந்தையை அக்குழந்தை அறிகிறது. தந்தையை அறியும் செயல் ஞானத்துக்கு நிகரானது. அவர் தந்தை என்கிற ஞானத்தினின்று அன்பு சுரக்கிறது. அம்முறையில் உலகுக்குத் தலைவன் இறைவன் என்னும் ஞானம் வருகிறது. அதனால் இறைவனிடத்து அன்பு ஓங்குகிறது. ஞான முதிர்ச்சியால் கடவுளின் பெருமைகளைத் தெரிந்துகொள்ளுமளவு அவரிடத்து பக்தி யானது வளர்ந்துகொண்டே போகிறது. அத்தகைய பக்தி சாந்தபாவனையில் சேருகிறது.

இதற்கு அடுத்தபடியாக இருப்பது தாஸ்ய பக்தி. பகவானுடைய தாஸன் என்பதற்கு இறைவனுடைய தொண்டன் என்று பொருள் அமைகிறது. பக்தன் தன்னை இறைவனுடைய வேலையாளாக வைத்துக்கொள்கிறான். வேலையாட்களாக எத்தனையோபேர் உலகில் அமைகிறார்கள். ஆனால் விசுவாசம் நிறைந்த வேலையாட்களைக் காண்பது அரிதிலும் அரிது. யாரோ சிலர்க்குத் தம் தலைவனிடத்து அத்தியந்த அன்பு வருகிறது. வேலையாட்களாகிய தங்களுக்கு நேரும் இன்னல்களையெல்லாம் பொருள்படுத்தாது தலைவனுக்குத் தொண்டு புரிவதே அவர்களின் குறிக்கோள் ஆகிறது. அன்னவர்கள் இயல்பை தாஸ்ய பக்தன்

தன் உள்ளத்தில் வரவழைத்துக்கொள்கிருன். அன்பை விளக்குதற்கு வழிகள் பல உள. சலிப்படையாதும், சோர்வு அடையாதும் தொண்டு புரிவது அன்பின் விளக்கமாகும். 'என் கடன் பணிசெய்து கிடப்பது' என்று பக்தன் பகர்கிருன். 'உனக்கே நான் ஆட்செய்வேன்' என்று அவன் இயம்புகிருன். தான் புரியும் பணிவிடைகளின் மூலம் தனக்கு ஏதேனும் நலன் உண்டாகவேண்டுமென்று பக்தன் நினைப்பதில்லை. தான் புரியும் பணிவிடையின் மூலம் பகவானுடைய பெருமை மேலும் ஓங்குமாகில் அது தாஸ்ய பக்தனுக்குப் பேருவகையை உண்டுபண்ணுகிறது. இறைவனுடைய பெருமைக்காகவென்றே அவன் ஓயாது உழைக்கிருன். அத்தகைய உழைப்பில் அவன் தன்னையே மறந்துவிடுகிருன். தான் ஆற்றும் தொண்டில் குறைபாடு ஏதேனும் வந்துவிட்டால் பக்தனுக்கு அது பெரும் வேதனையை உண்டுபண்ணி வைக்கிறது. தன் உயிர் போய்விட்டால் அதில் அவனுக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. இறைவனுடைய தொண்டுக்குத் தீங்கு ஏற்பட்டுவிட்டால் அதை அத்தொண்டன் சிறிதேனும் சகியான். எப்படி எப்படியெல்லாம் தான் பணிவிடை செய்தால் தான் போற்றும் பரம்பொருளுக்குப் பிரீதியை உண்டுபண்ணக்கூடுமென்று அவன் ஓயாது உணர்கிருன். அந்த உணர்வே செயலாக வடிவெடுக்கிறது. அச்செயலினிடத்து தாஸ்ய பக்தன் தன்னை முற்றிலும் ஒப்படைக்கிருன். ஒருவிதத்தில் இது சாந்த பக்திக்குச் சிறிது மேலே போகிறது. ஏனென்ருல் அன்புக்குரிய பொருள் இறைவன் என்றெண்ணி சாந்த பக்தன் அன்பைப் பொழிகிருன். ஆனல் தாஸ்ய பக்தனே தனது அன்பைத் தொண்டின்மூலம் வெளிப்படுத்துகிருன். தனது உடல்வாழ்க்கையில் எப்பகுதியும் தனக்குச் சொந்தமானதல்ல. தான் போற்றும் தெய்வத்

றத்தில் மாறுதல் ஒன்றுமில்லாது பரமனுக்கு உரியவர்கள் ஆகிருர்கள். அமைதியும், இனிமையும், பொறுமையும் பொருந்திய நெறியாக சாந்த பக்தி அமைந்திருக்கிறது. பக்தியின் பல்வேறு வடிவங்களுள் இது ஒன்ரும்.

ஞானத்தின் விளைவாக பக்தி உருவெடுப்பதுண்டு. அதை ஒரு உபமானத்தைக்கொண்டு விளக்கலாம். வளர்ந்து வருகிற குழந்தைக்கு இயல்பாகத் தாயினிடம் அன்பு உண்டாகிறது. அந்த அன்பு பக்திக்கு ஒப்பானது. பின்பு தாய் காட்டிக்கொடுப்பதால் தன் தந்தையை அக்குழந்தை அறிகிறது. தந்தையை அறியும் செயல் ஞானத்துக்கு நிகரானது. அவர் தந்தை என்கிற ஞானத்தினின்று அன்பு சுரக்கிறது. அம்முறையில் உலகுக்குத் தலைவன் இறைவன் என்னும் ஞானம் வருகிறது. அதனுல் இறைவனிடத்து அன்பு ஓங்குகிறது. ஞான முதிர்ச்சியால் கடவுளின் பெருமைகளைத் தெரிந்துகொள்ளுமளவு அவரிடத்து பக்தியானது வளர்ந்துகொண்டே போகிறது. அத்தகைய பக்தி சாந்தபாவனையில் சேருகிறது.

இதற்கு அடுத்தபடியாக இருப்பது தாஸ்ய பக்தி. பகவானுடைய தாஸன் என்பதற்கு இறைவனுடைய தொண்டன் என்று பொருள் அமைகிறது. பக்தன் தன்னை இறைவனுடைய வேலையாளாக வைத்துக்கொள்கிருன். வேலையாட்களாக எத்தனையோபேர் உலகில் அமைகிருர்கள். ஆனுல் விசுவாசம் நிறைந்த வேலையாட்களைக் காண்பது அரிதிலும் அரிது. யாரோ சிலர்க்குத் தம் தலைவனிடத்து அத்தியந்த அன்பு வருகிறது. வேலையாட்களாகிய தங்களுக்கு நேரும் இன்னல்களையெல்லாம் பொருள்படுத்தாது தலைவனுக்குத் தொண்டு புரிவதே அவர்களின் குறிக்கோள் ஆகிறது. அன்னவர்கள் இயல்பை தாஸ்ய பக்தன்

தன் உள்ளத்தில் வரவழைத்துக்கொள்கிருன். அன்பை விளக்குதற்கு வழிகள் பல உள. சலிப்படையாதும், சோர்வு அடையாதும் தொண்டு புரிவது அன்பின் விளக்கமாகும். 'என் கடன் பணிசெய்து கிடப்பது' என்று பக்தன் பகர் கிருன். 'உனக்கே நான் ஆட்செய்வேன்'. என்று அவன் இயம்புகிருன். தான் புரியும் பணிவிடைகளின் மூலம் தனக்கு ஏதேனும் நலன் உண்டாகவேண்டுமென்று பக்தன் நினைப்ப தில்லை. தான் புரியும் பணிவிடையின் மூலம் பகவானுடைய பெருமை மேலும் ஓங்குமாகில் அது தாஸ்ய பக்தனுக்குப் பேருவகையை உண்டுபண்ணுகிறது. இறைவனுடைய பெருமைக்காகவென்றே அவன் ஓயாது உழைக்கிருன். அத்தகைய உழைப்பில் அவன் தன்னையே மறந்துவிடுகிருன். தான் ஆற்றும் தொண்டில் குறைபாடு ஏதேனும் வந்துவிட் டால் பக்தனுக்கு அது பெரும் வேதனையை உண்டுபண்ணி வைக்கிறது. தன் உயிர் போய்விட்டால் அதில் அவனுக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. இறைவனுடைய தொண்டுக்குத் தீங்கு ஏற்பட்டுவிட்டால் அதை அத்தொண்டன் சிறிதேனும் சகியான். எப்படி எப்படியெல்லாம் தான் பணிவிடை செய் தால் தான் போற்றும் பரம்பொருளுக்குப் பிரீதியை உண்டு பண்ணக்கூடுமென்று அவன் ஓயாது உணர்கிருன். அந்த உணர்வே செயலாக வடிவெடுக்கிறது. அச்செயலினிடத்து தாஸ்ய பக்தன் தன்னை முற்றிலும் ஒப்படைக்கிருன். ஒருவிதத்தில் இது சாந்த பக்திக்குச் சிறிது மேலே போகிறது. ஏனென்ருல் அன்புக்குரிய பொருள் இறைவன் என்றெண்ணி சாந்த பக்தன் அன்பைப் பொழிகிருன். ஆனல் தாஸ்ய பக்தனே தனது அன்பைத் தொண்டின்மூலம் வெளிப் படுத்துகிருன். தனது உடல்வாழ்க்கையில் எப்பகுதியும் தனக்குச் சொந்தமானதல்ல. தான் போற்றும் தெய்வத்

துக்கே தன் உடல், உடைமை, உள்ளம் அனைத்தையும் பணிவிடையின் மூலமாகக் கொடுத்துவிடுகிருன். தனக்குரிய உயிர் வாழ்க்கையைத் தெய்வத்துக்குரியதாக ஆக்குதலின் மூலம் தாஸ்ய பக்தன் மேன்மையுறுகிருன். வினைப்பயன்கள் யாவையும் தனக்குரியவைகளாக ஆக்கிக்கொள்வதற்கு மாருகத் தான் போற்றும் தெய்வத்துக்கே உரியவைகளாக ஒப்படைப்பதன் மூலம் தாஸ்ய பக்தன் மேன்மையுறுகிருன். அன்பில் நன்கு ஊறி அதை அமைதியாக வைத்திருப்பவன் பெரியவனு, அல்லது அன்பைச் செயலில் வெளிப்படுத்து கிறவன் பெரியவனு என்னும் கேள்வி எழலாம். 'அன்பிற் கும் உண்டோ அடைக்குந்தாழ்?' வாழ்க்கையானது செயலாகப் பரிணமிப்பது போன்று அன்பும் செயலாகப் பரிணமிக் கிறது. ஆதலால் தொண்டன் ஊக்கத்துடன் தொண்டில் ஈடுபடுகிருன்.

பக்தியின் மூன்ருவது படியிலிருப்பது ஸக்யபாவனை. தெய்வத்துடன் தோழமை பூணுதல் என்பது இதன் கருத்து. 'தோழா போற்றி' என்று தெய்வத்தோடு பக்தன் உறவு கொண்டாடுகிருன். தன் உள்ளத்தில் கிடக்கும் எண்ணங் களையெல்லாம் மனிதன் ஒருவன் தங்குத்தடையின்றித் தன் நண்பனிடம் தெரிவிக்கிருன். அப்படி அவன் தெரிவிக்கும் எண்ணங்களில் வேண்டப்படாதவைகள் ஏதேனும் இருந் தால் அவைகளைக் குறித்து நண்பன் ஒருவன் மனம் கோணிக் கொள்ளமாட்டான். குற்றங்களைக் குறித்து அவன் கடிந்து கொண்டாலும் அது தோழமையின் புறத்தோற்றமாகும். அப்படிக் கடிந்துகொண்ட பிறகு தன் நண்பனுடைய குற்றங் களைத் தன்னுடையவைகளாகத் தோழன் ஒருவன் தனக்குச் சொந்தமாக்கிக்கொள்கிருன். மேலும், அக்குறைபாடுகளி னின்று தோழனை மீட்டெடுக்கத் தானே முயற்சி செய்கிருன்.

தன்னைத் தொண்டனாகக் கருதிக்கொள்ளும் பக்தன் ஒருவன் தெய்வத்தை உயர்ந்த நிலையிலும் தன்னைத் தாழ்ந்த நிலையி லும் வேண்டுமென்றே வைத்துக்கொள்கிறான். ஆனால் தெய்வத்தோடு தோழமை பூணுகிற பக்தனோ தெய்வத்தைத் தன்னிலும் மிக்கானாகக் கருதுவதில்லை. உயர்வு தாழ்வு பாராட்டுகிற இடத்தில் தோழமையில்லை. இருவர்க்கிடையில் சமத்துவத்தை நிலைநாட்டுவதே உண்மையான தோழர் களின் இயல்பு ஆகும். ஸக்யபாவனை பூண்டு கடவுளைப் போற்றும் பக்தன் தன்னைக் கடவுளுக்கு நிகராக வைத்துக் கொள்கிறான். தெய்வம் என்னும் தோழனிடத்துத் தனது முழு அன்பையும் அவன் கரவாது செலுத்துகிறான். பிறகு தெய்வம் என்னும் தோழனும் தன்னிடத்துத் தங்குத்தடை யின்றி அன்பைச் செலுத்துகிறான் என்று அப்பக்தன் உணர் கிறான். நெருங்கிய கூட்டாளிகளினுடைய நிலையில் பக்தனும் பகவானும் இருக்கிறார்கள். எட்ட எங்கேயோ இருக்கும் கடவுளைத் தனக்குக் கிட்ட இருக்கும் கூட்டாளியாக பக்தன் அருகில் வைத்துக் கொள்கிறான். தன்னுடைய வாழ்க்கை வரலாறுகளையெல்லாம் தங்குத் தடையின்றித் தோழனாகிய தெய்வத்திடத்து பக்தன் பகர்கிறான். உள்ளத்தினுள்ளே மறைத்து வைக்கப்பட்டிருக்கிற இரகசியமான கருத்துக்களை யும் தாராளமாக எடுத்து நல்ல தோழன் ஒருவனிடம் தெரி விக்கலாம். மனதிலிருக்கும் சில கருத்துக்களை வேற்றாரிடம் வெளியிடுவது ஆபத்தாக முடியும். அப்படி ஆபத்தாக முடியாவிட்டாலும் உலக நடைமுறைக்கு அது பொருந்தாது. அத்தகைய ஆபத்தோ அல்லது முறைமையின்மையோ தனக்கு ஏதேனும் நேரிடுமென்று தோழமை பூணும் பக்தன் கருதுவதில்லை. எல்லாவிதமான பாதுகாப்பும் ஆதரவும் கடவுள் என்னும் நண்பனிடமிருந்து தனக்கு வரும்

என்கிற உறுதி அப்பக்தனுக்கு உண்டு. தனக்கு யாண்டும் நிகராயிருக்கும் நெருங்கிய நண்பன் என்றே தோழமை யியல்பு படைத்துள்ள பக்தன் கடவுளைக் கருதுகிறான்.

பிரபஞ்சம் என்பது ஒரு பரந்த விளையாட்டு மேடை. வாழ்வு என்பது ஒரு பெரிய விளையாட்டு. அந்த விளை யாட்டை நன்கு நிகழ்த்துதற்கே நிலவுலகில் நாம் பிறந்திருக் கிறோம். அந்த விளையாட்டிலே நம்முடைய கூட்டாளியாகக் கடவுளை நாம் கருதவேண்டும். சிறுவர்கள் தாம் எடுத்துக் கொண்ட விளையாட்டுக்களை இனிது விளையாடி முடிக்கின் றனர். கீர்த்தி மிக வாய்க்கப் பெற்ற கோமான்களும், நாடுகள் பலவற்றைத் தங்கள் ஆட்சிக்குக்கீழ் கொண்டு வந்திருக்கும் பேரரசர்களும் செங்கோல் செலுத்துதல் என் னும் விளையாட்டை மிகத் திறமையுடன் விளையாடி முடிக் கின்றனர். ஒரு சிறிய அளவில் சிறார்களும், பேரரசர்களும் அவரவர்க்குரிய வாழ்வு என்னும் விளையாட்டை நிறைவேற்றி வைப்பது போன்று அகிலாண்டத்தையும் கொண்டு செலுத் துதல் என்னும் பெருவிளையாட்டைப் பேரன்பு வடிவினரு கிய பரம புருஷன் தாமே விளையாடி வருகிறார். அப்பரம புருஷன் பரிபூரணத்தில் ஊன்றியிருக்கிறார். அவருக்குத் தேவையாயிருப்பது ஏதுமில்லை. வேண்டுதல் வேண்டாமை என்னும் குறைபாடுகளுக்கெல்லாம் அப்பாலிருக்கும் பரம புருஷன் சிருஷ்டித் தொழிலைச் செய்வானேன்? நம்மிடத் திருக்கும் நடமாட்டமென்பதும், செயல் என்பதும் ஏதேனும் ஒரு பற்றுக்குறையைப் பூர்த்தி பண்ணுதல் பொருட்டேயாம். பற்றுக்குறை எங்கு இருக்கிறதோ அங்குப் பரிபூரணநிலை இன்னும் வந்து அமையவில்லை என்பது சொல்லாமலே விளங்குகிறது. கடவுளோ பரிபூரணர். அவருக்குத் தேவை யொன்றுமில்லை. பின்பு சிருஷ்டி என்னும் ஓய்வு ஒழிச்சலில்

லாத கிருத்தியத்தில் அவர் ஈடுபட்டிருப்பானேன்? சிருஷ்டிச் செயலைச் செய்வதில் அவர் கொண்டுள்ள நோக்கம்தான் என்ன? கடவுள் உலகை ஏன் சிருஷ்டித்திருக்கிறார் என்பதை விளக்குதற்குக் கதைகள் பலவற்றை நாம் கூறுகிறோம். நமது கற்பனைக்கு எட்டுகின்ற பலப்பல நோக்கங்களை அவருடைய சிருஷ்டிக்கு மூலகாரணங்கள் என்று நாம் நவிலுகிறோம். அப்படி நாம் பேசிக்கொண்டிருப்பதையெல்லாம் நல்ல கதைகளாகக் கருதுதலில் குற்றமில்லை. அவைகளையெல்லாம் வெறும் கதைகளாகக் கருதலாம்; ஆனால் கோட்பாடுகளாகக் கருதலாகாது. சிருஷ்டித் தொழிலை அவர் செய்வதெல்லாம் வெறும் விளையாட்டுக்காக வென்றேயாம். பிரபஞ்சத்தின் நடைமுறையென்பது யாண்டும் நிகழ்ந்து கொண்டிருக்கும் அவருடைய திருவிளையாடலேயாம். விளையாட்டு ஒன்று எதற்காக நிகழ்கிறது என்பதை நாம் தெரிந்திருக்க வேண்டும். வெறும் வேடிக்கைக்காக வென்று நிகழ்த்துவதுதான் விளையாட்டு. வேடிக்கை விநோதமின்றி வேறு நோக்கம் ஒன்றும் விளையாட்டு ஒன்றில் இருக்கலாகாது. அகிலாண்டத்தின் நடைமுறை அப்பரம புருஷனுக்கு மகிழ்வூட்டும் வேடிக்கையேயாம். அவருடைய அலகிலா விளையாட்டில் பங்கு எடுத்துக் கொள்ளுதற்கே பாரினுள் நீ பிறந்திருக்கிறாய். பூமியிலே நீ பரம ஏழையாகப் பிறந்திருக்கலாம். உன்னுடைய ஏழ்மையை ஒரு விளையாட்டு என்று வைத்துக்கொண்டு நீ மகிழ்வடைய வேண்டும். மற்று நீ ஒரு செல்வந்தனாகப் பிறந்திருக்கலாம். அதையும் ஒரு விளையாட்டு என்றே வைத்துக்கொண்டு அதை நீ அனுபவிப்பாயாக. வாழ்வு என்னும் விளையாட்டிலே ஆபத்துக்கள் நிகழ்வதுண்டு. அப்படி வாய்க்கும் ஆபத்துக்களையும் விளையாட்டு என்றே கருதிப் பழகு. இன்பங்கள் பல வாழ்க்கை என்னும்

விளையாட்டிலே வந்து வாய்க்கலாம். அவைகளையும் ஒரு பெரிய வேடிக்கையாக நீ கருதிப் பழகு. பரந்த இம்மண்ணுலகம் ஒரு வெறும் விளையாட்டு மேடையாகும். இவ்விளையாட்டு மேடையிலே வாழ்வு என்னும் விளையாட்டை விநோதமாக விளையாடிக் கழிக்க இங்கு நாம் வந்திருக்கிறோம். இவ்விளையாட்டிலே கடவுள் நமக்கு யாண்டும் தோழனாக இருந்து வருகிறார். இந்த அலகிலா விளையாட்டை அவருடன் விளையாடி முடிப்பது வாழ்வின் குறிக்கோள் என்பதை பக்தன் உணர்கிறான்.

வாழ்வு என்னும் விளையாட்டில் சிற்சில பகுதிகளிலே சிற்சில மக்கள் நம்முடன் வந்து கலந்துகொள்கின்றனர். ஆனால் கடவுளோ இப்பெரும் விளையாட்டிலே நமக்குச் சாசுவதமாயுள்ள கூட்டாளியாகிறார். இவ்விளையாட்டை எவ்வளவு அழகாகவும் இனிமையாகவும் அவர் விளையாடிக் கொண்டிருக்கிறார்! கற்ப காலம் முடிவுறுங்கால் அவருடைய அலகிலா விளையாட்டு தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுகிறது. அப்பொழுது அண்டங்களனைத்தும் ஒடுங்குகின்றன. பிரளயம் நிகழ்கிறது. அப்பொழுது ஓய்வு ஏற்படுகிறது. விளையாட்டுக்கு ஏற்றவாறு அந்த ஓய்வும் குறுகியதாகவோ நீண்டதாகவோ இருக்கிறது. பிரளயத்தைத் தொடர்ந்து திரும்பவும் சிருஷ்டி வருகிறது. அப்பொழுது விளையாட்டில் கலந்துகொள்ளும் கூட்டாளிகளெல்லாம் தோற்றத்துக்குத் திரும்பவும் வருகிறார்கள். நிகழ்வதெல்லாம் வெறும் விளையாட்டு என்பதை மனிதன் பெரிதும் மறந்துவிடுகிறான். இப்பெரிய விளையாட்டிலே மனிதன் கடவுளோடு கூட்டாளியாக இருக்கிறானென்பதை அவன் மறந்துவிடுகிறான். விளையாட்டை அவன் வினையாகக் கருதுகிறான். அப்படி அதை அவன் முறைதவறிக் கருதுகின்றபொழுதே அவனுக்குத்

துன்பமும் துயரங்களும் தோன்றுகின்றன. அல்லல்கள் பெரும் சுமையாய் உள்ளத்தினுள் இடம் பெறுகின்றன. உலக வாழ்வு என்பது மனிதனைக் கசக்கிப் பிழிகின்ற பெரும் பாரமாக அவனுக்கு அமைகிறது. இப்பெருந்துயரத்தைப் படமுடியாதென்று அவன் பரிந்து குறை கூறுகிறான். தான் பட்ட துயரமெல்லாம் போதுமென்றும் அவன் பகவானிடம் பரிந்து விண்ணப்பம் செய்கிறான். அப்படித் தான் படும் துயரத்துக்கு பெருமதிப்புத் தருவது அக்ஞானத்தில் இருக்கிறவனது செயலாம். உண்மையில் மானுட வாழ்வு என்பது ஆதியந்தமில்லாத காலகதியிலே சில நிமிஷங்களில் முற்றுப்பெறுகிற அற்ப நிகழ்ச்சியாகும். அதற்கு எவ்வளவு பெரிய மதிப்பை மனிதன் வீணாகக் கொடுக்கிறான்! தனது மனப்பான்மையை அவன் மாற்றிக்கொள்ளவேண்டும். வாழ்வு என்னும் விளையாட்டுக்கு எந்தவிதமான மதிப்பையும் அவன் கொடுக்கலாகாது. இன்பமே வந்து வாய்க்கட்டும்; அல்லது துன்பமே வந்து வாய்க்கட்டும். அதனால் தனக்கு உண்டாவது லாபமும் அல்ல; நஷ்டமுமல்ல. எல்லாம் வெறும் விளையாட்டு. இத்தகைய எண்ணத்தில் உறுதிபெற்றிருப்பவனே இறைவனோடு விளையாடத் தகுதியுடையவனாகிறான். இப்பிரபஞ்சம் முழுதும் ஒரு விளையாட்டு அரங்கம். இந்த அரங்கத்துக்கு நாதனாயிருப்பவன் ஓயாது விளையாடுகிறான். அவனோடு நட்புப் பூண்டிருப்பது பக்தனுடைய செயல். வாழ்வு என்னும் விளையாட்டிலே துன்பம் நிறைந்த பகுதியைத் தோழனாகிய தெய்வம் நமக்குக் கொடுத்தால் அத்துன்பத்தை விளையாட்டாகத் துய்க்க வேண்டும். இன்பத்தை அவன் நல்கினால் அதையும் விளையாட்டாகத் துய்க்க வேண்டும். இன்பம் துன்பம் ஆகிய இரண்டிலும் கட்டுப்படாதிருப்பவனே கடவுளைத் தோழனாகக் கருதமுடியும்.

வேண்டுதல் வேண்டாமை யில்லாதிருப்பவர் கடவுள். இன்ப துன்பங்களில் கட்டுப்படாதிருப்பவர் கடவுள். அக்கடவுளோடு சமத்துவம் கொள்பவனே அவருக்குத் தோழனாக முடியும். ஆனால் இன்பதுன்பங்களுக்கு அடிமைப்பட்டிருப்பவன் சிறியவன். அத்தகைய சிறியவன் பெரியவராகிய கடவுளோடு சமத்துவம் பாராட்ட முடியாது. ஆதலால் அவன் தோழன் ஆகமுடியாது. ஏனென்றால் வேற்றுமைபடைத்திருப்பவர்களுக்கிடையில் ஸகாபாவனை அல்லது தோழமை உண்டாக முடியாது. வாழ்வில் வாய்க்கிற மாறுதல்களனைத்தையும் வெறும் விளையாட்டாக எடுத்துக்கொள்பவனே கடவுளோடு கூடி நன்கு விளையாடுகிறான். ஒவ்வொரு அணுவிலும் ஊடுருவிப் பாய்ந்திருந்து இறைவன் தன்னுடைய விளையாட்டை நிகழ்த்துகிறார். பரந்த இம்மண்ணுலகம் போன்ற உலகங்களை உருவாக்குவதும் அவருக்கு ஒரு விளையாட்டாக அமைந்துள்ளது. வான வெளியில் இலங்கும் சந்திர சூரியர்களைச் சிருஷ்டி செய்வதும் அவருடைய அலகிலா விளையாட்டில் ஒரு பகுதியாகும். மானுடர்களின் உள்ளத்தில் வீற்றிருந்துகொண்டு அவர் விளையாடுகிறார். விலங்கு இனங்களாக வடிவெடுத்து அவர் விளையாடுகிறார். மரம் செடி கொடிகளாகத் தம்மைத் தோற்றுவித்து அவர் விளையாடுகிறார். சொக்கட்டான் விளையாட்டிலே காய்களை வெவ்வேறு இடங்களில் வைத்து நாம் விளையாடுகிறோம். அம்முறையில் கடவுள் உயிர் வகைகளை வெவ்வேறு நிலைகளில் வைத்து விளையாடுகிறார். அவ்வுயிர் வகைகளுக்கு நெருக்கடிகளை உண்டு பண்ணுவதும் அவருடைய விளையாட்டு. அவைகளுக்கு வசதிகளை அமைத்துக் கொடுப்பதும் அவருடைய விளையாட்டு. உயிர் வகைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு வாழ்வை முடிவுக்குக் கொண்டு வருவதும்

அவருடைய விளையாட்டு. இயற்கையை முறையாக ஆராய்ச்சி செய்து பார்ப்பவர்களுக்கு இவ்வுண்மை விளங்கும். மனிதனுக்கு வாழ்க்கையில் விரைவில் கவலை வருகிறது. ஆதலால் வாழ்க்கையானது விளையாட்டாக அவனுக்குத் தென்படுவதில்லை. மற்ற உயிர்கள் வாழ்வைப் பெரிதும் விளையாட்டாகவே கழிக்கின்றன. அண்டகோடிகளனைத்தையும் துடைத்தெடுத்து சிறிதுநேரம் ஓய்வில் வைத்திருப்பதும் அவருடைய விளையாட்டு. திரும்பவும் அவைகளைத் தோற்றத்துக்குக் கொண்டுவந்து மற்றுமொரு ஒழுங்குப்பாட்டில் அவைகளை அமைத்து வைப்பதும் அவருடைய விளையாட்டு. சராசரங்களனைத்தும் அவருடைய பெரிய விளையாட்டுக்குப் பயன்பட்டு வருகின்றன. சேதனமாயும் அசேதனமாயும் இருப்பவைகள் அவருடைய விளையாட்டில் இடம் பெற்றிருக்கின்றன. சேதனமாயிருக்கும் உயிர்வகைகள் விளையாட்டை விளையாட்டென்று தெரிந்துகொள்வது முறை. ஆனால் உயிர்வகைகளில் பெரும்பான்மை வாழ்க்கையைக் கொண்டாட்டமாகக் கொண்டு செலுத்துதற்கிடையில் திண்டாட்டத்தில் அகப்பட்டுக்கொள்கின்றன. திண்டாட்டத்தையும் கொண்டாட்டமாகவே முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். கொண்டாட்டமாக அதை முடிவுக்குக்கொண்டு வருபவன் பக்தன். கடவுளுடைய தோழனாக அவன் தன்னை வைத்துக்கொள்வதால் வாழ்வு அவனுக்கு விளையாட்டாகவே இருக்கிறது. லாப நஷ்டம் எதுவும் அதில் அவனுக்கில்லை. அறிவிலிகள் படும் இன்ப துன்பங்கள் அவனுக்கில்லை. "பேரின்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று பகரும் பெருநிலையில் அவனிருக்கிறான். பக்தன் இறைவனோடு கொள்ளும் ஸகாபாவனையின் விளைவு இதுவேயாம்.

வாத்ஸல்யபாவனை என்பது பக்திசாதனத்தில் மற்றொரு முறையாகும். கடவுளையே நம்முடைய குழந்தையாகப்

பாவிப்பது இந்தச் சாதனத்தின் இயல்பு ஆகும். கடவுளையே நம்முடைய குழந்தையாகக் கருதுவது பொருந்துமா என்னும் கேள்வி எழக்கூடும். கடவுளோடு நாம் விரும்புகிற எத்தகைய நல்லிணக்கத்தை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம். நல்லிணக்கங்களனைத்துக்கும் அவரும் உடந்தையாகவே இருக்கிறார். அவைகளுள் வாத்ஸல்ய பாவனையில் தனிச்சிறப்பு ஒன்று உண்டு. பொதுவாகக் கடவுளை சர்வ சக்திமான் என்று கருதுவது மக்களுடைய இயல்பு. எல்லாம் வல்ல அவருக்கு ஆகாத காரியம் யாது உளது, என்று நாம் எண்ணி வருகிறோம். அவர் பேராற்றல் படைத்தவராக இருப்பதால் நாம் அவருடைய ஆதிக்கத்துக்கும், ஆதரவுக்கும் உட்பட்டிருக்கிறோம் என்னும் எண்ணம் நம்மிடத்து ஊறியிருக்கிறது. இத்தகைய எண்ணத்துக்கு நேர்மாறான எண்ணத்தை வருவித்துக்கொள்வதற்கு வாத்ஸல்ய பாவனை உதவுகிறது. பேராற்றல் படைத்துள்ள பெரிய பொருள் ஒருவரிடம் அடங்கி ஒடுங்கியிருக்கும் எண்ணமும் அவருடைய ஆற்றலைக்கொண்டு அவர் நமக்கு ஏதாவது நலன் செய்யவேண்டும் என்கிற எண்ணமும் இயல்பாகவே நமக்கு வருகின்றன. மெய்யன்புக்கு இத்தகைய எண்ணம் உதவாது. ஆற்றலை முன்னிட்டு ஒருவரிடம் அன்புகொள்ளுவோமானால் அது தெளிந்த அன்பு ஆகாது. வாழ்க்கையில் சாதாரணமான ஒருபடித்தரத்தில் ஒருவிதமான மனபரிபாகம் வருவதற்குப் போற்றுதலும், கீழ்ப்படிதலும் பயன்படுகின்றன. நற்குணமும், நல்லொழுக்கமும் வாய்க்கப்பெற்றவனைகத் தன்னைத் திருத்தி யமைத்துக் கொள்வதற்கு முயலுகிற ஆத்ம சாதகன் சர்வ சக்திமானாகை இருக்கிற ஈசுவரனிடத்து வணக்கமும், அடிபணிதலும் உடையவனாக இருந்து பழகுதல் முறைமை. மனதை அடக்கியாளுதற்கும், அதை ஒழுங்குப்

படுத்துதற்கும், கீழ்ப்படிதல் என்னும் சாதனம் முற்றிலும் அவசியமானது. பெரியோர் ஆதிக்கத்துக்கு உட்பட்டு ஒழுகத்தெரியாதவனுக்கு மனபரிபாகம் உண்டாகாது. முதலில் அடிபணிந்து பழகுபவனே பிறகு நன்கு ஆளவல்லவனாகிறான். பணிந்து நடந்துகொள்ளத் தெரியாதவன், ஆணைக்கும் அதிகாரத்துக்கும் உட்பட்டு நடந்துகொள்ளத் தெரியாதவன், ஆணை செலுத்தவோ மற்றவரைக் கட்டுப்பாட்டில் அடக்கிவைக்கவோ வல்லவன் ஆகான். பெரியோரைப் போற்றுதல் ஒன்றே தன்னை ஓர் ஆட்சிமுறைக்கு உட்படுத்துதற்கு உற்ற உபாயமாகும். பெரியவர்கள் அனைவரினும் பெரிய பொருளாயிருப்பவர் கடவுள். அவர் முன்னிலையில் அடங்கி ஒடுங்கியிருந்து அவருடைய பெருநெறிக்கு அடிபணிந்திருந்து பழகுதல் பக்தி சாதனத்துக்கு முற்றிலும் இன்றியமையாதது. பிறகு அந்தச் சாதனத்துக்கும் ஒரு முடிவு உண்டு. மனது முற்றிலும் கட்டுப்பாட்டில் அடங்கிப் பழகும் வரையில் அத்தகைய சாதனம் தேவை. மனதின்கண் என்றும் மாறாத பண்பாடு வந்தானபிறகு அடிபணிதல் என்னும் சாதனத்தை நிறுத்திவிடலாம். நிலைத்த மனப்பண்பாட்டின் விளைவாக மனது யாண்டும் சாந்தத்திலேயே ஊறியிருக்கும். அமைதியான அன்பு அதனிடத்துப்பொலிந்துகொண்டிருக்கும். தூய அன்பானது பிறகு தீவிரமான அன்பாக உருவெடுக்கிறது. தீவிரமான அன்பை ஆத்ம சாதகன் சுவானுபவத்தில் காண்கிறான். அத்தகைய பெருநிலையை யெட்டியான பிறகு அடக்கம், ஒடுக்கம், நல்லொழுக்கம் என்பனவற்றைப் பற்றிய பேச்சு எழவேண்டிய அவசியமில்லை. ஒழுக்கத்தையும், அடக்கத்தையும் கடந்துள்ள பெருநிலையைப் பக்தன் எட்டுகிறான். சாதனமாகச் செய்யவேண்டிய நேர்மையும், நல்லதெல்லாம் அவனுக்குச் சாத்தியமாகிறது.

பாவிப்பது இந்தச் சாதனத்தின் இயல்பு ஆகும். கடவுளையே நம்முடைய குழந்தையாகக் கருதுவது பொருந்துமா என்னும் கேள்வி எழக்கூடும். கடவுளோடு நாம் விரும்புகிற எத்தகைய நல்லிணக்கத்தை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம். நல்லிணக்கங்களைத்துக்கும் அவரும் உடந்தையாகவே இருக்கிறார். அவைகளுள் வாத்ஸல்ய பாவனையில் தனிச்சிறப்பு ஒன்று உண்டு. பொதுவாகக் கடவுளை சர்வ சக்திமான் என்று கருதுவது மக்களுடைய இயல்பு. எல்லாம் வல்ல அவருக்கு ஆகாத காரியம் யாது உளது, என்று நாம் எண்ணி வருகிறோம். அவர் பேராற்றல் படைத்தவராக இருப்பதால் நாம் அவருடைய ஆதிக்கத்துக்கும், ஆதரவுக்கும் உட்பட்டிருக்கிறோம் என்னும் எண்ணம் நம்மிடத்து ஊறியிருக்கிறது. இத்தகைய எண்ணத்துக்கு நேர்மாறான எண்ணத்தை வருவித்துக்கொள்வதற்கு வாத்ஸல்ய பாவனை உதவுகிறது. பேராற்றல் படைத்துள்ள பெரிய பொருள் ஒருவரிடம் அடங்கி ஒடுங்கியிருக்கும் எண்ணமும் அவருடைய ஆற்றலைக்கொண்டு அவர் நமக்கு ஏதாவது நலன் செய்யவேண்டும் என்கிற எண்ணமும் இயல்பாகவே நமக்கு வருகின்றன. மெய்யன்புக்கு இத்தகைய எண்ணம் உதவாது. ஆற்றலை முன்னிட்டு ஒருவரிடம் அன்புகொள்ளுவோமானால் அது தெளிந்த அன்பு ஆகாது. வாழ்க்கையில் சாதாரணமான ஒருபடித்தரத்தில் ஒருவிதமான மனபரிபாகம் வருவதற்குப் போற்றுதலும், கீழ்ப்படிதலும் பயன்படுகின்றன. நற்குணமும், நல்லொழுக்கமும் வாய்க்கப்பெற்றவனாகத் தன்னைத் திருத்தி யமைத்துக் கொள்வதற்கு முயலுகிற ஆத்ம சாதகன் சர்வ சக்திமானாக இருக்கிற ஈசுவரனிடத்து வணக்கமும், அடிபணிதலும் உடையவனாக இருந்து பழகுதல் முறைமை. மனதை அடக்கியாளுதற்கும், அதை ஒழுங்குப்

படுத்துதற்கும், கீழ்ப்படிதல் என்னும் சாதனம் முற்றிலும் அவசியமானது. பெரியோர் ஆதிக்கத்துக்கு உட்பட்டு ஒழுகத்தெரியாதவனுக்கு மனபரிபாகம் உண்டாகாது. முதலில் அடிபணிந்து பழகுபவனே பிறகு நன்கு ஆளவல்லவனாகிறான். பணிந்து நடந்துகொள்ளத் தெரியாதவன், ஆணைக்கும் அதிகாரத்துக்கும் உட்பட்டு நடந்துகொள்ளத் தெரியாதவன், ஆணை செலுத்தவோ மற்றவரைக் கட்டுப்பாட்டில் அடக்கிவைக்கவோ வல்லவன் ஆகான். பெரியோரைப் போற்றுதல் ஒன்றே தன்னை ஓர் ஆட்சிமுறைக்கு உட்படுத்துதற்கு உற்ற உபாயமாகும். பெரியவர்கள் அனைவரினும் பெரிய பொருளாயிருப்பவர் கடவுள். அவர் முன்னிலையில் அடங்கி ஒடுங்கியிருந்து அவருடைய பெருநெறிக்கு அடிபணிந்திருந்து பழகுதல் பக்தி சாதனத்துக்கு முற்றிலும் இன்றியமையாதது. பிறகு அந்தச் சாதனத்துக்கும் ஒரு முடிவு உண்டு. மனது முற்றிலும் கட்டுப்பாட்டில் அடங்கிப் பழகும் வரையில் அத்தகைய சாதனம் தேவை. மனதின்கண் என்றும் மாறாத பண்பாடு வந்தானபிறகு அடிபணிதல் என்னும் சாதனத்தை நிறுத்திவிடலாம். நிலைத்த மனப்பண்பாட்டின் விளைவாக மனது யாண்டும் சாந்தத்திலேயே ஊறியிருக்கும். அமைதியான அன்பு அதனிடத்துப்பொலிந்து கொண்டிருக்கும். தூய அன்பானது பிறகு தீவிரமான அன்பாக உருவெடுக்கிறது. தீவிரமான அன்பை ஆத்ம சாதகன் சுவானுபவத்தில் காண்கிறான். அத்தகைய பெருநிலையை யெட்டியான பிறகு அடக்கம், ஒடுக்கம், நல்லொழுக்கம் என்பனவற்றைப் பற்றிய பேச்சு எழவேண்டிய அவசியமில்லை. ஒழுக்கத்தையும், அடக்கத்தையும் கடந்துள்ள பெருநிலையைப் பக்தன் எட்டுகிறான். சாதனமாகச் செய்யவேண்டியதெல்லாம் அவனுக்குச் சாத்தியமாகிறது. நேர்மையும், நல்

லொழுக்கமும் யாவை என்பதை அவனுடைய பெருவாழ்வே விளக்குகிறது. அத்தகைய பரமபக்தன் கடவுளை எல்லாம் வல்லவர் என்றோ, மாட்சிமை தங்கியவரென்றோ எண்ணிறந்த விபூதிகளையுடையவரென்றோ, சிறப்புக்களனைத்துக்கும் உறைவிடம் என்றோ, அண்டங்களனைத்துக்கும் அதிபதி என்றோ, தேவர்களனைவருக்கும் மேலான மகாதேவர் என்றோ கருதவேண்டிய அவசியமில்லை. கடவுளிடத்துத் திகழும் அத்தகைய பெருமைகளையெல்லாம் தான் ஒருபொழுதும் கருத்தில் வாங்கிக்கொள்வதில்லையென்று பரமபக்தன் பகர்கிறான்.

கடவுளைத் தன்சொந்தக் குழந்தையாகக் கருதுவது வாத்ஸல்ய பாவனையின் இயல்பாகும். தன் குழந்தை தன்னை விட வலிவுமிக வாய்க்கப்பெற்றது என்றோ அது அஞ்சுதற்குரியதென்றோ கருதுவார் யாருமில்லை. தாயும் தந்தையும் தங்களுடைய குழந்தையினிடத்து பயபக்தி பூணுவதில்லை. குழந்தையினிடத்து அடக்கவொடுக்கத்தோடு கூடிய மரியாதையைக் காட்டுகிற இயல்பும் உண்டாவதில்லை. குழந்தை ஒன்றனிடத்திருந்து ஏதாவது உதவியையோ ஒத்தாசையையோ கேட்பதும் பெற்றோர்களுடைய போக்கு அன்று. தான் விரும்பியதை அவர்களிடமிருந்து ஏற்றுக்கொள்ளும் நிலையிலேயே சிசுவொன்று யாண்டும் இருந்து வருகிறது. பின்பு அன்பின் விளைவாகப் பெற்றோரும் எத்தனை முறை வேண்டுமானாலும் தங்களுடைய தேகங்களைப் பிள்ளையின் பொருட்டுப் பரித்தியாகம் செய்ய மனமுவந்து முன் வருகிறார்கள். தாங்கள் பெற்றெடுத்துள்ள ஒரு குழந்தையின் பொருட்டு ஆயிரம் பிறவிகளைப் பறிகொடுப்பதென்றாலும் அதற்குப் பெற்றோர்கள் ஆயத்தமாயிருக்கின்றனர். அத்தகைய ஒப்பற்ற இடத்தைச் சிசுவொன்று பெற்றோர்கள்

உள்ளத்தில் எளிதில் பெற்று வருகிறது. அப்பெருநிலையிலே வெறும் மானுடனாகப் பிறந்த குழந்தை ஒன்றை வைத்துக் கொள்ளுதற்கு மாறாகத் தெய்வத்தையே வைத்துக் கொள்ளுங்கால் அது வாத்ஸல்ய பாவனையாகிறது. ஈண்டுச் சங்கடம் ஒன்று உண்டாகிறது. பிறவாத, இறவாத கடவுளைக் குழந்தையாகக் கருதுவது எங்ஙனம் என்பதே அச்சங்கடமாகும். சமயங்கள் பல உலகில் உள. அவைகளுள் கடவுளே மானுடராக உலகில் அவதரித்து வருகிறார் என்னும் கோட்பாட்டில் நம்பிக்கை வைத்துள்ள சமயங்கள் இருக்கின்றன. அத்தகைய சமயங்களில் ஒழுகி வருகிறவர்களுக்குக் கடவுளையே குழந்தையாகக் கருதுதலில் சிரமம் ஒன்றுமில்லை. இயல்பாக அந்த எண்ணம் அவர்கள் உள்ளத்தில் ஊற்றெடுக்கிறது. கடவுள் மானுடராக அவதரிக்கிறார் என்னும் திரு அவதாரவாதம் இஸ்லாமிய மதத்தில் இல்லை. அம்மதத்தின்படி தேவதூதர்கள் உலகில் தோன்றி வருகிறார்கள். பரம்பொருளே மானுடனாகப் பிறப்பதில்லை. ஆதலால் இஸ்லாமியர்கள் கடவுளைக் குழந்தையாகக் கருதமாட்டார்கள். அத்தகைய எண்ணத்தில் அருவருப்புக் கொண்டவர்களாக அதினின்று அவர்கள் பின் வாங்குவார்கள். வாத்ஸல்ய பாவனைக்கு அவர்களின் மன அமைப்பு ஒருபொழுதும் இடந்தராது. ஆனால் கிறிஸ்துவர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் வாத்ஸல்யபாவனை மிக எளிதில் அமையக்கூடியது. ஏசுநாதரின் குழந்தைப் பருவத்தைக் கருத்தில் வாங்குவது கிறிஸ்தவர்களுக்கு மிக எளிது. தசரத ராமனை, பால ராமனாகக் கருதுதலில் ஹிந்துக்களுக்கு சங்கடம் ஒன்றுமில்லை. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை பால கிருஷ்ணனாகக் கருதுதலில் ஹிந்துக்களுக்கு இழுக்கு ஒன்றுமில்லை. இனி, ஹிந்துமதத்தில் சைவ சமயம், சாக்த சமயம்

என்பன இருக்கின்றன. சிவபெருமான் அவதாரம் எடுப்ப தில்லை. ஆதலால் அப்பரம்பொருளைப் பால சிவனைகக் கருது வது ஒரு பொழுதும் ஒவ்வாது. ஆனல் தெய்வீக நிலையில் அச்சிவனருக்குப் பிள்ளைகளாகக் கணபதியும், கார்த்திகேய னும் உருவெடுக்கலாயினர் என்பது கோட்பாடு. அக்கோட் பாட்டுக்கு ஒப்பச் சைவர்கள் கணபதியைப் பால கணபதி யாகவும், கார்த்திகேயனைப் பால சுப்பிரமணியனைகவும் குழந்தை வேலனைகவும் கொண்டாடுதலில் அவர்களுக்குக் குறையொன்றுமில்லை. அன்னை பராசக்தி திரும்பத் திரும்ப அவதாரங்கள் எடுத்து வருவதைப்பற்றி தேவி பாகவதம் தெளிவுறக் கூறுகிறது. பராசக்தியைப் பெண் குழந்தை யாகவோ, கன்னிகா குமாரியாகவோ, கன்னிகா பரமேசுவரி யாகவோ கருதிப் போற்றுவது ஹிந்துக்களின் ஐதிகம். பராசக்தியைப் பெண் குழந்தையாகப் போற்றி வழுத்து தற்குக் குமரகுருபர சுவாமிகள் இயற்றியுள்ள மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழே நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

ஹிந்துமதத்தைச் சேர்ந்த ஆடவர்களும் மகளிர்களும் தங்களைப் பால ராமனுடைய பெற்றோர்களாகவோ, பால கிருஷ்ணனின் பெற்றோர்களாகவோ, பால கணபதியின் பெற்றோர்களாகவோ, குழந்தை வேலனுடைய பெற்றோர் களாகவோ வைத்துக் கொள்ளுதலில் தடையொன்றுமில்லை. அது அவர்களுக்கு மிக எளிதில் அமையக்கூடியது. இனிமை யனைத்தும் அதில் அடங்கியிருக்கிறது. ஹிந்து மதத்தில் வாத்ஸல்யபாவனை ஓங்கியிருப்பது போன்று கிறிஸ்துவ மதத்தில் அது இன்னும் ஓங்கவில்லை. அன்னவர்களுக்கிடை யில் அது ஓங்குமாகில் பெருநன்மை விளைவிக்கும். கிறிஸ்து வத்தாய்மார்கள் தங்களை ஏசுநாதரின் தாய்மார்களாகக்கருத லாம். மேரி ஒருத்திதான் கர்த்தனுக்கு மாதா ஆனள் என்னும்

கோட்பாட்டோடு அவர்கள் நின்றுவிட வேண்டியதில்லை. மக்களே தங்களைத் தெய்வத்தின் தாய் தந்தையர்களாகக் கருதிக்கொள்ளுதலின் மூலம் மகிமைகளனைத்தும் அவர்களுக்கு வந்தமைகின்றன. மக்கள் எந்தச் சமயத்தை அனுஷ்டிப்பவர்களாக வேண்டுமானாலும் இருக்கலாம். பால வடிவம் தாங்கியுள்ள தெய்வத்தின் பெற்றோர்களாகத் தங்களைக் கருதிக் கொள்ளுவதாலேயே மேன்மைகளனைத்தும் அவர்களுக்கு உண்டாகின்றன. கடவுள் முன்னிலையில் அஞ்சியிருப்பது, ஒடுங்கியிருப்பது என்னும் துச்ச எண்ணங்கள் மானுட உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து கிடக்கின்றன. தலை வணங்கிப் போற்றுதல், சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல், பயபக்தி கொள்ளுதல் ஆகிய எண்ணங்கள் மானுட உள்ளத்தில் அசைக்க முடியாதவாறு நிலைத்திருக்கின்றன. மாட்சிமை தங்கியவர் கடவுள் என்றும், சிறப்புக்களனைத்துக்கும் உறைவிடம் கடவுளென்றும், போற்றி அடிபணிதற்குரியவர் கடவுளென்றும் உலகத்தவர் அவரைக் கருதி வருகின்றனர். இத்தகைய எண்ணங்களை மனத்தினின்று அகற்றுதல் எளிதன்று. ஆயினும் இப்புல்லிய எண்ணங்களையும், குருட்டு நம்பிக்கைகளையும் சித்தத்தினின்று சிதைத்தெடுத்து அப்புறப்படுத்தியே ஆகவேண்டும். அதற்கு வாத்ஸல்ய பாவனை ஒன்றே உற்ற உபாயமாகும்.

வாத்ஸல்ய பாவனைக்கு நிகரானதும், கிட்டத்தட்ட அதற்கு ஒப்பானதுமாகிய மற்றொரு சாதனமுறை பக்தி யோகத்தில் இருக்கிறது. அதற்கு புத்திரபாவம் என்று பெயர். சாதகன் ஒருவன் தன்னைக் கடவுளின் செல்வனைக் கருதுதல் இதன் நோக்கமாகும். அப்படிச் செல்வனைக் கருதுமிடத்தும் தன்னை ஒரு சிறு பாலகனைப் பாவித்துக் கொள்ளுதலில் சிறப்பு மிக உண்டு. மனபரிபாகத்தில் உயர்

நிலை எய்துகின்றவர்கள் பாலர் போன்று ஆகின்றனர். பித்தர் போன்றும், பேயர் போன்றும், பாலர் போன்றும் சான்றோர்கள் இருக்கிறார்களென்பது கோட்பாடு. சாதனத்தின் ஆரம்பதசையில் பெருமுயற்சியும், பேருக்கமும் நிறைந்திருக்கிறபொழுது மனிதன் பித்துப் பிடித்தவன் போன்றும், பேய் பிடித்தவன் போன்றும் நடந்துகொள்கிறான். பிறகு மனபரிபாகத்தால் நடுநிலை யெய்துங்கால் சாந்தமும், அமைதியும், இனிமையும் அவன்பால் வந்தமைகின்றன. அப்பொழுது அவன் ஒரு பாலகன் போன்று ஆகிறான். பக்தன் ஒருவன் தன்னைக் கடவுளின் குழந்தையாகக் கருதிக்கொள்ளுமிடத்து அவனுடைய தொல்லைகளெல்லாம் ஒழிந்து போகின்றன. கவலைக்கோ, அச்சத்துக்கோ இடம் கொடாததாக அவனுடைய உள்ளம் மாறுகிறது. தாயின் பராமரிப்பிலிருக்கும் சேய் எதைக் குறித்தும் கவலைப்படுவதில்லை; யாருக்கும் அஞ்சுவதில்லை. அப்படிக் கடவுளின் பராமரிப்பில் தன்னை வைத்துக்கொள்ளும் பக்தன் யாண்டும் கடவுளையே சார்ந்திருக்கிறான். குழந்தையொன்று உல்லாசமாகத் தாயின் மடியில் படுத்து விளையாடுகிறது. அவள் தோள்மீது ஏறி நிற்கிறது. அவள் முகத்தைக் காலால் உதைத்தும் விளையாடுகிறது. அப்படிச் செய்வது அடாத அபராதம் அல்லது குற்றம் என்று குழந்தை உணர்வதில்லை. தாய்க்கும் தனக்கும் இடையில் எந்தவிதமான வேற்றுமையையும் அது கற்பித்துக்கொள்வதில்லை. தன்னைக் கடவுளின் குழந்தையாக வைத்துக்கொள்ளும் பக்தனுக்கும் அதே மனநிலை வந்தமைகிறது. எத்திசையில் திரும்பி எப்பொருளைப் பார்த்தாலும் கடவுளின் சான்னித்தியமே அவனுக்குத் தோன்றுகிறது. கடவுளின் மடியில் தான் சதா தோய்ந்திருப்பதாக அவன் உணருகிறான். சிசுவொன்று தாயிடம்

எடுத்துக்கொள்ளும் சுதந்திரம் முழுவதையும் பக்தன் பகவானோடு எடுத்துக்கொள்கிறான். அவரோடு பூரித்து விளையாடிக்கொண்டிருப்பதைத் தவிர வேறு எச்செயலையும் அவன் அறிவதில்லை. வாழ்க்கையில் தனக்குப் பெரிய கடமைகள் இருக்கின்றனவென்றும் அவன் உணர்வதில்லை. முற்றிலும் தன்னை இறைவனிடம் ஒப்படைத்துவிட்டு இறைவனுடைய திருவருளால் தன் வாழ்வு நடைபெற்று வருகிறதென அவன் உணருகிறான். மனிதனை அல்லல் படுத்தும் நிகழ்ச்சிகள் பக்தனுக்கும் வந்தமைகின்றன. அத்தகைய நிகழ்ச்சிகளையும் இறைவனுடையவைகளாகவே பக்தன் கருதுகிறான். தாய் ஒருத்தி தன் குழந்தையை அடித்துத் துன்புறுத்துகின்ற பொழுது தன் தாயையே அத்துன்ப நிலையிலும் அக்குழந்தை சார்ந்திருக்கிறது. தாயின் மடியல்லாது குழந்தைக்குப் புகலிடம் வேறு ஏதும் இல்லை. அம்முறையில் தன்னைக் கடவுளுடைய குழந்தை என்று எண்ணிக்கொள்ளும் பக்தனுக்குத் துன்பங்கள் வந்து வாய்த்தகாலை கடவுள்தான் அத்துன்பங்களை விளைவித்திருக்கிறார் என்று பக்தன் மேலும் அக்கடவுளையே சார்ந்திருக்கிறான். தன்னை இறைவனுடைய குழந்தை என்று கருதுகிற பக்தன் முற்றிலும் இறைவனைச் சார்ந்திருப்பதற்கு அன்னியமாக வேறு எச்செயலையும் செய்ய முடியாது. சரணாகதியின் உச்சநிலை என்று இதை இயம்பலாம். புத்திர பாவத்தில் ஊறியிருக்கும் சிறப்பு இதுவேயாம்.

பிரேமை பக்தியை விளக்குதற்கு மானுட இயல்பில் பொதிந்துள்ள மற்றோர் இணக்கம் நல்ல எடுத்துக்காட்டு ஆகிறது. அதற்கு மதுரபாவம் என்று பெயர். இனிமையே வடிவெடுத்தது என அது பொருள்படுகிறது. மானுட இணக்கங்கள் யாவிலும் இது தலையாயது என்லாம். இவ்

வுலகிலே அன்பின் விளக்கமானது எத்துறையில் மகோன்னதம் அடைந்திருக்கிறதோ அத்துறையையே அடிப்படையாகக் கொண்டிருப்பது மதுரபாவம். மேலும் நாம் அறிந்துள்ள அன்புத்துறைகளுள் இந்த ஒரு துறையில்தான் மனிதனுடைய அன்பு வலிவு மிக வாய்க்கப்பெற்றதாகிறது. மனிதனுடைய இயல்பு முழுதையும் அடியோடு அசைத்துவிட வல்ல அன்பு யாது; அவனுடைய அமைப்பிலே அணுதோறும் ஊறி ஓடிக்கொண்டிருக்கும் அன்பு யாது; அவனைப் பைத்தியம் பிடித்தவன் போன்று ஆக்கவல்ல அன்பு யாது; தன்னையே முற்றிலும் மறந்துவிடும்படி மனிதனைத் தூண்டும் அன்பு யாது ; தன் சொரூபத்தை முற்றிலும் மறக்கும்படி மனிதனைத் தூண்டும் அன்பு யாது; உருமாறியவனாக மனிதனை அமைக்கவல்ல அன்பு யாது; ஒரு தேவகணமாகவோ அல்லது அசுரகணமாகவோ மனிதனை மாற்றியமைக்க வல்லதாயிருக்கும் அன்பு யாது ? தலைவனுக்கும் தலைவிக்கும் இடையிலே உண்டாகும் காதல் சொரூபமான அன்புக்கே இத்தகைய பேராற்றல் உண்டு. நாயகன் நாயகி என்னும் முறையிலே மக்களுக்கிடையில் பொலிகிற பேரன்பை பரம்பொருளிடத்துத் திருப்புவோமாகில் அதற்கு மதுரபாவம் என்று பெயர். அப்படிக் கடவுளிடத்து நம் அன்பை திருப்புங்கால் அவர் நமக்கு நாயகன் ஆகிறார். மக்களாகிய நாம் அனைவரும் அவருக்குகந்த நாயகிகளாக நம்மை வைத்துக்கொள்ள வேண்டும். உலகிலே ஜீவாத்மாக்களாகத் தோன்றியிருப்பவர்களுள் ஆண்பாலாக யாரையும் இக்கோட்பாடு அங்கீகரிப்பதில்லை. அண்டங்களனைத்துக்கும் நாயகனாயிருக்கும் பரம புருஷன் ஒருவரையே நாயகனாக அங்கீகரித்தல் மதுரபாவத்தின் போக்கு ஆகும். நாயகிகளாகிய நம் அனைவரின் பேரன்புக்கு இலக்காயிருக்கும்

நாயகன் அவர் ஒருவரேயாம். நம் அனைவரையும் மணந்துள்ள மணாளன் என்று அவரை நாம் கருதுதல் வேண்டும். மக்களுள் காதலன் ஒருவன் தனது அன்பு யாவையும் காதலியின்கண் சொரிகிறான். அதே விதத்தில் காதலி ஒருத்தி தன் அன்பு யாவையும் காதலனுக்கே சொந்தமாக்குகிறாள். இப்படி மக்களுக்கிடையில் வெளியாகும் அன்பைப் பெயர்த்தெடுத்து இறைவனிடம் செலுத்தவேண்டும்.

உலகிலே அன்பானது எத்தனையெத்தனையோ வடிவங்களை யெடுத்து வெளியாகிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அத்தனையத்தனை விதமான அன்புகளை வைத்துக்கொண்டு நாம் ஏதேதோ போக்குகளில் வெறுமனே விளையாடிக் கொண்டிருக்கிறோம். அப்படி நாம் வெளிப்படுத்தும் அன்பானது உண்மையில் பரமபுருஷனுக்கே உரியதாகிறது. அன்பின் வழி சென்று அவனை அடைதலே வாழ்க்கையின் குறிக்கோள் ஆகிறது. அன்பு என்னும் மகா நதியானது அகண்ட சச்சிதானந்தம் என்னும் கடலை நோக்கி ஓயாது பாய்ந்து கொண்டிருக்கிறது என்பதை தௌர்ப்பாக்கியத்துக்கு ஆளாயிருக்கும் மனிதன் அறிந்துகொள்வதில்லை. இப்பேருண்மையை அறிந்துகொள்ளாமையினால் மடமை நிறைந்த மனிதன் இந்த அன்புப் பிரவாகத்தை மானுடர் என்னும் சிறு சிறு பொம்மைகளிடத்துத் திருப்ப எத்தனிக்கிறான். குழந்தை ஒன்றனிடத்து ஆழ்ந்த அன்பு கொண்டிருப்பது மானுட இயல்பு ஆகும். ஆனால் இந்த ஆழ்ந்த அன்பைக் குழந்தை என்னும் ஒரு சிறு பொம்மையினிடத்து வைக்கலாகாது. அலாதியாக ஒரு குழந்தையினிடத்து உனது அன்பை கண்மூடித்தனமாக வைப்பாயாகில் அதன் விளைவாக நீ துன்பத்துக்கு ஆள் ஆவாய். அப்படி உனக்கு உண்டாகும் துன்பம் மற்றொரு விதத்தில் உனக்குப் பயன்படுகிறது.

நல்லறிவு பெறுதற்கு ஏதுவாயிருக்கும் அத்துன்பம் விழிப் படையும்படி உன்னைத் தூண்டுகிறது. உன்னிடத்து இயல் பாக அமைந்திருக்கும் அன்பை மானுட வடிவம் ஏதேனும் ஒன்றன்கண் கொடுத்துவிடுவாயாகில் அக்கொடையின் விளைவாக அது விரைவில் அல்லது நாளடைவில் உன்னிடத் துத் துன்பத்தையும் துயரத்தையும் உண்டுபண்ணும். நமது அன்பைப் பரம்பொருளுக்கே உரியதாக்க வேண்டும். அவர் அழிவற்றவர்; மாறாத்தன்மை வாய்ந்தவர். நாம் அன்பு நதி என்றால் அவர் அன்புக் கடலாயிருக்கிறார். அக்கடலிலே பொங்குதல் வடிதல் என்னும் முரண்பாட்டுச் செயல்கள் நிகழ்வதில்லை. இறைவனுக்குரிய அன்பை எடுத்து நாம் நிலையற்ற உயிர்களிடத்து வைப்பது ஒவ்வாது. இறைவ னிடத்துள்ள நேசமே உயிர்களிடத்து அன்பாகத் திகழ்வதில் தோஷமில்லை. கடலினுள் நதிகள் போய்ச் சேருவது போன்று கடவுள் என்னும் அன்புக்கடலினுள் உயிர்கள் என் னும் அன்பு நீர்ப்பெருக்குகள் ஓடிக் கலத்தலே முறை. மலைச் சாரலிலே வடிந்துவரும் ஒரு துளி நீரானது ஓர் ஓடையிலே, சிற்றாறிலே அல்லது பெரியாறிலே கலந்துகொள்ளுமாகில் பிறகு அதன் பயணம் இடைவழியில் தடைப்படுவதில்லை. ஒருதுளி நீரும் இறுதியில் கடலையே போய்ச் சேர்கிறது. நீர்த்திவலைகள் அனைத்துக்கும் கடல் இலக்காக இருப்பது போன்று உயிர்களனைத்துக்கும் இலக்காயிருப்பவர் கடவுள். நமது உள்ளத்தில் எழும் பலதரப்பட்ட கிளர்ச்சிகளை யும் உணர்ச்சிகளையும் கடவுளுக்கே உரியவைகளாக்க வேண்டும். சினந்துகொள்ள விரும்புவாயாகில் நீ கடவுள் மீது சினந்துகொள். உனது உள்ளன்புக்குரிய பரமனைக் கடிந்துகொள். உனது உயிர்த் தோழனாகிய இறைவனை நொந்துகொள். தீங்கு ஒன்றும் உனக்கு நேராதிருத்தல்

பொருட்டு இறைவனை யல்லாது வேறுயாரை நீ நொந்து கொள்ளமுடியும்? நீ கொள்ளும் சினத்தை மானுடன் ஒருவன் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ள மாட்டான். சினத்துக்குச் சினம் என்னும் எதிர்ச்செயல் அவனிடத்து உண்டாகும். இரண்டு மானுடர்க்கிடையில் ஒருவன் மற்றவனைக் கோபிப்பானுகில் மற்றவனும் தன் கோபத்தைக் காட்ட முந்துவான். ஏனென்றால் பொறுமையுடன் சினம் காத்தல் மானுடர் இயல்பன்று. உன் மணாளனும் உனது பேரன்புக்குரியவனும் இருக்கும் பரமனிடம் 'என் ஆருயிர்த்துணையே, என் முன் நீ ஏன் தோன்றாதிருக்கிறாய்? என்னை ஏன் நீ தனித்து விட்டு விட்டாய்?' இவ்வாறெல்லாம் முறையிடு. அப்படி இறைவனிடம் முறையிடுதலிலும் இன்பமொன்று உண்டு. உன் ஆருயிர்த்தலைவனாகிய இறைவனிடத்தல்லாது வேறு எங்கிருந்து நீ இன்பத்தைப் பெறமுடியும்? நீ பெறுகிற இன்பத்துக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பவர் அவர் ஒருவரே. இறைவனுக்குப் புறம்பாக ஜீவர்களைப் பிரித்தெடுத்து அவர்களை மதிப்புப் போட்டுப் பார்ப்போமாகில் அவர்கள் வெறும் மண்ணாங்கட்டி போன்றவர்கள். அத்தகையவர்களிடத்திருந்து பேரின்பத்தைப் பெறுவது எங்ஙனம்? கடைந்து தெள்ளியெடுத்த தெவிட்டாத பேரானந்தம் ஒன்றே நாம் நாடுதற்குரியதாகிறது. அது கடவுளிடத்தல்லாது வேறு எங்கே உளது? நமது உள்ளத்தில் பொங்கியெழும் உணர்வுகள், உருக்கங்கள் எல்லாம் இறைவனுக்கே உரியனவாகுக. அவரிடத்தில் சமர்ப்பித்தல் பொருட்டு அவ்வுணர்வுகள் நம் உள்ளத்தில் அமையப் பெற்றுள்ளன. இறைவனுக்குரிய உள்ளக் கசிவுகளைக் கீழ்நிலையிலிருக்கும் மற்ற உயிர்களுக்கு உரியனவாக்கினால் அவ்வுணர்வுகள் பாழ்படுகின்றன. மன நெகிழ்ச்சிகள் அனைத்துக்கும்

இலக்காயிருப்பவர் இறைவன். அவர்பால் அந்நெகிழ்ச்சிகளைச் செலுத்தினல் கீழ்த்தரமான நெகிழ்ச்சிகளும் தெய்வீகம் பொருந்திய மேல்தரமான நெகிழ்ச்சிகளாக உருமாறியமைகின்றன. உதாரணம் ஒன்று எடுத்துக்கொள்வோம். சினம் என்பது நம்மிடத்து உள்ள கீழ்த்தரமான மனக் கிளர்ச்சியாகும். இந்தச் சினத்தை இறைவனிடம் திருப்பி, 'என் தலைவா, என்னை ஏன் இன்னும் நீ ஆட்கொள்ளாதிருக்கிருய்' என்று கோபித்துக்கொள்வோமாகில் அக்கோபம் நமக்கு நலம் தருவதாகிறது. மானுட சரீரத்திலும் மனதிலும் நிலைபெற்றிருக்கிற ஆற்றல்கள் அனைத்தும் இறைவனிடத்து ஒப்படைப்பதற்கென்றே அமைந்துள்ளவைகளாம். அந்த ஆற்றல்கள் எப்படி வேண்டுமானலும் வெளிக் கிளம்பலாம். சினமாகவோ, சீற்றமாகவோ, பொருமையாகவோ, பகையாகவோ இன்னும் வேறு எப்படி வேண்டுமானலும் அவைகள் வடிவெடுக்கலாம். அவ்வியல்புகளையெல்லாம் இறைவன்பால் திருப்பினல் மனிதனுக்குக் கேடு ஒன்றும் வாராது. மானுடனுக்கும், மானுட இயல்புகளனைத்துக்கும் புகலிடமாயிருப்பவர் கடவுள் ஒருவரே. அன்பு வடிவங்களாக ஆனலும் சரி, கோபதாப வடிவங்களாக ஆனலும் சரி, எல்லா வடிவங்களிலும் நமது உள்ளத்தின்கண் உள்ள உணர்ச்சிகளைக் கடவுளுக்கே உரியவைகளாக ஆக்குதல் வேண்டும்.

ஜீவர்களுக்கு பிராணநாதன் அல்லது மணளனய் இருப்பவர் கடவுள் ஒருவரே. அவரையன்றி வேறு யாரை உள்ளன்போடு நேசிப்பது? அழகன் என்று அவரைத்தான் இயம்பவேண்டும். மேன்மைக்கு உறைவிடமாயிருப்பவரும் அவரே. அழகு வேறு தெய்வம் வேறு அல்ல. மேன்மை வேறு பரம்பொருள் வேறு அல்ல. அண்டங்க

ளனைத்திலும் அழகிலே இறைவனுக்கு மிக்கானுக யார் உளன்? அண்டங்களனைத்திலும் உயிர்களுக்கு மணாளன் ஆதற்கு மாண்பொருளாகிய இறைவனுக்கு மிக்கான் யார் இருக்கிறுன்? அண்டங்களனைத்திலும் அன்பைச் செலுத்து தற்குப் பரமனுக்குமேல் தகுதி வாய்ந்தவன் வேறு யார் இருக் கிறுன்? ஆகவே உயிர்களுக்குக் கணவனுகக் கடவுளே இருக் கட்டும். காதலுக்கு உரிய காந்தனுகக் கடவுளே இருக்கட்டும்.

மக்கள் ஒருவரோடு ஒருவர் வைக்கும் இணக்கங்களுள் தலையாயதாயிருப்பது ஒருவனுக்கும் ஒருத்திக்குமிடையில் கணவன் மனைவி என்னும் முறைமையில் உண்டாகும் இணக்கமாம். இது தலையாயதாயிருப்பதால் தலைவன் தலைவி இணக்கம் என்னும் பெயர் பெற்றுள்ளது. தோழன், தொண் டன், மைந்தன் போன்ற இணக்கங்களில் சில சிலர்க்கு அமைந்தும் அமையாதும் போய்விடுவதுண்டு. அப்படி அமைகின்றவிடத்தும் ஆயுட்கால முழுதிலும் அவ்விணக்கங் கள் நிலைபெற்றிருக்கும் என்று உறுதிகூறுதற்கு இடமில்லை. ஆனுல் நாயகன் நாயகி என்ற இணக்கம் உண்டாகின்ற பொழுதே அதை உலகத்தவர் ஒன்றுகூடி பெருமைப்படுத்து கின்றனர். மணம்புரிந்து கொள்ளுதற்கு உற்ருரும் ஊராரும் ஆதரவுகொடுக்கின்றனர். வாழ்க்கையின் நோக்கம் விவாகம் செய்துகொள்ளுதலில் உயர்நிலை அடைந்துவிட்டது என்றும் உலகத்தவர் இயம்புகின்றனர். மணம் புரிந்துகொள்ளுதலில் உண்டாகிற இணக்கம் மரணம் வந்து பிரித்துவைக்கும் வரையில் தொடர்ந்து நிலைபெற்றிருந்து வருகிறது. விவாக ரத்து செய்துகொள்ளுகிறவர்கள் மேன்மக்களாகக் கருதப் படுவதில்லை. இல்வாழ்க்கையை இனிது நிறைவேற்றுகின்ற வர்களையே மேன்மக்களாக உலகம் அங்கீகரிக்கிறது. கணவ னும் மனைவியும் ஒத்து வாழுகிற வாழ்க்கையில் ஏனைய நல்

லிணக்கங்களெல்லாம் இயல்பாக இடம்பெற்றுவிடுகின்றன. தாஸ்ய பாவம் அல்லது ஆண்டவன் தொண்டன் என்பதை எடுத்துக்கொள்வோம். நல்ல கணவன் மனைவிக்கு மனம் உவந்து தொண்டுபுரிகிருன். நல்ல மனைவி கணவனுக்கு உள்ளன்போடும் ஊக்கத்தோடும் பணிவிடை செய்கிருள். ஆக, தாஸ்யபாவம் மதுரபாவத்தில் அடங்கிவிடுகிறது. இனி, தோழமை அல்லது சகாபாவத்தை ஆராய்வோம். தக்க தருணத்தில் தோழன் ஒருவன் அல்லது தோழி ஒருத்தி துணைபுரியவோ பொருந்தாத செயலை முன்னிட்டு எச்சரிக்கை செய்யவோ, தகாத செயலை முன்னிட்டுத் தடை செய்யவோ தானுக முன் வருவதுண்டு. கணவனும் மனைவியும் இம் முறையிலே நடந்துகொள்வதை சர்வ சாதாரணமாகக் காண் கிறோம். கொஞ்சம் வயது வந்தபிறகு பெற்றெடுத்த குழந்தையினிடத்து வைக்கின்ற வாத்ஸல்ய பாவத்தையே கணவன் மனைவியிடம் வைப்பதையும் மனைவி கணவனிடத் தில் வைப்பதையும் காணலாம். ஆக சகாபாவம், வாத்ஸல்ய பாவம் முதலியன மதுர பாவத்தினுள் வந்து அடங்கிவிடு கின்றன. இந்த நல்லிணக்கத்தைத் தெய்வத்திடத்து வைப்பதே மதுரபாவம் என்னும் பெயர் பெறுகிறது. கட வுளைக் கணவனுக வைத்து ஒவ்வோர் உயிரும் தன்னைக் கடவுளின் மனைவியாகக் கருதுதலில் இனிமை அனைத்தும் நிறைந்திருக்கிறது.

உயிர்களுக்கும் இறைவனுக்கும் இடையிலுள்ள பேரிணக்கத்தையும் பேரன்பையும் வெளிப்படுத்துதற்கு ஏற்ற பாடல்களைப் பக்தர்கள் பாடுகிருர்கள். அவ்வன்பைத் தெரிவிப்பதற்கேற்ற சொற்களையும் அவர்கள் தேடியெடுத் தாகவேண்டியிருக்கிறது. உலக இயல்பிலே காதலர்கள் கையாண்டுவருகிற சொற்களே மிகப் பொருத்தமானவைகள்

எனக் கருதிக் கடவுள் காதலிலும் அதே சொற்களைப் பக்தர் கள் கையாண்டிருக்கிறார்கள். சொற்கள் உலகத்தவர்களிட மிருக்கும் அன்புக்கு ஏற்றவைகள் எனினும் அச்சொற்கள் மூலமாகவே, தூய்மையே வடிவெடுத்துள்ள தெய்வீகக் காதலை பக்தர்கள் வெளிப்படுத்தியிருக்கின்றனர். ஆனால் பக்தர்களின் புனிதமான மனநிலையை மடையர்கள் அறிந்து கொள்வதில்லை; அவர்கள் ஒருபொழுதும் அறிந்துகொள்ள மாட்டார்கள். ஞானக்கண்கொண்டு பக்தர்கள் கண்ட காட்சியை ஊனக்கண்கொண்டு ஏனையவர்கள் உடல்சம்பந்த மான இணக்கமாகக் காண்கின்றனர். அருள் நிலையினின்று ஊற்றெடுத்துவரும் பேரன்பு உண்டுபண்ணுகிற உள்ளக் கொதிப்பையும் அருள் பித்தத்தையும் உலகத்தவர்கள் அறிந்துகொள்ளமாட்டார்கள். உடல் வாழ்க்கையிலேயே உழன்றுகிடக்கும் அன்னவர்கள் தெய்வீகக்காதலை எங்ஙனம் அறிந்துகொள்ள முடியும்? "பேரன்பின் அதிரசமே! உன்னு டைய உதடுகள் கொண்டு முத்தம் ஒன்று தாராய். உன்னால் முத்தமிடப் பெறுகின்ற உயிர்க்கு உன்மீது காதல் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போகிறது. துயரங்க ளனைத்தும் அவ்வுயிரிடத்திருந்து ஒழிந்துபோகின்றன. உனது பேர் உணர்விலே உலகப் பொருள்களைப்பற்றிய சிறிய உணர்வுகள் அனைத்தும் அடிபட்டுப்போகின்றன." கடவுள் என்னும் மணாளனிடத்திருந்து கிடைக்கக் கூடிய அருள் முத்தத்துக்கு ஆசைகொண்டிரு. அன்புக் கடவு ளின் உதடுகள் தீண்டுவதால் பக்தனுக்குப் பிரேமைப் பைத்தியம் பிடிக்கிறது. அப் பித்தத்தால் அவனும் தெய்வ சொரூபமாக மாறுகிறான். அத்தகைய முத்தம் ஒன்றை அடையப்பெற்ற பக்தனுக்குப் பிரபஞ்சம் முழுதும் உருமாறுகிறது. உலகங்கள் அடிபட்டுப் போகின்றன.

சூரியர்களும் சந்திரர்களும் மறைந்துபோகின்றனர். அண்டங்களே உருகி வடிவங்களற்றவைகளாய் விளங்குகின்றன. அகண்டமாயுள்ள அன்புக் கடவுளே எஞ்சியிருக்கிறார். பக்திப் பித்தத்தினின்று வரும் பரிபூரணநிலை அதுவேயாம்.

பிரேமை பக்தியில் ஊறியிருக்கும் ஆடவர்களுக்குங்கூட பெண்தன்மை படிப்படியாக வந்தமைகிறது. அப்படிப் பெண்தன்மை முன்னணிக்கு வந்திருக்கும்பொழுது மதுர பாவம் அல்லது நாயகன் நாயகி இணக்கத்தை வளர்ப்பது மிக எளிதாகிறது. தமிழ் நாட்டில் தாம் ஆடவராயிருந்தும் தம்மைப் பெண்பாலின் நிலையில் வைத்து மதுரபாவ சாதனை செய்தவர் மாணிக்கவாசகர். அவருடைய நூலில் அதற்கேற்ற சான்றுகளைக் காணலாம். பெண்பால் ஒருத்தி மதுர பாவத்தில் முடிவான நிலையையெட்டியதற்கு சான்றாய் இருப்பவள் ஆண்டாள். இத்தகைய சீரிய சாதனமுறையைப் பாமரர்க்கிடையில் எடுத்து வழங்குவது பொருந்தாது. பாமரரில் பெரும்பான்மையோர் மனத்தூய்மையில் மாணிக்க வாசகர் போன்றும் ஆண்டாள் போன்றும் மேல் நிலைக்கு வரமுடியாது. ஆனால் வட இந்தியாவில் பிருந்தாவனத்துக்குப் பக்கத்தில் வைஷ்ணவர்களுள் ஒரு கூட்டத்தார் நாயகன் நாயகி முறையில் கடவுள் வழிபாடு செய்ய முயலுகின்றனர். அம்முயற்சியில் வழுவி துராசாரத்தில் ஈடுபடுபவர்களையும் அக்கூட்டத்தில் காணலாம்.

மற்றும் ஒரு விஷயம். அருள் காதல் பிடித்துள்ள பக்தன் ஒருவன் நாயகன் நாயகி முறையில் அன்புகொள்ளுவதோடு நின்றுவிடுவதில்லை. கணவனும் மனைவியும் பூணுகிற அன்பில் அவன் நாடுகிறபடி தீவிரமான பைத்தியம் உருவெடுப்பதில்லை. பக்தன் ஒருவன் முதலில் கடவுளை மணந்துகொண்டமனைவியின் நிலையில் தன்னை வைத்துக்கொள்கிறான். அந்த

இணக்கத்தில் பேரன்பு பெருகிய பிறகு அது பைத்தியம் பிடித்த அன்பாக மாறவேண்டுமென்று விரும்புகிறான். அதன் பொருட்டு அந்த ஆத்மசாதகன் தன்னை ஒரு சோர நாயகியின் அல்லது களவுக்காதலியின் நிலையில் தன்னை வைத்துக்கொள் கிறான். ஏனென்றால் களவுக் காதலிலே உறுதிப்பாடும் வேகம் நிறைந்த ஆற்றலும் உண்டு. அது ஒழுக்கம் வழுவிய நிலை என்பதல்ல. பிரேமை பக்தர்கள் தங்கள் கருத்திலே வைத்திருக்கும் களவுக் காதலில் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. களவுக்காதல் கொண்டாடுதற்கு இடைஞ்சல்கள் எவ்வளவுக் கெவ்வளவு அதிகரிக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு அந்தக் காதலில் ஆர்வம் மிகத் ததும்பியதாகிறது. கணவ னும் மனைவியும் கொள்ளுகிற காதல் அமைதியானது. அக் காதலுக்கு இடைஞ்சல் ஊட்டுவார் யாருமில்லை. அந்த அமைதியான மனநிலை பக்திப் பிரவாகத்துக்குப் போதாது. அதில் கொந்தளிப்பு ஏற்படவேண்டும். விதிர்விதிர்ப்பை முன்னிட்டு பக்தர்கள் இளம் மங்கை ஒருத்தியின் நிலையில் தங்களை வைத்துக்கொள்கிறார்கள். தன் களவுக் காதலன் மீது அவள் அன்பு மிக வைக்கிறாள். அப்படி அவள் செய் வது பொருந்தாது என்று அவளுடைய அன்னையோ, பிதாவோ, கணவனோ தடை செய்கிறார். உற்றாரிடமிருந்து தடை அதிகரித்து வருமளவு சோர நாயகனிடத்து அவ ளுடைய காதலும் அதிகரித்து வருகிறது. கடவுளிடத்து பக்தன் வேண்டுகிற அருட் காதலும் அத்தகையதே. பிருந் தாவனத்திலே கண்ணனைக் கோபிமார்கள் எத்தகைய அருள் பித்தம் பிடித்த அன்புடன் நேசித்தார்கள் என்பதை மக்க ளுடைய மொழிகொண்டு விளக்க இயலாது. கண்ணனுடைய குரலைக் கேட்டதும் பாக்யவதிகளாகிய கோபிமார்கள் அவனைச் சந்தித்தல் பொருட்டு விரைந்தோடினர். அவனை

நாடி ஓடியபொழுது அவர்கள் ஏனைய யாவையும் மறந்து விட்டனர். இவ்வுலகத்தையும் அதிலுள்ள பந்தபாசங்களையும் கடமைகளையும் உலகம் தருகிற இன்பதுன்பங்களையும் அறவே மறந்துவிட்டுத் தங்கள் அருள் காதலனை நாடி அவர்கள் கடிது ஓடினார்கள். அந்தப் பாரமார்த்திகப் பேரன்பை உலக பந்தத்திலே உழலும் யார்தான் அறிந்துகொள்ள முடியும்! ஓ மானுடா, நீ பாரமார்த்திகப் பேரன்பைப்பற்றிப் பேசுகிறாய். அதேவேளையில் இவ்வுலகின் வெளிப்பகட்டுகள் அனைத்திடத்தும் நீ கருத்தைச் செலுத்துபவனாய் இருக்கிறாய். அருள் காதலிலே நீ உண்மையாக ஊக்கம் கொண்டிருப்பவனா? "ராமன் உள்ள இடத்தில் காமனுக்கு இடமில்லை. பின்பு காமன் இருக்கும் இடத்தில் ராமனுக்கு இடமில்லை. ராமனும் காமனும் சேர்ந்திருப்பது ஒருபொழுதும் ஆகாத காரியம். வெளிச்சமும் இருளும் சேர்ந்திருக்க மாட்டா." யாரிடத்துத் தெய்விகப்பித்து ஓங்குகிறதோ அவர்களிடத்துக் கீழான உலகப்பற்றுகள் தாமாக மறைந்துபட்டுப்போகின்றன.



# 20. முடிவுரை

பிரேமை பக்தியின் சிகரத்தை எட்டுகிற பக்தன் ஒருவன் தத்துவ விசாரம் செய்வதில்லை. சாஸ்திர ஆராய்ச்சியில் அவன் மனதைச் செலுத்துவதில்லை. தர்சனங்கள், சாஸ்திரங்கள் என்பவைகளையெல்லாம் அவன் எட்டஎறிந்து விடுகிறான். அந்நூல்களைப்பற்றிய எண்ணம் அவனுக்குச் சிறிதேனும் உண்டாவதில்லை. முக்தி, ஜன்ம சாபல்யம், உய்வு அடைதல், பிரம்ம சாக்ஷாத்காரம் பண்ணுதல்—இவை போன்ற குறிக்கோள்களும் அவனுக்குப் பொருளற்றவைகள் ஆகின்றன. இறைவனிடத்திருந்து ஊற்றெடுத்து வரும் பேரன்பை அனுபவித்துக்கொண்டிருப்பதற்கிடையில் முக்தியடையவேண்டுமென்று அவாவுறுபவன் யார்தான் உளன்? "இறைவா, எனக்குச் செல்வம் வேண்டாம். உற்றாரை யான் வேண்டேன், கட்டழகைப்பற்றி எனக்குக் கவலையில்லை, கல்வியைப்பற்றி எனக்குக் கவலையில்லை, முக்தியிலும் நான் மனம் வைக்கேன், திரும்பத் திரும்பப் பிறவிகள் பல எடுக்க நான் ஆயத்தமாயிருக்கிறேன். பின்பு தாம் மட்டும் யாண்டும் எனது பேரன்பாக இருப்பீராக! என்றென்றும் தாம் எனது பேரன்பாகப் பொலிந்துகொண்டிருப்பீராக!" என்று பக்தன் ஒருவன் பிரார்த்தனை பண்ணுகிறான். "நான் சீனியாக விரும்பவில்லை. சீனியைச் சுவைக்க விரும்புகிறேன். நான் இறைவனில் இரண்டறக் கலக்க விரும்புவதில்லை. இறைவனிடத்து அன்பு பூண்டிருக்கவே அவாவுறுகிறேன்." இப்படி பக்தன் பகர்கிறான். அவனுடைய மனநிலை இத்தகையதாயிருப்பதால் முக்தியைப்பற்றியோ, பரம்பொருளில் ஒன்றித்திருப்பதைப்பற்றியோ, அவன் அவாவுறுவது எங்ஙனம்? "சொரூபத்தில் பகவானும் நானும் ஒன்றே என்பதை நான் அறிந்திருக்கலாம். ஆயினும்

என்னை நான் அவரிடத்திருந்து பிரித்துவைத்து அவருடைய பேரன்பை ஓயாது நுகர்ந்துகொண்டிருப்பேன்.'' இதுவே பக்தன் ஒருவன் கொண்டுள்ள கொள்கையாம். பேரன்பில் யாண்டும் ஊறிக்கிடப்பது ஒன்றே பரமானந்தத்தைத் தரு கிறது. அன்புக் கடவுளிடத்திருந்து வரும் பேரன்பை நுகர் தல் பொருட்டு யார்தான் ஓராயிரம் தடவை, அல்லது அதற்குமேல் கைகளிலும், கால்களிலும் தளையுண்டு கிடக்க மறுப்பர்! பேரன்பு ஒன்றைத் தவிர வேறு எதையும் பக்தன் பொருள்படுத்துவதில்லை. இறைவனிடத்துத் தான் அன்பு கொள்ளுவதும் இறைவனுடைய அன்புக்குத் தான் பாத்திர மாவதும் அவனுக்குப் போதுமானது. கடல் பொங்கும் பொழுது நதியை எதிர்த்து மேல்நோக்கி அது ஓடுவது போன்று இருக்கிறது பக்தன் கடவுளிடத்துக்கொண்டுள்ள அன்பு. உலகத்தவர்களுடைய அன்பு கீழான பொருள்களை நாடிக் கீழ்மையில் இறங்கி வருகிறது. ஆனல் பக்தனுடைய அன்போ பகவானை நாடி மேன்மையிலேயே மேலேறிக் கொண்டிருக்கிறது. அத்தகைய பக்தனைப் பித்தன் என்று உலகம் கூறுகிறது. பயித்தியக்காரன் என்று உலகத்தவர் கள் பெயரிட்டு அழைத்த பரமஹம்ஸர் ஒருவரைப்பற்றி நான் நன்கு அறிவேன். உலகத்தவர் கூற்றுக்கு அவர் கொடுத்த விடையாவது: ''அன்பர்காள், இவ்வுலகம் முழு தும் ஒரு பயித்தியக்கார ஆஸ்பத்திரியாகும். உலகத்தவர் களுள் உலகப்பற்றிலே சிலர் பயித்தியம் கொள்கின்றனர்; பேரிலே சிலர் பயித்தியம் கொள்கின்றனர்; புகழிலே சிலர் பயித்தியம் கொள்கின்றனர்; பொருளிலே சிலர் பயித்தியம் கொள்கின்றனர்; ஜன்ம சாபல்யம் ஆவதிலும், சொர்க்கத் துக்குப் போவதிலும் சிலர் பயித்தியம் கொள்கின்றனர்; இப்பெரிய பயித்தியக்கார ஆஸ்பத்திரியில் நானும் ஒரு

பயித்தியமே! பகவானைக் குறித்து நான் பயித்தியம்கொண்டிருக்கிறேன். நீயும் பித்தன், நானும் பித்தன், பயித்தியக்காரர்களுடைய பயித்தியங்களுள் நான் கொண்டுள்ள பயித்தியமே மற்ற பயித்தியங்களையெல்லாம்விட மேலானதென நான் கருதுகிறேன்.'' அன்பினில் உருகி பித்தம் பிடித்தவன் போன்று ஆவது உண்மையான பக்தனுடைய இயல்பு ஆகும். கடவுள் பித்தம் நீங்கலாக ஏனைய எண்ணங்களெல்லாம் அவனுடைய உள்ளத்தினின்று அறவே அகன்று போகின்றன. அண்டங்கள் யாவும் பேரன்பிலேயே ஊறிக்கிடப்பவைகளாக பக்தன் உணர்கிறான். பேர் அன்புக் காட்சி ஒன்றையே அண்டங்கள் யாவும் அவனுக்கு அளிக்கின்றன. இத்தகைய பேரன்பு அவனுடைய உள்ளத்திலே உதிக்குங்கால் அவன் நிரந்தர பாக்கியத்தையும் நித்தியானந்தத்தையும் பெறுகிறான். உலகப்பற்று என்னும் நோய்க்கு நாம் ஆளாயிருக்கிறோம். இந்த நோயை நீக்குதற்கு இறைவனிடத்து நாம் கொள்ளும் பேரன்பு ஒன்றே நல்ல மருந்து ஆகும். பிரேமைபக்தி வருங்கால் துச்சமான ஆசையும், சுயநலமும் மறைந்துபட்டுப் போகின்றன. இறைவனுடைய சாந்நித்தியத்திலேயே அவருடைய பக்தன் இருக்கிறான். முன்பு அவனைப் பிடித்துவாட்டிய பயனற்ற கீழ்த்தரமான ஆசைகளெல்லாம் இப்பொழுது அவனை விட்டு அறவே அகலுகின்றன. அன்புக் கடவுளில் ஊறியிருப்பது ஒன்றைமட்டும் அவன் உணர்கிறான்.

பக்தி நெறியிலே செல்லும் நாம் துவைத மதத்தை அனுஷ்டிப்பவர்களாக நமது சாதனத்தைத் துவக்கவேண்டும். துவைத மதப்படி கடவுள் நமக்குப் புறம்பானவர். அவர் முன்னிலையிலிருக்கும் தனித்தனி வியக்திகளாக நம்மை நாம் வைத்துக்கொள்கிறோம். பின்பு தெய்வத்துக்கும் நமக்கும்

இடையில் பக்தி உருவெடுக்கிறது. பக்தி நெறியிலே நாம் கடவுளை நோக்கிச் செல்கிறோம். கடவுளும் கருணைகூர்ந்து நமக்கு அருகில் வருபவராகிறார். அப்படிக் கடவுளோடு இணக்கம் வைக்கும் நாம் வாழ்க்கையிலே கொண்டுள்ள எல்லாவிதமான இணக்கங்களையும் கடவுளிடத்து செலுத்து கிறோம். தந்தை, தாய், மகவு, தோழன், தலைவன், காதலன் போன்ற பலதரப்பட்ட இணக்கங்கள் உலகவாழ்வில் அமைந் திருக்கின்றன. அத்தனைவிதமான இணக்கங்களையெல்லாம் கடவுள்பால் வைத்து ஒழுகுவது நமது குறிக்கோள் ஆகிறது. பக்தனுக்குக் கடவுள் தாமே இத்தனைவிதமான உறவுகளிலே உறைந்திருக்கிறார். இப்படிக் கடவுளோடு தொடர்வு கொள்ளுகிற பக்தன் பகவானிடத்துத் தன்னை முற்றிலுமே கொடுத்துவிடுங்கால் பக்திநெறியின் முடிவுக்கு அவன் வந்து சேர்கிறான். சுயநலத்தில் அன்பு கொள்கிறவர்களாக நாம் வாழ்க்கையைத் துவக்குகிறோம். சுயநலம் ஓங்கியிருப்பதால் அன்பையும் சுயநலம் உடையதாக மாற்றியமைப்பது நமது இயல்பு. இப்படி சுயநலத்தில் துவக்கிய அன்பு படிப்படி யாக உருமாறியமைகிறது. இறைவனுடைய பேரன்பு என் னும் சுயஞ்ஜோதியில் சிறிய அன்புகளும் சுயநலங்களும் எல்லாம் ஒடுங்கிப் போகின்றன. அகண்டமாயுள்ள பேரன்புத் தெய்வம் ஒருவரே எஞ்சியிருக்கிறார். இந்தப் பேரன்புப் பரஞ்சோதியில் மனிதனும் தனது வியக்தியை இழக்கிறான். பக்தியும், பகவானும், பக்தனும் எல்லாம் ஒன்றுபட்டு ஒளிர்கின்றன. அன்பு சொரூபமாய், அழகு சொரூபமாய் பரமன் ஒருவரே யாண்டும் இருக்கிறார்.

# பக்தனுடைய பேரியல்புகள்

## பகவத்கீதை அத். 12 – சுலோ 13, 14.

அத்வேஷ்டா ஸர்வபூதானும் மைத்ர: கருண ஏவ ச ।
நிர்மமோ நிரஹங்கார: ஸமது:கஸுக: க்ஷமீ ॥ 13

ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஸ்சய: ।
மய்யர்பிதமனோபுத்திர்யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ 14

*உயிர் அனைத்திடத்தும் வெறுப்பின்றி, நட்பும் கருணையும் உடையவனாய், மமகாரம் அகங்காரம் அற்று, இன்ப துன்பங்களைச் சமமாய்க் கருதி, பொறுமை படைத்து, எப்பொழுதும் சந்தோஷமாயிருப்பவன், யோகியாய், தன்னடக்க முடையவனாய், திட நிச்சய முள்ளவனாய், என்னிடத்து மனம் புத்தியை சமர்ப்பித்தவனாய் யார் என் பக்தனாகிருனோ அவன் எனக்குப் பிரியமானவன். 13-14*

வெறுப்பானது வேற்றுமையை வளர்க்கிறது; உடலெங்கும் விஷத்தை உண்டுபண்ணுகிறது. ஆதலால் வெறுப்பு நல்வாழ்க்கைக்கு உதவாது. வெறுப்பு அற்றிருந்தால் மட்டும் போதாது. ஜடப்பொருள்கள் வெறுப்பதில்லை. உயிர் வாழ்பவன் எல்லா உயிர்களிடத்தும் நட்புக் கொள்ள வேண்டும். "அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு." ஆக, நட்பே உயிர்களை இணைக்கின்றது. பிறரைத் தன் காரியத்துக்குப் பயன் படுத்திக் கொள்ளுதற்கு ஒருவன் உறவாடலாம். அது

பொருந்தாது. தன் வாழ்க்கை பிறருக்குப் பயன்படும்படி செய்யவேண்டும். அப்பொழுதே அது கருணை எனப் பெயர் பெறுகிறது. பிறரிடத்துக் கருணை காட்டுவதால் தன் பொருளுக்கே நஷ்டம் வரலாம். அதைப் பொருள்படுத்தாத நிலை மமகாரம் அற்ற நிலையாம். எனது என்ற எண்ணம் ஒழிந்து பட்டுப்போகிறது. உடல் அபிமானம் அஹங்காரம் என்று சொல்லப்படுகிறது. கருணையின் மேலீட்டால் பக்தன் ஒருவனுக்கு அஹங்காரம் அறவே அகன்று விடுகிறது. தன் பொருள், தன் உடல் வாழ்க்கை இவைகளை மதியாமையினால் ஒருவனுக்கு இன்பமே வந்தமையலாம் அல்லது துன்பமே வந்தமையலாம். அவைகளை இன்ப துன்பமாக அவன் பாகுபடுத்துவதில்லை. தனக்குற்ற துன்பத்தைச் சகித்துக்கொண்டு துன்பம் செய்தவனிடத்துப் பொருமை பூணலாம். பக்தன் ஒருவன் அப்படிப் பொருமை கொள்வதில்லை. தன்னைத்தானே மன்னிப்பது போன்று மற்றவர்களையும் மன்னிக்கிறான். துன்பத்தைச் சகித்தல் ஒருவித எதிர்மறை நிலையாகிறது. பக்தனோ "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்ற கோட்பாட்டின்படி சந்தோஷமுடையவனாயிருக்கிறான். வாழ்க்கையில் அடக்கமும் ஒழுங்குப்பாடும் நன்கு அமைந்திருப்பதால் அவன் யோகியாகிறான். பாரமார்த்திக விஷயத்தில் அவனுக்குச் சந்தேகம் கிடையவே கிடையாது. அதைப்பற்றி அவனுக்கு உறுதியான நிச்சய புத்தியிருக்கிறது. யோகத்தால் தான் பெற்ற தெளிய மனதையும் புத்தியையும் அவன் கடவுளுக்கென்றே ஒப்படைக்கிறான். இங்ஙனம் பகவானிடத்து பக்தி பண்ணுபவனே அவனுக்கு முற்றும் உவந்த தோழனாகிறான்.

---

விவேகானந்த சுவாமிகள் இயற்றிய

# கர்மயோக விளக்கம்

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

வினை வாழ்வை வகைப்படுத்துகிறது. வினையாற்றாது எவ்வுயிரும் இருப்பதில்லை. அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே. முறையாகக் கடமையைச் செய்தால் நாம் கடவுளின் சமீபத்துக்கு வந்துவிடுகிறோம். உலகுக்கு உதவி செய்வது நமக்கு உதவியாகிறது. பற்று ஒழியுமளவு ஜீவபோதம் ஒழிகிறது. முக்தி கர்மயோகத்தின் குறிக்கோள். இதைப் பல படித்தரங்களில் விளக்குகிறது இந்நூல்.

கிரௌன் சைஸ்

**பக்கங்கள் 400** **விலை ரூ. 7-00**

(தபாற் கட்டணம் ரூ. 2-50)

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை 639 115 திருச்சி ஜில்லா

